கோலாலம்பூர் நகரத்தார்

அருள்மிகு

# ஸ்ரீ தண்டாயுதபாணி கோவில்



## திருக்குட நன்னீராட்டு விழா



# மலர்

நந்தன ஆண்டு தை திங்கள் 19 (1-2-2013)

அருள்மிகு

# ஸ்ரீ தண்டாயுதபாணி கோவில்



## திருக்குட நன்னீராட்டு விழா

# மலர்



உ
சிவமயம்



# நன்றி மலர்கள்

கும்பாபிஷேக மலரின் மணத்தை நுகரக் காத்திருக்கும் அனைவருக்கும் வணக்கம். கோலாலாம்பூர், ஜாலான் ஈப்போவில், எழில்மிகு ஆலயத்தில், நூறு ஆண்டுகளுக்கும் மேலாகக் குடிகொண்டு, நம் எல்லோரையும் ஏற்றமுற வாழவைக்கும் அருள்மிகு ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமியின் கிருபையால், நந்தன ஆண்டு தைத்திங்கள் 19ஆம் நாள் (ஆங்கிலம் 01-02-2013) வெள்ளிக்கிழமை நடைபெறும் திருக்குடநீராட்டு விழாவினை ஒட்டி இந்த மலர் வெளியீடு காண்கிறது.

இந்த திருக்குடநீராட்டு விழாவிற்குத் தலைமையேற்று, சீரும் சிறப்புடன் நடைபெற உதவிய, தமிழகம் பிள்ளையார்பட்டி டாக்டர் பிச்சைக் குருக்கள் அவர்களுக்கும், மலருக்கு ஆசியுரை வழங்கிய தமிழகம் திருக்கயிலாய பரம்பரை திருவாடுதுறை ஆதீனம் 24வது குரு மகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ அம்பலவான தேசிக பரமாச்சாரிய சுவாமிகள், தருமையாதீனம் முனைவர் ஸ்ரீமத் மௌன குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள், திருப்பனந்தாள் கயிலை மாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமி தம்பிரான் சுவாமிகள், திருப்பேரூராதீனம் கயிலை மாமுனிவர் வித்துவான் சாந்தலிங்க இராமசாமியடிகள், திருவண்ணாமலை ஆதீனம் திருவருள் திருதெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக பரமாசாரிய சுவாமிகள், கோவிலூர் மடாலய ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் மற்றும் நம் நாட்டின் திருமுருகன் திருவாக்கு திருபீடம் பாலயோகி சுவாமிகள், தெய்வீக வாழ்க்கைச் சங்கம் சுவாமி குகபக்தானந்தா அவர்களுக்கும், வாழ்த்துச் செய்திகள் அனுப்பிய தலைநகர் ஸ்ரீ மகாமாரியம்மன் கோயில் தேவஸ்தானத்திற்கும், ஸ்கோற் ரோட் ஸ்ரீ கந்தசுவாமி கோயிலுக்கும், அருள்மிகு ஸ்ரீ இராமலிங்கேஸ்வரர் ஆலயத்திற்கும், வாழ்த்துரை வழங்கிய இந்தியா மற்றும் தெற்காசியாவுக்கான சிறப்பு கட்டமைப்புத் தூதர் மாண்புமிகு டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலு, அமைச்சர் பெருமக்கள் மாண்புமிகு டத்தோ ஸ்ரீ ஜி. பழனிவேலு, டத்தோ ஸ்ரீ டாக்டர் எஸ். சுப்பிரமணியம், டத்தோ எம். சரவணன் ஆகியோருக்கும், மலேசிய இந்து சங்கத்திற்கும், கட்டுரைகள் வழங்கிய சான்றோர்களுக்கும், மற்றும் பெரியோர்களுக்கும், ஆலோசனை வழங்கிய டிரஸ்ட் போர்டு தலைவர் முரு. ராம. சிங்காரம் செட்டியார் மற்றும் நகரத்தார்கள் அனைவருக்கும், ஆலய பணியாளர்களுக்கும், எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

புதிய மூலவர் ஸ்ரீ தண்டாயுதபாணி விக்ரகத்தையும் மற்றும் அரசமரத்து விநாயகர் விக்ரகத்தையும் அழகுற வடிவமைத்துத் தந்த சிற்பி தமிழகம், மிதிலைப்பட்டி ரவிச்சந்திரன் ஸ்தபதி, கோவிலில் சித்திர வேலைப்பாடுகளையும், வர்ண வேலைகளையும் கண்ணைக் கவரும் வண்ணம் பொலிவுறச் செய்து தந்த தமிழகம் சீர்காழி G.R. நடராஜன் ஸ்தபதி, மற்றும் அவரது உதவியாளர்கள், கட்டிட வேலைகளில் அரிய ஆலோசனைகள் கூறி, எனக்குத் துணையாக இருந்த முக. பெரி. முத்தையா செட்டியார், கட்டிட வேலைகளைப் பொறுப்பேற்றுச் செய்த கான்ட்ராக்டர் ராஜு மற்றும் அவரது பணியாளர்கள், மயில் கூடம் மாண்புற அமைய வழிநடத்திய சுப. சு. சு. ராமசாமி செட்டியார், இந்த மலரின் பதிப்புப் பணியை ஏற்றுச் சிறப்புற நிறைவேற்றிய ராம. மெ. அரு. பெரி. மெ. தெய்வராயன் செட்டியார், டத்தோ டாக்டர் வ. கதிரேசன் செட்டியார், சித்தாந்த ஆர்வலர் டாக்டர் அமிர்தவல்லி கணேசன், மலரை அச்சிடவும், கோவிலில் சுவரில் மாட்டியுள்ள பாடல் பலகைகளைத் தயாரிக்கவும் பணியாற்றிய Adgraades சொர்ணம் துரை, நம் ஆலயத்திற்குப் புதிதாக Website திறப்பதற்கு அடிகோலி, வேண்டியவற்றைச் செய்து உதவிய முக. பெரி. வயிரவன் செட்டியார் ஆகியோருக்கும் என் உளமார்ந்த நன்றி.

கும்பாபிஷேகப் பணிகள் சிறப்புற நடைபெற எனக்கு உறுதுணையாக இருந்து முக. பெரி. கணேசன் செட்டியார், ராம.ப.ராம. - ப.வ. முத்தையா செட்டியார், சுப. மு. நா. வீர. சுப்பிரமணியன் செட்டியார், ஆவி. ப. முரு. மு. முரு. சிதம்பரம் செட்டியார் ஆகியோருக்கும் என் இதயம் கனிந்த நன்றி.

எல்லாவற்றுக்கும் மேலாக, என்னை இந்தக் கும்பாபிஷேகப் பணியில் ஈடுபடுத்தி, எனக்கு இந்த அரிய வாய்ப்பினை நல்கி, "என்னையும் ஓர் பொருளாக்கித் தன் சிவிகை ஏற்றுவித்த" ஸ்ரீ தண்டாயுதபாணிப் பெருமான் திருவடிகளில் என் நன்றி மலர்களைக் காணிக்கையாக்கி மகிழ்கின்றேன். நன்றி வணக்கம்.

**ராம. அ. மீனாட்சிசுந்தரம் செட்டியார்**
காரியக்காரர்





# பொருளடக்கம்





உ
சிவமயம்



ஸ்ரீ விநாயகர் துதி
ஐந்து கரத்தனை ஆனை முகத்தினை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை, ஞானக் கொழுந்தினை
புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே!





ஸ்ரீ செந்தூல் தண்டாயுதபாணி துதி
ஐந்தெழுத்து மந்திரக் கடவுள் திருமகனாய்
வந்தருள் தனைத் தந்து அன்புருவாய் நின்று
செந்தூல் திருத்தலத்தில் நகரத்தார் போற்றி நின்ற
கந்தப் பெருமானை வணங்குவமே!

## கோலாலம்பூர் நகரத்தார்கள்

# அருள்மிகு தண்டாயுதபாணி கோவில்

## செந்தூல்

# நூதன பிம்பப் பிரதிஷ்டா, ஜீரணோத்தாரண
# அஷ்ட பந்தன மஹா கும்பாபிஷேக விழா அழைப்பிதழ்

அன்புடையீர்!

இப்பூவுலகில் எங்கும் வியாபித்து நீக்கமற நிறைந்து அருள்பாலிக்கும் ஸ்ரீ முருகப் பெருமான், சகல வளங்களும் பெற்று சொர்ணபூமியாய் விளங்கும் மலேசியத் திருநாட்டில் கோலாலம்பூர் மாநகரில் செந்தூல் திருத்தலத்தில் ஸ்ரீ தண்டாயுதபாணியாய் நின்று அருள்பாலித்து வருகிறார். இத்தலத்தில் மகிழ மரம் தலவிருட்சமாகவும் மற்றும் ருத்திராட்சமரம், கோசாலை (பசுமடம்), மயூரசாலை (மயில் கூடம்), கல்விக் கூடம், வெள்ளி ரதம் அமையப்பெற்று பரிபூரணத்திருத்தலமாக விளங்கி வருகிறது.

உலகெங்கும் திருக்கோவில், திருக்குளம், கல்விச்சாலைகள் முதலான அறப்பணிகள் செய்துவரும் நகரத்தார்கள் அருள்மிகு ஸ்ரீ தண்டாயுதபாணி கோவில் திருப்பணிகள் செய்யப் பெற்றும், ஸ்ரீ அரசமரத்தடி விநாயகர், ஸ்ரீ தண்டாயுதபாணி நூதன விக்ரகங்கள் பிரதிஷ்டை செய்யப் பெற்றும், சுபஸ்ரீ நிகழும் மங்களகரமான நந்தன வருடம் தைமாதம் 19-ஆம் தேதி (ஆங்கிலம் 01-02-2013) வெள்ளிக்கிழமை, கிருஷ்ண பட்சம், பஞ்சமி திதி, ஹஸ்த நட்சத்திரம், அமிர்த யோகம், சந்திர ஹோரை கூடிய சுபயோக சுபதினத்தில் காலை 8.30 மணிக்குமேல் 9.45 மணிக்குள் கும்ப லக்னத்தில் மஹா கும்பாபிஷேகம் நடைபெற இருப்பதால் தாங்கள் அனைவரும் வருகைதந்து நிகழ்ச்சியைக் கண்டு தரிசித்து நல்அருள் பெற வேண்டுகிறோம்.

| தமிழ்த் தேதி | ஆங்கிலத் தேதி/ கிழமை | நேரம் | நிகழ்ச்சிகள் |
|---|---|---|---|
| நந்தன வருடம் தை மாதம் 14-ஆம் தேதி | 27-1-2013 ஞாயிறு | காலை 9.00 மணிமுதல் 12.00 மணி வரை<br>மாலை 7.30 மணிமுதல் 9.00 மணி வரை | அநுக்ஞை, விக்னேஸ்வர பூஜை, தேவதா அநுக்ஞை, தன பூஜை, மஹா கணபதி ஹோமம், பூர்ணாஹுதி, தீபாராதனை.<br>அஷ்டலெட்சுமி தீப பூஜை, தீபாராதனை. |
| தை மாதம் 15-ஆம் தேதி | 28-1-2013 திங்கள் | காலை 8.30 மணிமுதல் 12.00 மணிக்குள்<br>மாலை 5.30 மணிமுதல் 8.30 மணிக்குள் | நவக்கிரக ஹோமம், ரக்ஷோக்ன ஹோமம், பூர்ணாஹுதி, தீபாராதனை.<br>வாஸ்து சாந்தி, பிரவேச பலி, தீபாராதனை. |
| தை மாதம் 16-ஆம் தேதி | 29-1-2013 செவ்வாய் | காலை 9.00 மணிமுதல் 12.00 மணிக்குள்<br>மாலை 4.00 மணிமுதல் 9.30 மணிக்குள் | சுப்பிரமணிய மூலமந்திர ஜபம், ஹோமம், அர்ச்சனை, தீபாராதனை, மிருத் சங்கிரணம்<br>அங்குரார்ப்பணம் ரட்சாபந்தனம், கும்பாலங்காரம், கலாகர்ஷணம் யாகசாலைப் பிரவேசம், முதற்கால யாகபூஜை, பூர்ணாஹுதி, தீபாராதனை. |
| தை மாதம் 17-ஆம் தேதி | 30-1-2013 புதன் | காலை 8.30 மணிமுதல் 12.00 மணிவரை<br>மாலை 5.30 மணிமுதல் 9.00 மணிவரை | 2-ம் கால யாகபூஜை, நூதன விக்ரஹங்கள் கண் திறத்தல், சயனாதி வாசம், பூர்ணாஹுதி, தீபாராதனை.<br>3-ம் கால யாகபூஜை, யந்திர ஸ்தாபனம், நவரத்னம் வைத்தல், நூதன பிம்ப ஸ்தாபனம், அஷ்டபந்தன மருந்து சாற்றுதல், பூர்ணாஹுதி, தீபாராதனை. |
| தை மாதம் 18-ஆம் தேதி | 31-1-2013 வியாழன் | காலை 9.00 மணிமுதல் 12.00 மணிவரை<br>மாலை 5.00 மணிமுதல் 9.00 மணிக்குள் | 4-ம் கால யாகபூஜை, சுவாமிக்கு எண்ணை சாற்றுதல், பூர்ணாஹுதி தீபாராதனை.<br>5-ம் கால யாகபூஜை, எண்ணை சாற்றுதல் தொடர்ச்சி, பூர்ணாஹுதி, தீபாராதனை. |
| தை மாதம் 19-ஆம் தேதி | 1-2-2013 வெள்ளி | காலை 5.00 மணிக்கு<br>8.00 மணிக்கு<br>9.15 மணிக்கு<br>9.30 மணிக்கு<br>11.00 மணிக்கு<br>12.00 மணிக்கு<br>மாலை 3.30 மணிக்கு<br>7.00 மணிக்கு | 6-ம் கால யாக பூஜை, பிம்பசுத்தி, ரட்சாபந்தனம், ஸ்ரீ லெட்சுமி பூஜை, நாடி சந்தானம் ஸ்பர்சாஹுதி<br>மஹா பூர்ணாஹுதி, தீபாராதனை தொடர்ந்து யாத்ராதானம், கடம் புறப்பாடு.<br>மூலவர் விமானம், விநாயகர் விமானம் மஹாகும்பாபிஷேகம்<br>மூலவர், பரிவார மூர்த்திகள் மஹா கும்பாபிஷேகம்<br>பட்டு சாற்றுதல்<br>அன்னதானம்<br>மஹாபிஷேகம்<br>விசேட பூஜை, சுவாமி உள்வீதி வலம் வருதல். |

குறிப்பு : யாகசாலை நடைபெறும் நாட்களில், வேத, ஆகம திருமுறை பாராயணங்கள் நடைபெறும். மண்டலாபிஷேகம் 2-2-2013ம் தேதி துவங்கி 21-3-2013ம் தேதி பூர்த்தி பெறவுள்ளது.

The Maha Kumbabishegam (Consecration Ceremony) of Arulmigu Thandayuthapani and other deities will be held on Friday (1-2-2013) between 8.30 am to 9.45 am We cordially invite all devotees to participate and receive the blessings of Arulmigu Thandayuthapani.

சர்வ சாதகம் : ஸ்ரீ கற்பகவிநாயகர் கோவில், பிள்ளையார்பட்டி.

தலைமை குருக்கள்
**சிகாஸ் ரெத்னா, டாக்டர். K. பிச்சை சிவாச்சார்யார் அவர்கள்**

தலைமை ஸ்தபதி :
**திரு. G.R. நடராஜன் ஸ்தபதியார்,** சீர்காழி, தமிழ்நாடு.

இங்ஙனம்,
**அறங்காவலர்கள்,**
**அருள்மிகு தண்டாயுதபாணி கோவில்,**
செந்தூல், கோலாலம்பூர்.





திருக்கயிலாய பரம்பரைத்
திருவாவடுதுறை ஆதீனம்
24 வது குரு மகாசன்னிதானம்
ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக
பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள்
திருவாவடுதுறை – 609803
நாகை மாவட்டம்.
போன் : 04364 – 232021

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்





நாள் : 21.12.2012

# அருள் வாழ்த்துரை

நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சின் நீங்காதான் தாள் வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க

எந்தா யும்எனக் கருள்தந் தையும் நீ
சிந்தா குலமா னவைதீர்த்து எனைஆள்
கந்தா கதிர்வே லவனே உமையாள்
மைந்தா குமரா மறைநா யகனே. - கந்தர் அநுபூதி

மலேசியத் திருநாட்டுக் கோலாலம்பூர் நகர் செந்தூல் வட்டாரத்தில் தமிழ்நாட்டைச் சேர்ந்த நகரத்தார் பெருமக்களால் நிறுவப்பெற்ற ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயம் நிகழும் நந்தன ஆண்டு தைத்திங்கள் 19ஆம் நாள் (01.02.2013) அன்று திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா காண உள்ளமை அறிந்து மகிழச்சி அடைகின்றோம்.

கல்வி, சமயம், அறப்பணிகள் ஆகிய யாவும் தழைக்கும் வண்ணம் ஆலய நிர்வாகம் செயல்பட்டுவருவது மிகவும் பாராட்டத்தக்கது. ஆலயத்தில் நியமமாக நடைபெற்று வரும் நித்திய நைமித்திக பூசைகளால் முருகப் பெருமானின் பேரருள் மேன்மேலும் தழைத்து வரும் என்பதில் ஐயமில்லை.

திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா சீரும் சிறப்புமாக நடந்தேறவும், அன்பர்களுக்கெல்லாம் இருமைவளங்களும், சிவஞானமும் கைகூட வேண்டியும் நமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ ஞான மாநாடராசப் பெருமான் திருவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.



உ
குருபாதம்
தந்தை தாயும் நீ; என்னுயிர்த் துணையும் நீ
சஞ்சல மதுதீர்க்க
வந்த தேசிக வடிவும் நீ; உனையலால்
மற்றொரு துணை காணேன்;
அந்தம் ஆதியும் அளப்பெருஞ் சோதியே!
ஆதியே அடியார்தம்
சிந்தை மேவிய தாயுமா னவன்னனும்
சிரகிரிப் பெருமானே!
ஸ்ரீ தாயுமான சுவாமிகள்

**முனைவர். ஸ்ரீமத் மௌன குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்**
கட்டளை விசாரணை
**தருமையாதீனம் ஸ்ரீ மௌனமடம் – மலைக்கோட்டை**
**திருச்சிராப்பள்ளி – 620 002. போன் : 0431 – 2702472**




# வாழ்த்துரை

நோய் ஒருபக்கம் துயர் ஒருபக்கம் நுழைந்தகலி
பேய் ஒருபக்கம் அலைக்க நொந்தேன்
நீயொருபக்கம் வெறுத்தால் என் செய்குவேன்
நேயவள்ளி ஆய்யொருப்பக்கம் மன்னும் பழநா புரி ஆண்டகையே

முருகவழிபாடு சங்க காலம் தொட்டு நடைபெறுகிறது. திருமுருகாற்றுப்படை சங்க இலக்கியமாகவும், 11 திருமுறையில் வைத்தும் போற்றித்துதிக்கிறோம்.

முருகனும் சிவனும் வேறன்று “ஐந்து முகத்தொடு அதோ முகமும் தோன்றி என்பது கந்தர் கலிவெண்டா அதனால் அறுமுகச் சிவன் என்றே முருகனை அழைப்பர். முருகக் கடவுள் தமிழ்க்கடவுள், தமிழ் எழுத்துக்கள் போன்று முருகனின் அங்கங்களுக்கும் ஒப்பிடுவர் கரங்கள் 12 உயிர் எழுத்து எனவும் கண்கள் 18 மெய் எழுத்து எனவும், ஃ ஆயுத எழுத்து வேலாகவும், முருகு என்ற சொல் வல்லினம், மெல்லினம், இடையினம் கலந்தது எனவும் கூறுவர்.

பழநி முருகன் யோக வடிவாகவும், திருச்செந்தூர் முருகன் வேக வடிவாகவும் திருத்தணி முருகன் போக வடிவாகவும் இறைநிலையினை போற்றுவர். உலகெங்கும் பரவியிருக்கின்ற தமிழர் தங்கள் வழிபடு கடவுளாக முருகக் கடவுளை போற்றுகின்றனர். முருகனுக்கு திருக்கோயில் எழுப்பி, தைப்பூசம் முதலிய விழாக்களை கொண்டாடி மகிழ்கின்றனர்.

பலநாடுகளில் வணிகத் தொடர்பாகச்சென்ற நகரத்தார்கள் அங்கங்கு தண்டாயுதபாணித் திருக்கோயில் எழுப்பி வழிபடுகின்றனர். காரணம் தம்தம் ஊர்களில் இருந்து மனைவி மக்கள், செல்வங்களை பிரிந்து வந்தவர்கள் அந்நாடுகளில் லௌகிகமாயையில் மயங்கிடாது தண்டாயுதபாணியைப் பார்த்து தரிசிக்கும் பொழுது ஏற்படவேண்டும் என்பது உள்ளுறை.

அவ்வகையில் மலேசிய நாட்டில் செந்தூல் பகுதியில் அருள்மிகு தண்டாயுதபாணித்திருக்கோயிலை எழுப்பி குடமுழுக்கு திருப்பணியினை செய்கின்ற திருக்கோயில் அறங்காவலர்கள், பொருளால், உழைப்பால் மனத்தால், வாக்கால் உழைத்து அத்துணை அன்பர்களுக்கும், நகரத்தார்கட்கும் எல்லாம் வல்ல செந்தமிழ்க் சொக்கநாதப் பெருமான் திருவருளும், தருமையாதீன குருமணியின் குருவருளும் கிடைத்திடவும் குடமுழுக்கு எவ்வித விக்னமின்றி நடைபெறவும் அதனையொட்டி வெளியிடப்படுகின்ற மலர் மணம் கமழவும் வாழ்த்துகின்றோம்.

மௌனகுமார ஸ்ரீ தம்பிரான்.







உ
சிவ சிவ



"கயிலைமாமுனிவர்"
ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்,
அதிபர்.

ஸ்ரீ காசிமடம்,
திருப்பனந்தாள் - 612504,
தஞ்சை மாவட்டம், தமிழ்நாடு.
Email : srikasimutt@gmail.com

நாள்: 5-11-12

# வாழ்த்துரை

கோலாலம்பூர் செந்தூல் ஸ்ரீ தண்டாயுதபாணி கோயில் மகா கும்பாபிஷேகம், நந்தன ஆண்டு தைத் திங்கள் 19-ஆம் நாள் (1-2-2013) வெள்ளிக்கிழமை நடைபெறுவதறிந்து மகிழ்கிறோம். “இரு நிலமே சந்நிதியா நிற்கும் தனிச்சுடரே" என்பது ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் திருவாக்கு. அதை மெய்ப்பிக்கும் வண்ணம் நகரத்தார்கள், முருகப் பெருமானுக்குச் சிறப்புற நூதன ஆலயம் அமைத்து மகா கும்பாபிஷேகம் செய்விப்பதன் மூலம் பக்தர்கள் எல்லோரும் வழிபட்டு இகபர சௌபாக்கியத்தைப் பெற்றுய்ய செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

ஜெ.

சுபம்



உ
சிவ சிவ

"தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே"

தவத்திரு
**குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்**

குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்
☎ : 04577 -264227

# வாழ்த்துரை

கோலாலம்பூர் நகரத்தார் அருள்மிகு ஸ்ரீ தண்டாயுதபாணி திருக்கோயில் நன்னீராட்டுப் பெருவிழா சீரும் சிறப்புமாக நடைபெறுவது குறித்து மட்டற்ற மகிழ்ச்சி. அமரர் டான்ஸ்ரீ சோமசுந்தரம் அவர்கள் சிவத்திருப்பணிகளில் பொருளாலும், உழைப்பாலும் பங்கெடுத்துள்ளார். சைவசித்தாந்தத்தில் துறைபோகிய பேரறிஞர் அவர். நகரத்தார் பெருமக்கள் தமிழகத்தில் மட்டும் அல்ல, உலகு எங்கும் சிவாலயங்கள், முருகன் ஆலயங்கள் எழுப்பி ஆன்மீகத் தொண்டு சைவத்தொண்டு ஆற்றிய பெருமைக்கு உரியவர்கள். மலேசியா நாட்டில் டான்ஸ்ரீ சோமசுந்தரம் அவர்கள் ஆற்றிய சைவத் தமிழ்ப் பணிகள் பொன் எழுத்துக்களில் இன்று பொறிக்கத்தக்கவை. மலேசிய நாட்டு சைவசித்தாந்த மாநாட்டில் நம்மை அழைத்துப் பங்கேற்கச் செய்த பெருமைக்குரியவர்.

"மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகம் எல்லாம்" - எனப் பணியாற்றிய சைவநெறிச்சீலர்.

கோலாலம்பூர் நகரத்தார் அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில் திருப்பணி அருள்மிகு தண்டாயுதபாணி பெருங்கருணையால் சிறப்புற நிறைவேறி உள்ளது. வரும் 01-02-2013 அன்று கும்பாபிஷேகம் சீரும் சிறப்புமாக நடைபெற எல்லாம்வல்ல அருள்மிகு தண்டாயுதபாணி பேருளைப் போற்றி வழிபடுவோம்.

திருப்பணிக்கும், குடமுழுக்கு விழாவிற்கும் பொருள் உதவியும், உடல் உழைப்பும் வழங்கிய அனைத்து நல்ல உள்ளங்களுக்கும் நன்றி!

அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருவடிகளைப் போற்றி வழிபடுவோம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு.

பொன்னம்பல அடிகளார்

**(பொன்னம்பல அடிகளார்)**





திருக்கயிலாய மரபு மெய்கண்டார் வழிவழி
கயிலைக்குருமணி சீர்வளர்சீர்
**சாந்தலிங்க இராமசாமியடிகள்**
பேரூராதீனம், பேரூர்,
கோயமுத்தூர் 641 010, தமிழ்நாடு
தொலைபேசி : 0422-2607995,,2608678, நகலி : 2607994
webpage www.sivasiva.in,
peruratheenam.blogsopt.com

உ



சாந்தலிங்கர் தாள் மலர் வாழ்க

Holy Kailasa heritage Meikandar
heritary - Kailai Guru Mani - Seervalarseer
**Santhalinga Ramasamy Adigal**
Peruraatheenam, Perur,
Coimbatore -641 010, Tamilnadu.
Telephone.0422-2607995,2608678, Fax : 2607994
Email : peruradigal@yahoo.com
: perurmutt@yahoo.com



08-11-2012

அருள்மிகு சாந்தலிங்கப் பெருமான் இன்னருள் பெருகுக.

# வாழ்த்து

1) வணிகமக்கள் மலேசியாவில் வாணிபத்தால் வளம் பெருக்கி
பணிவும் அன்பும் உடையவராய் முருகன் கோயில் பணிசெய்து
துணிவும் உரனும் கொண்டு பலதொழில்கள் செய்து மலர்மாலை
அணியும் விழாக்கள் எடுத்தொன்றாய் ஆற்றும் பணியை
வாழ்த்துகின்றோம்.

2) நாடு கடந்து வணிகத்தால் நாளும் வளர்ந்து தமிழ் முருகன்
நீடுகோயில் எடுத்து விழா நிகழ்த்தி மக்கள் மணம்நலிந்து
வாடும் தீயவினையகற்றி மகிழ்ந்தொன்றாகி வழிபட்டு
பாடு கிடந்து விரதங்கள் பலவும் ஏற்க வாழ்த்துகின்றோம்.

3) கந்தக்கடவுள் திருவடியில் கன்னித் தமிழால் போற்றியன்பால்
சிந்தை தெளிந்து மனைமக்கள் சேரும் சுற்றத்துடன் போற்றி
வந்திடுதல் வணிகர் குழாம் மலேசிய நாடு சிறந்திடவே
உந்தும் உணர்வால் தொழில் பலசெய்து உவந்து வாழ
வாழ்த்துகின்றோம்.

4) முன்னோர் அமைத்த திருக்கோயில் முதிரும் அன்பால் பணிசெய்து
நன்மை பெருக திருக்குட நீராட்டுச் செய்தார் பொலிவுறவே
பன்னிரெண்டாண்டில் திருக்குடநீராட்டி மகிழ்ந்து நாளும்
பக்தியினால்
அன்பால் போற்றுவார் நலங்கள் அனைத்தும் பெறவே
வாழ்த்துகின்றோம்.

வேண்டுந்தங்களன்பு

அன்புள்ள,

தவத்திரு சாந்தலிங்க இராமசாமியடிகளார்
பேரூராதீனம்.



☎ 04565 - 236846

கோவிலூர் மடாலயம்
கோவிலூர் - 630 307.
(வழி - மானகிரி)
சிவகங்கை மாவட்டம்

உ
சிவமயம்



நாள் 02.12.2012

## கோவிலூர் ஆதீனம் சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகளின்

# ஆசியுரை

நிகழும் நந்தன வருடம் தை திங்கள் 19-ம் நாள் (01.02.2013) வெள்ளிக்கிழமை கோலாலம்பூர் செந்தூல் அருள்மிகு ஸ்ரீ தண்டாயுதபாணி திருக்கோவில் திருக்குட நன்னீராட்டு விழா நிகழ்வது அறிந்து மிக்க மகிழ்ச்சி.

"திரை கடல் ஓடி திரவியம் தேடு..." என்ற முதுமொழிக்கேற்ப நம் நகரத்தார் பெருமக்கள் தொழில் நிமித்தம் தாம் சென்றவிடமெல்லாம் கூடவே தண்டாயுதபாணியைக் கொண்டு சென்று வணங்கியவர்கள். தங்கள் வளத்திற்கு அடிப்படை தண்டாயுதபாணி தான் என நம்பி வாழ்ந்தவர்கள், வளர்ந்தவர்கள். மேலும் எங்கும் பலப்பல கோவில் திருப்பணிகள், அறப்பணிகள், சமுதாயப்பணிகள் செய்து சிறப்பு பெற்றவர்கள்.

அவ்வண்ணம் கோலாலம்பூர் செந்தூல் ஸ்ரீதண்டாயுதபாணி திருக்கோவிலையும் திருப்பணி செய்து திருக்குட நன்னீராட்டு விழாவை சிறப்புடன் செய்திட நமது ஆசிகள். அந்நகர் பெருமக்கள் எல்லாம் நலமும் வளமும் பெற்றிட குருமுதல்வர் கோவிலூர் ஆண்டவர் திருவடி சிந்தித்து வாழ்த்துகிறோம்.

வேணும்.

ஸ்ரீசற்குருநாதன் துணை





உ
முருகா சரணம்







**பாலயோகி சுவாமிகள்** (ஸ்தாபகர் - அதிபர்) **திருமுருகன் திருவாக்கு திருபீடம்**

கலியுக ௫கக௩ நந்தன வருடம் கார்த்திகை 25ஆம் நாள் (ஆங்கிலம் 10.12.2012 )

**தொண்டர்க டொழவும் வைத்தார் தூமதி சடையில் வைத்தார்**
**இண்டைைத் திகழ வைத்தார் எமக்கென்று மின்பம் வைத்தார்**
**வண்டுசேர் குழலி னாளை மருவியோர் பாகம் வைத்தார்**
**அண்டவா னவர்க ளேத்து மையனை யாற னாரே.** **( நான்காம் திருமுறை )**

இறையருளைப் பெறுவதற்கான அரிய வழியாக திருக்கோவில் வழிபாடுகளை நமது சமயம் உணர்த்துகிறது. இதன் நிமித்தமே, பல்லாயிரம் ஆண்டுகள், சரியை - கிரியை – யோகம் – ஞானம் எனும் நெறிகளில் திருக்கோவில் திருப்பணிகள் நடைபெற்று வருகிறது.

வேத ,ஆகம, புராண, இதிகாச, திருமுறைகளின் வரலாற்றுப் பதிவுகளின் மூலமாக மனிதர்கள் மட்டும் அல்லாது பதினெண்( 18 ) கணத்தவர்களாகிய அமரர் – சித்தர் – அசுரர் – தைத்தியர் – கருடர் – கின்னரர் – நிருதர் – கிம்புருடர் – காந்தருவர் – யசஷர் – விஞ்சையர் – பூதர் – பைசாசர் –அந்தரர் –முனிவர் – உரகர் – ஆகாசவாசிகள் – போகபூமியர் வழிபட்டத் தலங்கள் இவ்வுலகில் அநேகம்.

சிவ ஆலயங்கள் மற்றும் இளைய சிவனார் ஆலயங்களையும் தாங்கள் வாணிப ரீதியாக புலம் பெயர்ந்த இடங்களில் அமைத்து அவற்றைப் பேணிக் காப்பதிலும் தனிப் பெரும் வரலாற்றுப் பதிவுகளைக் கொண்டவர்கள் நகரத்தார் பெருமக்கள்.

நம் மலேசிய திருநாட்டிலும் பெரும்பாலான நகரங்களில் முருகப் பெருமானை தண்டபாணித் தெய்வமாக எழுந்தருளச் செய்து பக்தியோடு, அறம் வளர்க்கும் அரும் பணிகள் ஏராளம். மலேசியாவில் முதல் வெள்ளி இரத பவனி வரச் செய்த பெருமையும் நகரத்தார் சமூகத்தையேச் சாரும் .

இத்தகு வரலாறுக் கொண்ட திருப்பணிச் செல்வர்களின் , தலைநகரில் அருளாட்சி செய்யும் ஸ்ரீ தண்டாயுதபாணி பெருமானின் ஆலயத்தை புனருத்தாரன திருப்பணிகளைச் செய்து நந்தன வருட தை மாதம் 19ஆம் நாள் மகாகும்பாபிஷேகம் நடத்துவது முருகப் பெருமானின் அருங்கருணையை யாவரும் பெறுவதற்கு வழிகோலும்.

இந்த இனிய தருணத்தில் கோலாலம்பூர், செந்துல் ஸ்ரீ தண்டாயுதபாணி கோவில் அறங்காவலர்கள் மற்றும் திருப்பணியாளர்களுக்கும் எந்தை பிரபுவான முருகப் பெருமானின் திருவருளைப் போற்றி வாழ்த்துகிறோம்.

**ஓம் முருகா சரணம் ஓம்**

**BALAYOGI SWAMIGAL**
THIRUMURUGAN THIRUVAKKU THIRUPEEDAM
15, JALAN 1/6, SECTION ONE, OLD TOWN, 46000 PETALING JAYA, SELANGOR, MALAYSIA
TEL : +6 016 689 0615 EMAIL : thirupeedam@hotmail.com
WEB : www.thirupeedam.org



## மலேசிய தெய்வீக வாழ்க்கைச் சங்கத் தலைவர் தவத்திரு சுவாமி குகபக்தானந்தா அவர்களின்

# ஆசியுரை



எதிர்வரும் தைத் திங்கள் 19ஆம் நாள், ஆங்கிலம் 1-2-2013-ல், கோலாலம்பூர் செந்தூலில் நடந்தேறவிருக்கும் ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலய திருக்குட நன்னீராட்டு விழாவை முன்னிட்டு வாழ்த்துக் கூறுவதில் மிக்க மகிழ்ச்சி கொள்கிறோம்.

1893-ஆம் ஆண்டு எழுந்தருளிய இவ்வாலயம் "ஆடும் பரிவேல் அணிசே வலெனப் பாடும் பணியே பணியா அருள்வாய்!", எனக் கதிகொண்ட கோலாலம்பூர் நகரத்தாரால் மிகச் சிறப்பாக நிர்வகிக்கப்பட்டு வருவது யாவரும் அறிந்ததே. உலகப்போருக்குப் பின் இவ்வாலயம் 1961-இல் சீரமைக்கப்பட்டு திருக்குட நன்னீராட்டு விழா மிகச் சிறப்பாக நடந்தேறியது. இப்படியாக தொடர்ந்து பல முன்னேற்றங்களைக் கண்ட இவ்வாலயம் மீண்டும் நன்னீராட்டு விழா காண்பது திருத்தொண்டுகளுள் உன்னத செயலாகும்.

அன்றாட திருப்பணிகளுடன், பள்ளிக்கூடம், நவீன வசதிகளுடன் கூடிய மண்டபம் மூலம் தக்க சேவைகளையும் வழங்கி வருகின்றது. இதோடு தமிழர்களின் இலக்கியம், கல்வி, கலை, பண்பாடுடன் கூடிய நிகழ்வுகளுக்கும் தக்க ஆதரவையும் ஊக்குவிப்பையும் தந்து வந்திருப்பது போற்றத்தக்கச் செயலாகும். சமயம் தழைக்க கூட்டுப் பிரார்த்தனை மற்றும் சமய வகுப்புகளை நடத்துவதோடு சமயக் குரவர்கள், ஆன்றோர் மற்றும் இலக்கியவாதிகளையும் வரவேற்று உபசரித்து அவர்களுக்கு சிறப்புச்செய்வது வரவேற்கத்தக்க ஒன்று. சமுதாய நலனுக்காக அறப்பணிகளுக்கும், கல்வி மற்றும் சமய வளர்ச்சிக்கும் இயன்ற அளவுக்கு நன்கொடைகளையும் இவ்வாலயம் வழங்கி வருகின்றது.

இந்த உன்னதமான பணிகள் தொடரவேண்டும். அதோடு தற்போது இளையோரிடையே காணப்பட்டுவரும் சீர்கேடுகளையும் களைய சேவைகளை தாராளப்படுத்தினால் சமயம் மற்றும் தொண்டார்வ இயக்கங்களின் திருச்செயல்கள் மேலும் தீவிரப்படுத்த இயலும்.

"நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந்து உருக" அவன் திருப்புகழ்பாடி திருப்பணி முயற்சிக்கு சேவலும் கொடியுமாக இருந்து செயல்பட்ட செயலைவைக் குழுவினரைப் பாராட்டி அவர்களுக்கு இறையருள் கிட்ட பிரார்த்திக்கின்றோம். நன்றி, வணக்கம்.

இப்படிக்கு,

இவை மற்றும் குரு சேவையில்,

**(சுவாமி குகபக்தானந்தா)**
9-12-2012

சுவாமி குகபக்தானந்தா.





உ
ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் தேவஸ்தானம்
SRI MAHA MARIAMMAN TEMPLE DHEVASTHANAM
163, ஜாலான் துன் எச்.எஸ்.லீ, 50000 கோலாலம்பூர். 163, JALAN TUN H.S. LEE, 50000 KUALA LUMPUR.
TEL: 20785323 / 20317250 FAX: 20310272

SRI MAHA MARIAMMAN TEMPLE, KUALA LUMPUR TEL: 20783467
SRI GANESAR TEMPLE, JALAN PUDU LAMA, KUALA LUMPUR TEL: 20789825
SRI SUBRAMANIASWAMY TEMPLE, BATU CAVES TEL: 61896284
BATU CAVES TAMIL SCHOOL TEL: 61890354
APPAR TAMIL SCHOOL TEL: 26984792

## கோலாலம்பூர் ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில் தேவஸ்தானத் தலைவர் டத்தோ ஆர். நடராஜா அவர்களின் வாழ்த்துச் செய்தி

**தூய விமானமும் தூலம தாகுமால்**
**ஆய சதாசிவம் ஆகும் நற்சூக்குமம்**
**பாய பலிபீடம் பத்திர லிங்கமாம்**
**ஆய அரன்நிலை ஆய்ந்து கொள்வார் கட்கே!** - திருமந்திரம்



ஆலயம் தொழுவது சாலவும் நன்று. கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம் என்பது நம் முன்னோர்கள் வாக்கு. ஆலயங்கள் தான் நமது இந்து சமயத்தின் கலைக் களஞ்சியமாகவும், சமுதாயக்கூடமாகவும், நம் வாழ்வில் என்றும் பிரிக்க முடியாத கலாச்சாரச் சின்னமாகவும் விளங்குகின்றன. அந்த வகையில் இன்று திருக்குடமுழுக்கு விழாவையொட்டி வெளியிடப்படும் சிறப்பு மலருக்கு வாழ்த்துச் செய்தி வழங்குவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

நூறு ஆண்டுகளைக் கடந்து, கோலாலம்பூர் மாநகரத்தின் மையத்தில் அன்னை ஸ்ரீ மகா மாரியம்மன் கோயில், கோர்ட்டுமலை ஸ்ரீ கணேசர் கோயில், செந்தூல் அருள்மிகு தண்டாயுதபாணி கோயில்களில் குடிகொண்டு தன்னை நாடிவருவோருக்கு வேண்டிய பேரருள் வழங்குகின்றனர்.

தமிழகத்தில் குன்றுகள் தோறும் குடிகொண்டுள்ள முருகப் பெருமான் மலேசியத் திருநாட்டில் முருகனாக, சுப்பிரமணியனாக, தண்டாயுதபாணியாக, கந்தசுவாமியாக, செந்தில் வேலவனாக ஏன் இன்னும் பல வடிவங்களில் குடிகொண்டு பேரருள் சுரக்கின்றான்.

பத்துமலைத் திருத்தலத்தில் ஸ்ரீ வேலாயுதராக கம்பீரமாக வீற்றிருந்து தன்னை நாடிவரும் லட்சோப லட்சம் மக்களுக்கு பேரருள்பாலிக்கும் முருகப் பெருமான், அருள்மிகு தண்டாயுதபாணியாக நகரத்தார்களின் இஷ்ட கடவுளாக விளங்குகிறார். தமது இஷ்ட கடவுளான தண்டாயுதபாணிக்கு கோலாலம்பூர் நகரத்தார்கள் சொந்தமாக ஆலயம் கட்டி, அங்கு அருள்மிகு தண்டாயுதபாணி அமர்ந்து அருள் புரிகின்றான். தமிழ்க் கடவுள் முருகனான அழகனுக்கு ஆனந்தமாய் ஆலயம் எழுப்பி கும்பாபிசேகம் காணும் யாவரும் புண்ணியப் பேற்றைப் பெற்றவர்கள். அந்த புண்ணியப் பேற்றை காணுவதற்கு வாய்ப்புகள் வழங்கிய அருள்மிகு தண்டாயுதபாணி கோயில் அறங்காவலர்கள், நிர்வாகிகள் பாராட்டுக்குரியதாகும்.

அருள்மிகு தண்டாயுதபாணி திருக்கோயில் திருப்பணி வேலைகள் நிறைவுற்று, திருக்குட முழுக்கு விழா என்னும் மகா கும்பாபிசேக விழா சிறப்புடன் நடைபெற அனைத்து ஏற்பாடுகளையும் செய்துள்ள அறங்காவலர்கள் குழுவினர் அனைவரும் பாராட்டுக்குரியவர்கள்.

இத்திருக்கோயில் மகா கும்பாபிசேகம் நடைபெறும் இவ்வேளையில், இத்திருக்கோயில் சிறப்புடன் அமைய பல வழிகளிலும் துடிப்புடன் செயல்பட்ட **ஆலய அறங்காவலர்கள் மற்றும் அவரது குழுவினருக்கும்** வாழ்த்துக்களையும், பாராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்வதோடு, மகா கும்பாபிசேக விழா மிகச் சிறந்த முறையில் நடைபெற எல்லாம் வல்ல அன்னை ஸ்ரீ மகா மாரியம்மன் துணையிருக்க வேண்டி வாழ்த்துகிறேன்.

என்றென்றும் இறைச்சேவையில்,

**(டத்தோ ஆர். நடராஜா, PJN, DPTJ, KMN, AMN, PJK)**
தலைவர்



உ
அன்பே சிவம்



# அருள்மிகு ஸ்ரீ இராமலிங்கேஸ்வரர் கோயில்
# KUIL ARULMIGU SRI RAMALINGESWARAR

## திருக்குட நன்னீராட்டு விழாவிற்கு
## வாழ்த்துச் செய்தி



மலேசியத் திருநாட்டில் கோலாலம்பூர் செந்தூல் வட்டாரத்தில் வெகு கம்பீரமாக அமைந்துள்ள ஸ்ரீ தண்டாயுதபாணி கோவில், ஓர் உன்னதமான, பழமைவாய்ந்த, வரலாற்றுப்பூர்வமான கோயில்.

திருக்கோவிலின் திருக்குட நன்னீராட்டு விழாவிற்கு எங்களது மேற்குறிப்பிட்ட ஆலய சார்பாக வாழ்த்துச் செய்தி வழங்குவதில் எங்களது ஆலய நிர்வாகம் பெருமிதம் அடைகின்றது.

எல்லா வகையிலும் நன்னீராட்டு விழா சிறப்பாக நடைபெற்று பக்தர்கள் முருகன் அருள்பெற்று, ஆசிபெற, கோவில் நிர்வாகம், அதன் நிர்வாக அறங்காவலர் குழு அனைவருக்கும் நன்றி கூற கடமைப்பட்டுள்ளோம்.

மருதமலை மாமணியே முருகையா, பக்தர்களுக்கு அருள்பாலிக்கும் செந்தூல் ஸ்ரீ தண்டாயுதபாணியே நின்பொற்பாதங்களை தொட்டு வணங்குகின்றோம். நின் கவசத்தால் எல்லோரையும் காத்து அருள்புரிய தினமும் வணங்குகின்றோம்.

திருக்கோவிலின் திருக்குட நன்னீராட்டு விழா சிறப்பாக நடந்தேற, அரும்பணியாற்றும் கோவில் அறங்காலவர்கள் குழுவிற்கு மரியாதையும், நன்றியும் உரியதாகுக!

"வேலுண்டு வினை நீக்க மயிலுண்டு
எனைக்காக்க பாரினில் இனி பயமேது ஐயா"

"இன்பமே சூழ்க! எல்லோரும் வாழ்க!"

இங்கணம்

**ஆ. வேலாயுகம்**
(கோயில் தலைவர், ஆலய நிர்வாக சபை)
12-12-12





Aum

# PERSATUAN CEYLON SAIVITES MALAYSIA
# மலேசிய இலங்கைச் சைவர் சங்கம்
(Malaysian Ceylon Saivites Association)





SRI KANDASWAMY KOVIL
No. 3, Lorong Scott,
Off Jalan Tun Sambanthan
50470 Kuala Lumpur.
Tel. No.: 03-22742987
Fax No.: 03-22740288
website: www.srikandaswamykovil.org
e-mail: enquiries@srikandaswamykovil.org

சிவமயம்



**மலேசியா இலங்கைச் சைவர் சங்கம்
ஸ்ரீ கந்தசுவாமி கோவில்
ஸ்கொற் றோட் - கோலாலம்பூர்
தலைவர் - சைவ சித்தாந்த கலாநிதி - அருள் நேசர் - சங்கபூஷண்
சிவதொண்டர் சரவணமுத்து பேரம்பலம் AMN., AMP., PJK
அவர்களின்**

# வாழ்த்துரை

விழிக்குத்துணை திருமென்மலர்பாதங்கள் மெய்மைகுன்றா
மொழிக்குத்துணை முருகா என்னும் நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத்துணை அவன் பன்னிருதோளும் பயந்த தனி
வழிக்குத்துணை வடிவேலும் செங்கோடன் மயூரமுமே.

கோலாலம்பூர் செந்தூல் ஸ்ரீ தண்டாயுதபாணி கோவில் மஹா கும்பாபிஷேக விழா மலருக்கு வாழ்த்துரை வழங்குவதில் பெரு மகிழ்ச்சி அடைகிறேன்.

கலியுகவரதனாய் கண்கண்டதெய்வமாய் விளங்கி தன்னை வழிபடும் அடியவர்களுக்கு அனைத்து நலன்களையும் அருளுபவன் முருகப்பெருமான். செந்தமிழுக்கும் முருகப்பெருமானுக்கும் நீங்காத தொடர்பு உண்டு. எங்கெல்லாம் தமிழ் இருக்கிறதோ அங்கெல்லாம் முருகப் பெருமானது பேரருள் நிறைந்து இன்பம் பெருக்கும். "நெஞ்சில் ஒருகால் நினைக்கின் இருகாலும் தோன்றும்" முருகப்பெருமானை வணங்கினால் வாழ்வில் வெற்றிவரும், நோய்கள் தீரும், பகை அகலும், முக்தி கிடைக்கும். உலகத்தின் உய்தி வேண்டி உதித்தவன் உமைபாலன். இப்பெருமானை "சாந்துணைப் போதும் மறவாதவர்களுக்கு ஒரு தாழ்வில்லையே" என்பது கந்தர் அலங்காரம். நினைக்கும் தோறும் நெஞ்சில் நிறுத்தும் தோறும் நேரில் நின்று காத்து ரக்ஷிக்கும் தெய்வம் கந்தப்பெருமான்.

தந்தைக்கு உபதேசம் செய்த சுவாமி நாதனாகவும், சூரபத்மனுடைய அஞ்ஞான இருளை நீக்கி மெஞ்ஞான ஒளியைக் கொடுத்த சண்முகப்பெருமானாகவும் உலகை வலம் வந்து மாங்கனியைப் பெறவேண்டும் என்ற நியதியில் "இறைவனுக்குள்ளே உலகைக்காணுதல்" என்ற தத்துவத்தையும்



"உலகினில் இறைவனைக் காணுதல்" என்ற தத்துவத்தையும் விநாயகப்பெருமானுடன் சேர்ந்து நமக்கு உணர்த்தி ஆண்டிக்கோலம் ஏற்று குன்றின் குமரனாகவும், இப்படியாக பலவகையான அருட்கோலங்களுடன் காட்சி கொடுத்த முருகப்பெருமான் கோலாலம்பூர்-செந்தூல் அருள்மிகு ஸ்ரீ தண்டாயுதபாணி கோவிலில் ஞானதண்டம் ஏந்திய ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமியாக வீற்றிருந்து அருள் பாலித்து ரக்ஷிக்கின்றார். மிகவும் பழமையும் பெருமையும் அருள்கீர்த்தியும் கொண்ட இந்த ஆலயத்தில் நடைபெறுகின்ற பூஜைகள், விழாக்கள் ஆகியன சிறந்த அருட்காட்சிகளாகும். இந்தக்கோவில் சார்பாக உயரிய கல்யாண மண்டபமும் பாடசாலைக் கூடமும் அமையப்பெற்று மங்கள வைபவங்களும், சிறப்பு நிகழ்ச்சிகளும், கல்வி வளர்ச்சிகளும் நடைபெறுவது சிறப்பு வாய்ந்த பெரும் சேவை. இக்கோவில் புனருத்தாரணத் திருப்பணிகள் நிறைவெய்தி அழகு மிகுந்த திருக்கோவிலாக மஹா கும்பாபிஷேகம் நடைபெறவிருப்பது அடியார்கள் செய்த புண்ணியப்பேறு. ஓர் ஆலயத்திருப்பணிகள், மஹா கும்பாபிஷேக விழாக்கள் ஆகியன செய்வதும் செய்விப்பதும் பங்குபற்றுவதும் தரிசிப்பதும் நாம் முற்பிறவியிலே செய்த தவப்பயன் மூலமே கிடைக்கும். இப்படியான பணிகளில் ஈடுபட்டு பலன் அடைவதற்கு நம் வருங்காலச் சந்ததியினருக்கும் நாம் வழி காட்டிகளாக அமையவேண்டியது மிகவும் அவசியம்.

இக்கோவில் திருப்பணிகளை நிறைவேற்றி மஹாகும்பாபிஷேக விழாவினை சிறப்பாக நடாத்துகின்ற ஆலய அறங்காவலர்கள் மற்றும் உறுப்பினர்கள் எல்லோரது சேவைகளும் பாராட்டுக்குரியன. முருகப் பெருமானுடைய திருவருளினால் அருள்மிகு தண்டாயுதபாணி கோவில் மஹாகும்பாபிஷேகம் கோலாகலமாக நடைபெற்று திருவருள் கடாச்சம் மிகுந்து பொழியவும் எல்லோரும் கந்தப்பெருமானுடைய திருவருள்தரிசனம் கிடைத்து இன்புற்று இனிது வாழவும் மஹாகும்பாபிஷேக மலரானது அருள் மணம் கமழும் மலராக மலரவும் எல்லாம் வல்ல ஸ்ரீ வள்ளி தேவசேனாசமேத சண்முக சுப்பிரமணியப் பெருமானுடைய திருவடிகளை வணங்கிப் பிரார்த்தித்து மலேசிய இலங்கைச் சங்கத்தின் சார்பில் எமது மனமார்ந்த நல்வாழ்த்துக்களை வழங்குகின்றோம்.

இன்பமே சூழ்க எல்லோரும் வாழ்க!<br>
மேன்மை கொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்







**DUTA KHAS MALAYSIA KE INDIA & ASIA SELATAN (INFRASTRUKTUR)**
*Jabatan Perdana Menteri*
***SPECIAL ENVOY TO INDIA & SOUTH ASIA ON INFRASTRUCTURE***
*Prime Minister's Department*
*Government of Malaysia*

---



# வாழ்த்துச் செய்தி

தலைநகர், ஜாலான் ஈப்போவில் ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக அமர்ந்து அருள்பாலித்துக் கொண்டிருக்கும் கோலாலம்பூர் அருள்மிகு தண்டாயுதபாணி கோவிலின் திருக்குட நன்னீராட்டு விழாவினை முன்னிட்டு வெளியிடப்படும் சிறப்பு மலருக்கு வாழ்த்துச் செய்தி வழங்குவதில் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

முருகன் இந்து சமயத்தினரின் உருவக் கடவுள்களுள் ஒருவராக விளங்குகிறார். குறிப்பாக, தமிழர்களே இவரை அதிகம் வழிபடுகின்றனர். இதனால்தான் இவரை தமிழ்க் கடவுள் என்றும் அழைக்கப்படுகின்றார். இவர் ஐவகை நிலங்களில் முதன்மை நிலமாகிய குறிஞ்சி நிலத்தின் கடவுளாகவும், போற்றப்படுகிறார். சரவணன், கார்த்திகேயன், குமரன், கந்தன், வடிவேலன், சுப்ரமணியன், சுவாமிநாதன், செந்தில்நாதன், ஆறுமுகன் (சண்முகன்) போன்ற பன்முகப் பெயர்களாலும் அழைக்கப்படுகின்றார்.

அந்த வகையில் தமிழ்க் கடவுளாம் திருமுருகனை மூலாதாரமாகக் கொண்டுள்ள இக்கோவில் கடந்த 1893ஆம் ஆண்டு நகரத்தார்களின் முயற்சியில் அமைக்கப்படிருந்தாலும், பல்வேறு காரணங்களினால் கோவிலின் முதல் திருக்குட நன்னீராட்டு விழா 1902ஆம் ஆண்டு நடைபெற்றது முருகப் பெருமானின் திருவருளே ஆகும். ஒரு கோவிலுக்குரிய கடப்பாட்டோடு நிர்வாகம் செயல்படுவது பாராட்டுக்குரியது. சைவ சமயம் தழைக்கவும், சமயக் கூட்டங்கள், கூட்டு வழிபாடுகள், கல்வி போன்ற சமுதாய நடவடிக்கைகளை கோவிலில் மேற்கொள்ளப்பட்டு வருவது மிகவும் பாராட்டுக்குரியது.

ஒரு சிறந்த கோவிலாக பராமரிக்கப்பட்டுவரும் இக்கோவில் தற்போது விரிவாக்கம் செய்யப்பட்டுள்ளது. குறிப்பாக கோபுரம் மேலும் அழகு படுத்தப்பட்டு, தூண்களிலும் முகப்பிலும் அறுபடை வீடுகளும் முருகப் பெருமானின் வாகனங்களும், சிவ சின்னங்களும் வடிவமைக்கப்பட்டுள்ளதானது, கோவிலின் தோற்றத்தை மேலும் அழகுற எடுத்துக் காட்டுகிறது.

இத்திருப்பணி மேற்கொண்ட கோவில் நிர்வாகத்தினருக்கும், ஆதரவும் ஒத்துழைப்பும் வழங்கிய பக்தப் பெருமக்களுக்கும் எனது மனமார்ந்த பாராட்டுகளை தெரிவித்துக் கொள்வதுடன், நடைபெறவிருக்கும் கோவிலின் திருக்குட நன்னீராட்டு விழா எல்லா வகையிலும் சிறப்புடன் நடைபெற எல்லாம் வல்ல முருகப் பெருமானின் தாள்பணிந்து எனது இதயப்பூர்வமான வாழ்த்துகளை தெரிவித்துக் கொள்கிறேன்.

நன்றி. வணக்கம்.-

தங்களன்புள்ள,

டத்தோஸ்ரீ ச. சாமிவேலு, SPMJ., DPMS., AMN., PCM.



*Tingkat 1, Menara Manickavasagam, No. 1, Jalan Rahmat, 50350 Kuala Lumpur.*
*Tel: +603 4042 2885 Fax: +603 4045 6377*





# *Dato' G. Palanivel*

*Minister in the Prime Minister's Department*

**ம.இ.கா. தேசியத் தலைவர்,**
**டத்தோ ஸ்ரீ ஜி. பழனிவேல் அவர்களின்**

## வாழ்த்துரை



கோலாலம்பூர், செந்தூல் அருள்மிகு ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயத் திருக்குட நன்னீராட்டு விழா மலருக்கு வாழ்த்துரை வழங்குவதில் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

இது மலேசியாவில் அமைந்துள்ள புகழ் பெற்ற ஆலயங்களுள் ஒன்று. இந்த ஆலயம் கடந்த நூறு ஆண்டுகளுக்கும் மேலாகப் பழமையானது. நகரத்தாரின் கடின உழைப்பாலும், விடா முயற்சியாலும் முருகப் பெருமானின் ஆலயம் உருவாக்கப்பட்டது. இந்த ஆலயம் தோற்றுவிக்கப்பட்ட நாள் முதல் இன்றுவரை எம்பெருமான் முருகன் பக்தர்களின் வேண்டுதல்களை நிறைவேற்றி வருகிறான். இங்கே 75 ஆண்டுகளுக்கு முன்னதாகத் தமிழகத்தில் உருவாக்கப்பட்ட வெள்ளி ரதத்தைப் பங்குனி உத்திரப் பெருவிழாவின் போது பயன்படுத்துவதை எண்ணி மகிழ்ச்சி அடைகிறேன். மேலும், இந்த ஆலயவளாகத்தில் அமைந்துள்ள செட்டியார் மண்டபம் ஒரு வரலாற்றுப் புகழ் பெற்ற ஒரு மண்டபம். இந்த மண்டபத்திலே முதல் முறையாக மலேசிய இந்தியர் காங்கிரஸ் (ம.இ.கா) கூட்டம் நடந்ததென்பதை நான் இங்கே பெருமையாகக் கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

இன்று இந்தச் செட்டியார் மண்டபத்தில் கலை கலாச்சார நிகழ்ச்சிகள், திருமணங்கள், சமய வகுப்புகள், சமயச் சொற்பொழிவுகள் நடந்தவண்ணம் இருக்கின்றன. இந்த முருகனின் சன்னிதானத்தில் நடைபெறும் கும்பாபிஷேகம் நல்ல முறையில் நடைபெற இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

அன்புடன்,

G. பழனிவேல்

**டத்தோ ஸ்ரீ ஜி. பழனிவேல்,**
ம.இ.கா. தேசியத் தலைவர்,
அமைச்சர், பிரதமர் இலாகா

*36th Floor, Menara Dato' Onn, Putra World Trade Centre (PWTC), 45 Jalan Tun Ismail, 50695 Kuala Lumpur Malaysia.*
*Tel: 012-205 1557 Email: palanivelgp@gmail.com Web: www.gpalanivel.com*







**MENTERI SUMBER MANUSIA MALAYSIA**

***(MINISTER OF HUMAN RESOURCES MALAYSIA)***



**மனிதவள அமைச்சரும், மஇகா தேசிய துணைத் தலைவருமான டத்தோ ஸ்ரீ டாக்டர் எஸ். சுப்பிரமணியம் அவர்களின்**

# வாழ்த்துச் செய்தி

*அகர முதல எழுத்தெல்லாம் ஆதி*
*பகவன் முதற்றே உலகு*

தலைநகர் செந்தூலில் வீற்றிருக்கும் புகழ்வாய்ந்த ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயத்தின் திருக்குட நன்னீராட்டு விழாவை முன்னிட்டு வெளியீடு காணும் சிறப்பு மலருக்கு வாழ்த்துச் செய்தி வழங்குவதில் மகிழ்ச்சி அடைகிறேன். இம்மாபெரும் பணியில் ஈடுபட்டிருக்கும் ஆலய நிர்வாகத்தினருக்கு எனது வாழ்த்துக்களையும் பாராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

1893ஆம் ஆண்டு கட்டப்பட்ட கோலாலம்பூர் நகரத்தார் அருள்மிகு தண்டாயுதபாணி ஆலயம் பல்வேறு சிறப்புக்களைக் கொண்டுள்ளது. கோயிலுக்கு அடுத்துள்ள செட்டியார்கள் மண்டபம் 1920ஆம் ஆண்டில் கட்டப்பட்டதாகும். இம்மண்டபம் தமிழர்களின் கல்வி, கலை, பண்பாடு, நாகரீகம் தழைத்தோங்குவதற்கான மையமாகவும் செயல்பட்டது வரலாற்றில் குறிப்பிடத்தக்கது. சைவ சமயம் மலைநாட்டில் தழைக்க, சமயக் கூட்டங்கள், கூட்டுப் பிரார்த்தனைகள் நடைபெற்றதும் இந்த ஆலய மண்டபத்தில்தான். பல்வேறு சமூக, சமய, மொழி, இலக்கிய நிகழ்ச்சிகள் இக்கோயிலின் மண்டபத்தில் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. நாட்டின் பல பகுதிகளில் நகரத்தார் சமூகத்தினர் வாழ்ந்து வந்தாலும், தங்களது திருமணச் சடங்குகளை அவர்கள் இந்த ஆலயத்தில்தான் நடத்துவது, இந்நவீன காலத்திலும் அவர்கள் கடைபிடித்து வரும் பாரம்பரியத்தைப் புலப்படுத்துகிறது.

இந்நாட்டு இந்தியர்களைப் பிரதிநிதிக்கும் மஇகா தோற்றுவிக்கப்பட்ட தலமாகவும் ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயத்தின் மண்டபம் திகழ்வது பெருமைக்குரியதாகும். இப்படி பல்வேறு சிறப்புக்களைப் பெற்றுள்ள இந்த ஆலயம் தலைநகரில் இந்துக்களின் சின்னமாகவும் விளங்குகிறது. ஆலயங்கள் வழிபாட்டுத் தலங்களாக மட்டுமின்றி, மக்கள் ஒன்றுகூடக் கூடிய சமூக மையங்களாகவும் திகழ வேண்டும் என்பதற்கு செந்தூலில் கம்பீரமாக வீற்றிருக்கும் அருள்மிகு ஸ்ரீ தண்டாயுபாணி ஆலயம் சிறந்த முன்னுதாரணமாகத் திகழ்கிறது.

மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்பதற்கிணங்க, ஆலயம் எனும் கட்டமைப்பின் வழி, இந்துக்கள் தங்களுக்குள் ஒற்றுமையை வலுப்படுத்தி பல்வேறு ஆக்கப்பூர்வமான செயல்திட்டங்களில் ஈடுபட வேண்டும் என கேட்டுக்கொள்கிறேன். எனது எண்ணங்களை இம்மலரில் பதிவு செய்ய வாய்ப்பளித்த ஆலய நிர்வாகத்தினருக்கு நன்றியும் வாழ்த்துக்களும். நம் வாழ்வில் மென்மேலும் வளமும் நலமும் சேர எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக.

இன்பமே சூழ்க!
எல்லோரும் வாழ்க!

வாழ்த்துக்களுடன்,

**டத்தோ ஸ்ரீ டாக்டர் எஸ். சுப்ரமணியம்**
மனிதவள அமைச்சர்,
ம.இ.கா தேசிய துணைத் தலைவர்



**DATUK M. SARAVANAN**
**டத்தோ எம். சரவணன்**
DEPUTY MINISTER OF FEDERAL TERRITORIES
AND URBAN WELL-BEING
**துணை அமைச்சர், கூட்டரசுப் பிரதேசம்**
**மற்றும் நகர்புற நல்வாழ்வு துறை**




1
Level 4, Block 2, Menara PJH, Precint 2,
62100 Putrajaya, Malaysia.
Tel : 603-8889 7998
Fax : 603-8889 4414
E-mail : sarann@tm.net.my



# வாழ்த்துரை

கோலாலம்பூர், செந்தூல், அருள்மிகு தண்டாயுதபாணி கோவில் திருக்குட நன்னீராட்டு விழாவை முன்னிட்டு வெளியிடப்படும் சிறப்பு மலருக்கு வாழ்த்துச் செய்தி வழங்குவதில் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

இறை சிந்தனை, இறை அச்சம் என்பது ஒரு சிறந்த வாழ்க்கையை மேற்கொள்வதற்குரிய அடிப்படை எண்ணங்களாகும். இந்த எண்ணங்களுடன் வாழ்க்கையை இயல்பாக அதன் எல்லாத் தன்மைகளையும் ஏற்றுக் கொண்டால் ஏற்றத்தாழ்வுகள் மறைந்து விடும். ஆனந்தம் மட்டுமே அப்போது நிலைத்திருக்கும். உள்ளத்தில் ஆனந்தம் நிலைத்திருக்குமானால், புற உலக வாழ்வின் இன்ப துன்பங்கள் நம்மை சிறிதும் பாதிக்காது. இதனை ஆன்மீகத்திற்குரிய ஒரு விளக்கமாகவும் ஏற்றுக் கொள்ளலாம்.

நம்மவர்கள் கடல் கடந்து வந்தாலும், நமது சமயம் தழைக்கவும், நமது இலக்கியம், கல்வி, கலை, கலாச்சாரம், நாகரீகம் மற்றும் பண்பாடு போன்றவை தழைக்கவும் கோவில்களை நிறுவினர். அவ்வாறு கடந்த 1893ஆம் ஆண்டு அருள்மிகு தண்டாயுதபாணி கோவிலை அமைத்து, தமிழ்க் கடவுளாம் முருகப் பெருமானுக்குரிய பெருமைகளை பறைசாற்றி வருகின்றனர். கடந்த ஒரு நூற்றாண்டுகளுக்கும் மேலாக அவ்வப்போது மேற்கொள்ளப்பட்ட சீரமைப்புப் பணிகளைத் தொடர்ந்து, இப்போது கோவில் முழுவதும் திருப்பணிகள் மேற்கொள்ளப்பட்டு இப்பொழுது அழகிய தோற்றத்துடன் காட்சியளிப்பது உள்ளத்தைக் கொள்ளைக் கொள்ளும் அளவில் அமைக்கப்பட்டுள்ளது.

மொழியும் - சமயமும் பேணி பாதுகாக்கப்பட்டால் மட்டுமே ஓர் இனம் அழியாமல் இருக்க முடியும் என்பது நிதர்சனமான உண்மை மெய்ப்பிக்கும் வகையில், இக்கோவிலும் விளங்கி வருகிறது. இத்திருப்பணியை மேற்கொள்வதற்கு பல்வேறு சிரமங்களை மேற்கொண்ட கோவில் நிர்வாகத்தினருக்கும், ஆதரவும் ஒத்துழைப்பும் வழங்கிய மெய்யன்பர்களுக்கும் இவ்வேளையில் எனது மனமார்ந்த பாராட்டுகள்.

கோவிலின் திருக்குட நன்னீராட்டு விழா எல்லா வகையிலும் சிறப்புடன் நடைபெற வேலும் - மயிலும் உடன் கொண்டு வீற்றிருக்கும் முருகப் பெருமானின் தாள் வணங்கி எனது மனமார்ந்த வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்வதில் மகிழ்ச்சியடைகிறேன்.

நன்றி,

தங்களன்புள்ள,

டத்தோ எம். சரவணன்








மலேசிய இந்து சங்கம்
MALAYSIA HINDU SANGAM (5859-M)

NO. 67, JALAN PJS 1/48, TAMAN PETALING UTAMA 7, 46150 PETALING JAYA, SELANGOR. TEL : 603-7784 4668 / 4669 / 4244 FAX : 603-7784 7304
Email : info@hindusangam.org.my Website : http://www.hindusangam.org.my



# மலேசிய இந்து சங்கம் தேசிய தலைவர்
# வாழ்த்துரை

வணக்கம்,
நமச்சிவாய வாழ்க நாதன் தாழ் வாழ்க
இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க.

'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு'

என்றார் திருவள்ளுவர். உலகு வாழ் உயிரினங்கள் உயிர் வாழ காற்று முக்கியம். அது போல் இந்து மக்கள் அறநெறியோடு வாழ இறை பக்தியானது முக்கியம். இறைவனின் படைப்பில் மானிடனாக வாழும் நாம் அற நெறி தவறாமல், எண்ணத்திலும் செயலிலும் சிறந்த இந்துக்களாக வாழ இறைவனின் ஆசீர்வாதத்தைப் பெற நாம் வழிபடுவோம்.

முருக வழிபாடு என்பது ஷண்மத வழிபாடாகும்.

அஞ்சுமுகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும் நெஞ்சில்
ஒருகால் நினைக்கில் இருகாலும் தோன்றும்
முருகா என் றோதுவார் முன்

என்ற பாடல் முருகனது திருவருட் சிறப்பைக் கூறும்.

கோலாலம்பூர், செந்தூலில் 119 ஆண்டுகளாக வீற்றிருக்கும் ஸ்ரீ தண்டாயுதபாணிக்கு நடத்தப்படவிருக்கும் திருக்குட நன்னீராட்டு விழாவிற்கு வாழ்த்துச் செய்தி அனுப்புவது நமக்கு மிக்க மகிழ்ச்சி. செந்தூல் வட்டார மக்கள் அனைவரும் சமய வழிபாட்டில் ஈடுபட்டு நமது இந்து சமயத்தை மென்மேலும் சிறந்த சமயமாக உருவாக்க உதவும் இவ்வாலயத்தின் முயற்சி பாராட்டத்தக்கதாகும்.

வரும் ஆண்டு 1 பிப்ரவரி 2013-யில் நடைபெறவிருக்கும் இத்திருக்குட நன்னீராட்டு விழா இறைவனின் திருவருளைப் பெற்று இனிதே நடைபெற முப்பத்து முக்கோடி தேவர்களும் ஆசீர்வாதம் அளித்து, புற்றீசல் போல மக்களும் திரண்டு வர வேண்டும் என்று பிரார்த்திக்கின்றேன். மேலும் இத்திருக்குட நன்னீராட்டு விழா இனிதே நடைபெற மலேசிய இந்து சங்கத்தின் சார்பில் என் இனிய உள்ளம் கனிந்த நல்வாழ்த்துக்கள்.

அதோடு இத்திருக்குட நன்னீராட்டு மலர் சிறப்பாகவும் பொது மக்களுக்குப் பயனுள்ளதாகவும் வெளியிட பொறுப்பாளர்களுக்கும் ஏற்பாட்டுக் குழுவினருக்கும் எனது வாழ்த்துக்களையும் பாராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

"இன்பமே சூழ்க! எல்லோரும் வாழ்க!"

என்றும் இறைச் சேவையில்,

**ஆர். எஸ். மோகன் ஷான் JMW., AMK., BKM., PJK.**
தேசிய தலைவர்
மலேசிய இந்து சங்கம்



உ
சிவமயம்




Tel : 603-7982 4381

**PERSATUAN ARULNERI MALAYSIA**

**மலேசியா அருள்நெறி திருக்கூட்டம்**

**MALAYSIA ARULNERI THIRUKKOOTAM**

Arulneri Nilayam, 17, Jalan Chekor, Off Jalan Halimahton
3rd Mile Jalan Kelang Lama, 58000 Kuala Lumpur.


---

மலேசிய அருள்நெறித் திருக்கூட்டத் தலைவர் சங்க பூஷண், சைவமணி, சித்தாந்த கலாநிதி முனைவர் க. திலகவதி அவர்களின்

## வாழ்த்துரை

நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும்
தேடித் திரிந்து சிவபெரு மான்என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்தைக் கோயிலாக் கொள்வனே.

மேற்கண்ட செய்யுள் திருமூல நாயனாரின் திருவாக்காகும். 'நாடு நாடாக, ஒவ்வொரு நகராகத் தேடிச் சென்று அங்கெல்லாம் உள்ள திருக்கோயில்களுக்குச் சென்று சிவபெருமானை உள்ளமுருகப் பாடிப் பணிந்து வணங்கி வந்தால், அவ்வாறு சிவபிரானின் தியானத்திலே கூடிநிற்கும் உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு சிவமூர்த்தி வந்து இனிது அமர்ந்து அருள்புரிவார்' என்று கூறுகிறது இந்தத் திருமந்திரம்.

இறைவனின் திருவருள் வந்து பதிந்தால், அத்திருவருள் நம்மை முத்தி நிலைக்கு இட்டுச் செல்லும். முத்தி நிலைக்கு உதவும் முக்கிய அடிப்படையாக விளங்குவது ஆலய வழிபாடு. மேலும், நம் மனத்திலுள்ள மலத்தைத் தியானத்தாலும், சொல்லில் ஏற்படும் அழுக்கை இறைவன் புகழ் பாடும் பாடல்களைப் பாடுவதாலும் உடல் வழியாகச் செய்யப்படும் குற்றங்குறைகளை அர்ச்சனையாலும் நீக்கிக்கொள்ள வேண்டும் என்று கூறுவார் துறைமங்கலம் சிவப்பிரகாசர்:

"திருக்குறும் அழுக்காறு அவாவோடு வெகுளி செற்றம் ஆகிய மன அழுக்கை
தியானம் என் புனலால், பொய், புறங்கூறும் தீச்சொல் என்ற வாய் அழுக்கை
அருட்கிளர் நின் துதி எனும் புனலால், அவத் தொழில் எனும் மெய் அழுக்கை
அருச்சனை எனும் புனலால் கழுவா அசுத்தனேன் உய்யும் நாள் உளதோ"

மனமொழிமெய்களால் ஏற்படும் குறைகளை நீக்கிக்கொள்ள முயற்சி செய்யாததால், தான் முத்தி பெறும் நாள் என்று ஒன்று வருமா? என்று வருந்தும் வகையில் தன் செய்யுளை இயற்றியுள்ளார் சிவப்பிரகாசர்.

பிறப்பின் இறுதி நோக்கமாகிய முத்திப்பேற்றை அடைவதற்கு வழிபாடு, குறிப்பாக ஆலய வழிபாடு முக்கியப் படியாக உதவுகிறது. இதனால்தான், 'கோயில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்று சுருக்கமாகக் கூறிவைத்துள்ளனர் நம் ஆன்றோர்.

முன்னோர்களின் வழிகாட்டுதலுக்கு ஏற்ப, தமிழ் நாட்டிலிருந்து மலைநாட்டிற்கு வந்து குடியேறிய நகரத்தாரும் தாங்கள் வழிபடும் தெய்வமாகிய ஸ்ரீ பழனி ஆண்டவருக்குக் கோவில் எழுப்பிப் பல ஆண்டுகளாக, தங்கள் மரபும் ஆகம நெறியும் வழுவாமல் ஆலயத்தைச் செறிவாகச் சிறப்பாக நடத்தி வருகிறார்கள். இந்த உண்மையைப் பல சமயச் சான்றோர்கள் அறிந்து போற்றியுள்ளார்கள்.

மலேசிய அருள்நெறித் திருக்கூட்டத்தினரோடு ஸ்ரீ தண்டாயுதபாணி கோயில் நிர்வாகத்தினர், ஆரம்பக் காலந்தொட்டு இன்று வரைக்கும் மிக அணுக்கமாக ஒத்துழைத்து வந்துள்ளனர்; வருகின்றனர். கந்த சஷ்டி விழாவின்போது அருள்நெறி திருக்கூட்ட சார்பில், ஆறு நாள்களும் தொடர் சமயச் சொற்பொழிவாற்ற, இடமும் வேண்டிய வசதி அனைத்தும் தந்து வழங்கி வருவதைச் சிறந்த எடுத்துக்காட்டாகக் கூறலாம். திருக்கூட்டத்தினர் நடத்தும் மாணவர் விழா, ஆண்டு நிறைவு விழா போன்ற சிறப்பு நிகழ்ச்சிகளுக்கு, கணிசமான பொருளுதவி, இட வசதி, உணவு வசதி என ஒல்லும் வகையெல்லாம் உதவும் ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலய நிர்வாகத்தினருக்கு, இத்தருணத்தில் திருக்கூட்டம் சார்பில் மனமுவந்த நன்றியைப் பதிவு செய்துகொள்வதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன். இரு தரப்பினருக்கும் இடையில் இருந்துவரும் நல்லிணக்கமும் ஒத்துழைப்பும் பரஸ்பர நல்லெண்ணமும் என்றென்றும் தொடர வேண்டும் என்று ஆறுமுகப் பெருமானின் திருவடிகளைப் போற்றி விழைஞ்சுகிறேன்.

ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயம், ஆகம நெறிப்படி, 1.2.2013இல் மகா கும்பாபிஷேகம் காணவிருப்பதை அறிந்து மகிழும் வேளையில், இந்தக் கோயில் இது போன்ற கணக்கிலடங்கா மகா கும்பாபிஷேகங்களைக் கண்டு, நம் சமயத்துக்கும் மக்களுக்கும் சமயத் தொண்டும் சமுதாயத் தொண்டும் வழங்கி, அருள்நெறிக்கு வழி காட்ட வேண்டும் என்று எல்லா வல்ல அருளாளனாகிய இறைவனின் திருவடிகளை இறைஞ்சி வாழ்த்துகிறேன்!

"மயில்போற்றி வேல்போற்றி மறியாடு போற்றி
வன்காற் படைச்சேவ லும்போற்றி நந்தூர்
உயர்வெண் டிரைச்சிந்து வும்போற்றி முருகோன்
உபயப் பதம்போற்றி யுரைசெந்தில் போற்றி"
(நந்து=சங்கு; சிந்து=கடல்)

(சுப்பிரமணிய புஜங்கம், தமிழாக்கம்: கவியரசு கு.நடேச கவுண்டர்)

இறை பணியில்,

க. திலகவதி
க. திலகவதி
24.12.2012





உ
சிவமயம்



**சிவாகம ரத்னம்,**
**சந்தன அலங்காரச் செம்மல்,**
**சிவஸ்ரீ V. சுவாமிநாதக் குருக்கள் (ரவி),**
**205/1, ஒத்தைத்தெரு, அக்ரஹாரம்,**
**மச்சுவாடி, புதுக்கோட்டை - 622 001.**
**தமிழ்நாடு, தென் இந்தியா.**

---

பெருமதிப்பிற்குரிய ஐயா,

அவர்களுக்கு அநேக ஆசீர்வாதம். வருகிற 01-02-2013 வெள்ளிக்கிழமை கோலாலம்பூர் செந்தூல் ஸ்ரீ தண்டாயுதபாணி கோயில் மஹா கும்பாபிஷேகம் நடைபெறுவது குறித்து மிக்க மகிழச்சி.

ஸ்ரீ முருகப்பெருமான் ஞான உருவாய் காட்சி தந்து இப்பூவுலகில் கண்கண்ட தெய்வமாய் உயிர்களைக் காத்து வருகிறார். செந்தூல் ஸ்ரீ தண்டாயுதபாணி கோயில் மலேசிய நாட்டின் பழமையான திருத்தலங்களுள் முக்கியமானது.

ஸ்ரீ தண்டாயுதபாணி திருக்கோயிலில் தன வணிகர் என அழைக்கப்படும் நகரத்தார் பெருமக்கள் முயற்சியாலும், உழைப்பினாலும் திருப்பணிகள் செய்யப்பட்டு கும்பாபிஷேகம் நடைபெற உள்ளது. கல்வி, கோயில், சமுதாயம் என அறப்பணிகள் உலகம் முழுவதும் செய்து வரும் நகரத்தார் பெருமக்கள் மென்மேலும் உயர்வைப் பெற ஸ்ரீ தண்டாயுதபாணி பாத மலர் பணிந்து வேண்டுகிறேன்.

மஹா கும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற நகரத்தார் இஷ்ட தெய்வமாகிய ஸ்ரீ தண்டாயுதபாணி இறையருள் வேண்டுகிறேன்.

இப்படிக்கு
தங்கள் உண்மையுள்ள,

V. [signature]

**(V. சுவாமிநாதகுருக்கள் (ரவி)**
புதுக்கோட்டை





உ

# தலைமை ஸ்தபதி
# வாழ்த்துச் செய்தி

*உருவாய் அருவாய், உளதாய் இலதாய்,*
*மருவாய் மலராய், மணியாய் ஒளியாய்க்,*
*கருவாய் உயிராய்க், கதியாய் விதியாய்க்,*
*குருவாய் வருவாய், அருள்வாய் குகனே.*

தாய் அன்னை பராசக்தி, தந்தை பெருமான் பரம்பொருள் தந்த, வேல் கொண்டு விண்ணவர் இடர் அகற்றி, மண் காத்திட வேல்முருகனாய் எங்கும் விளங்கிடும் எம்பெருமான் கோல் கொண்டு நின்று அருளாட்சி செய்திடும் ஸ்தலங்களில் மிகப் பழமை வாய்ந்த ஸ்தலமாக விளங்கிடும் மலேசிய நாட்டில் செந்தூல், வீரம் கொண்டு சூரனை வதைத்து ஆணவத்தை அழித்து இருபிளவாக்கி சேவலைக் கொடியாக்கி மயிலை வாகனமாக்கி கருணை புரிந்து வரும் கந்தவேல் ஞான சொருபமாய் தந்தைக்கு பிரணவப் பொருள் உரைத்த பெருமாள், அன்பர்கள் அனைவருக்கும் ஞானம் தந்திடும் பொருட்டு தண்டாயுதபாணியாக அருளாட்சி செய்திடும் உயர்வான ஸ்தலமாய்

| | | |
|---|---|---|
| தண்டம் | - | ஞானத்தின் சின்னம் |
| பாணி | - | பொருந்தி இருப்பவர் |

விளங்கிடும் இத்தலத்திற்கு மஹா கும்பாபிஷேகம் நிகழ்ந்திடும் இவ்வேளையில் இத்திருப்பணியில் எனக்கு வாய்ப்பளித்த மதிப்பிற்குரிய காரியதரிசி மீனாட்சி சுந்தரம் அவர்களுக்கும் மற்றும் அறங்காவலர்கள், அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றியினையும் வாழ்த்துக்களையும் தெரிவிப்பதில் மகிழ்ச்சியடைகிறேன்.

எல்லாம் வல்ல ஸ்ரீ தாண்டாயுதபாணி திருவருளும் ஆசியும் அனைவருக்கும் கிடைக்க வேண்டி வணங்குகின்றேன்.

அன்புடன்,

**Rtn, G.R. நடராஜன் M.C. ஸ்தபதி**
1, A, தியாகராஜ நகர், சீர்காழி,
H/P மலேசியா: 013-398 8343
இந்தியா : 0091-7373733343





# ஸ்ரீ தண்டாயுதபாணி

- சித்தாந்த சரபம், சைவப்பெரியார் டான்ஸ்ரீ மு. சோமசுந்தரம், கோலாலம்பூர்.

"அருவமு முருவுமாகி அநாதியாய் பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகக்
கருணைகூர் முகங்களாறுங் கரங்கள் பன்னிரண்டுங் கொண்டே
ஒருதிருமுருகன் வந்தாங் குதித்தனன் உலகமுய்ய."

- கந்த புராணத் திருவவதாரப் படலம், செ. 92

இறைவன் உயிர்களை உலகங்களிற் பிறக்கச் செய்து, வாழும்படி வழி நடாத்திப் படிமுறையில் பக்குவமடையச் செய்து, அருள்புரியப் பல நிலைகளில் தோற்றம் கொள்கிறான். அவை (1) அருவ (லய என்னும் சத்தன்) நிலை, (2) அருஉருவ (போக என்னும் உத்தியுக்தன்) நிலை, (3) உருவ (அதிகார என்னும் பிரவிருத்தன்) நிலை.

முதலாவதாகக் கூறப்பட்டுள்ள நிலையில் உள்நின்று அதாவது தன்மையாக உணர்த்தக் கூடிய பக்குவமடைய ஆணவமல பந்தம் மாத்திரம் சற்றே உடைய விஞ்ஞானாகலர் (அதாவது விஞ்ஞானத்தால் கலை அகன்ற) வர்க்க உயிர்களுக்குச் சிவபெருமான் தானே தன்மையாக உணர்த்தி அருள்புரிகின்றான். இரண்டாவதாகக் கூறப்பட்டுள்ள நிலையில் அதாவது முன்நின்று உணர்த்தக்கூடிய ஆணவம், கன்மம் ஆகிய இருமல பந்தமுடைய பிரளயாகல (அதாவது ஒரு பிரளயத்தில் கலை அகன்ற) வர்க்க உயிர்களுக்குச் சிவபெருமான் தானே தனது நிஜவடிவங்களில் ஒன்றைக் காட்டி முன் நின்று உணர்த்தி அருள் புரிகின்றான். மூன்றாவதாகக் கூறப்பட்டுள்ள மும்மல அதாவது ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்றின் பந்தமுடைய சகல (அதாவது முற்றும் கலையைப் பொருந்திய) வர்க்க உயிர்களுக்கு ஒரு அதிட்டான குரு அல்லது ஆவேச குருவின் வடிவில் தோன்றி படர்க்கையாக, மானைக் காட்டி மானைப் பிடிக்கும் பாவனையில் உணர்த்தி அருள்புரிகிறான். இறைவன் கொள்ளும் வடிவங்கள் போக வடிவம், யோக வடிவம், வேக (உக்கிரமான) வடிவம் என மூவகைத்தும் உள்ளன.

சகல வர்க்கத்து உயிர்களை வழிநடாத்திப் பக்குவமடையச் செய்து, குருவாக எழுந்தருளி அவர்களுக்கு உபதேசம் செய்து, அவர்கள் மெய்யுணர்வு பெற்ற நிலையில் அவர்களுக்கு அருள் புரிவதற்காகவே இறைவன் தனது நெற்றிக் கண்ணிலிருந்து ஆறு தீப்பொறிகளை வெளிப்படுத்தி, அவை சரவணப் பொய்கையில் சேர்க்கப்பட்டுக் குளிர்ந்து, ஆறு குழந்தைகளாகத் தோன்றிய நிலையில், சிவபெருமானும் உமாதேவியும் சென்று அவற்றைக் கண்டு களிப்புற்று, உமாதேவி அக்குழந்தைகள் ஆறையும் சேர்த்தெடுத்து உச்சி முகந்து முத்தமிட்டபோது, அக்குழந்தைகள் ஆறும் ஒருடலும், ஆறுமுகங்களும், பன்னிரு கரங்களும் உடையதாகி, அந்நிலையில் உமாதேவி குழந்தைக்குத் கந்தன் எனப்பெயர் சூட்டினார். கந்தன் என்பதற்கு இணைக்கப்பட்டவன், உயிர்களுக்குப் பற்றுக்கோடாக, அண்டத்திலும் பிண்டத்திலும் ஆதார மூர்த்தியாக இருப்பவன் என்று பொருள். மேலே குறிப்பிட்டுள்ள கந்தபுராணச் செய்யுளின் உட்குறிப்பு இதுவே.

இச்சிவபாலனுக்கு விளங்கிய மற்றும் பல பெயர்கள்: சுப்பிரமணியன், முருகன், குமரன், குகன், விசாகன், சத்திதரன், சரவணபவன், காங்கேயன், கார்த்திகேயன், கடம்பன், சண்முகன், ஆறுமுகன், தேவசேனாதிபதி, தாரஹாரி, சேனானி, பிரமசாஸ்தா, வள்ளி கல்யாண சுந்தரர், பாலசுவாமி, கிரவுஞ்ச பேதனர், செவ்வேள், சிசிவாகனர், செங்கோட்டன், சிவகுருநாதன், கதிர்வேலன், ஞானபண்டிதன், வேலாயுதன், தண்டாயுதபாணி, பழநியாண்டவர். மேலும் சம்பவங்களையொட்டி ஏற்பட்ட பலபெயர்களும் உண்டு. அவற்றையெல்லாம் கூறின் விரியும்.



இவ்வாறு தோற்றமுடைய முருகப்பெருமானின் சிறப்பை, அவரது திருவருளைப் பெற்ற நக்கீர தேவர் பத்துப்பாட்டிற்குக் கடவுள் வாழ்ந்ததாக அமைந்த திருமுருகாற்றுப்படையில் அகவற்பாவால் 317 வரிகளிலும், முருகப் பெருமானால் திருவருணையில் தடுத்தாட்கொள்ளப்பட்ட அருணகிரிநாத சுவாமிகள் அவரது உபதேசத்தைப் பெற்று அருளிய திருப்புகழில், ஆறுபடை வீட்டுத்திருப்புகழாக 362 செய்யுட்களிலும் விளக்கிக் கூறியுள்ளதும் ஈண்டு குறிப்பிடத்தக்கன.

ஆறுபடை வீடுகளில் முதலாவது **திருப்பரங்குன்றம்**. இது மதுரைக்குத் தென்மேற்கில் நான்கு மைலில் உள்ள தலம். தெய்வானையைத் திருமணம் புரிந்த தலம். சம்பந்தர், அப்பர் பாடல் பெற்ற தலம். தீர்த்தம் சரவணப்பொய்கை. மலை வலம் வரத்தக்க தலம். நக்கீரர் திருமுருகாற்றுப்படைபாடி, பூதத்தால் தானும் மற்றும் 999 பேர்களும் சிறைப்படுத்தப்பட்டிருந்த குகை, வேலாயுதப் பெருமானின் திருவருளால், வெடித்து எல்லோரும் விடுதலையடைந்த தலம். இதற்குக் கிரிப்புராணம் உண்டு. இத்தலத்திற்குப் பரங்கிரி, பரங்குன்று, திண்குன்று, பரகிரி, பரமாகிரி, பரல்சிலம்பு என்ற பெயர்களும் உண்டு. சக்தியுடன் கூடிப் பொதுநிலைக்கு வந்து படைத்தலாதித் தொழில்களை நடாத்துவதைக் குறிப்பது இப்படைவீடு.

ஆறுபடை வீடுகளில் இரண்டாவதான **திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்)** திருநெல்வேலியிலிருந்து 35 மைலில் உள்ள தலம். கடற்கரையில் உள்ளது. குமரகுருபரர் முருகன் அருள்பெற்று வாய்பேசத் தொடங்கியதும் "கந்தர் கலிவெண்பா" பாடிய தலம். கந்த மாதனம், சந்தனாசலம், திருச்செந்தில் என்ற பெயர்களும் இதற்கு உண்டு. சமுத்திர தீர்த்தமும், நாழிக்கிணற்றுத் தீர்த்தமும் விசேடமானவை. இங்கு பிரம்மா சமுத்திர தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து இழந்த தலையைப் பெற்றதாகவும், பாண்டிய மன்னனின் புத்திரி அங்கசுந்தரி சாபத்தால் அடைந்த குதிரை முகம் மாறி அழகிய முகம் கிடைக்கப்பெற்ற தீர்த்தமாகையால் அதற்கு வதனாரம்ப தீர்த்தம் என்று பெயர் ஏற்பட்டது. இங்கிருந்துதான் முருகப்பெருமான் சூரசம்ஹாரஞ் செய்ததாக வரலாறு கூறுகின்றது. "செந்திலை உணர்ந்து உணர்ந்து உணர்வுற", "கயிலை மலையனைய செந்தில்", "மகாபுனிதந்தங்கும் செந்தில்" என்னும் திருப்புகழ்த் திருவாக்கால் இத்தலத்தின் பெருமை புலப்படும். "நஞ்செந்தின் மேய வள்ளி மணாளர்க்குத் தாதை கண்டாய்" என்று அப்பர் சுவாமிகள் பாடியுள்ளார். இதற்கும் தலபுராணம் உண்டு. பாச விமோசனஞ் செய்து உயிர்களை அருள் வசப்படுத்துவதைக் குறிப்பது இப்படைவீடு.

ஆறுபடை வீடுகளில் மூன்றாவதாகத் **திருவாவினன்குடி (பழநி)**. திண்டுக்கல்லிருந்து 36 மைலில் உள்ள தலம் திருவாவினன்குடி ஊர். முருகப் பெருமான் உயிருக்கு உயிராதல் தன்மையால் உலகோடு உடனாய் நிற்கும் நிலை உணர்த்தப்பட்டுள்ளது. முருகப்பிரான், திருமால் முதலிய தேவர்கள் பிரமனைச் சிறை மீட்கும் பொருட்டு வந்து தன்னைக் காண "வள்ளியம்மையாரோடு ஆவினன்குடியில் உரைதலும் உரியன்" என்று கூறப்பட்டுள்ளது. முனிவர்கள் முன் செல்ல, கந்தர்வர் குழாத்துப் பெண்டிர்கள் இனிய யாழிசைத்துக் கொண்டும், அவர்களில் ஆடவர்கள் பாடிக்கொண்டும் முனிவர்களின் பின்செல்ல, தேவர்களும், இந்திரனும், திருமாலும், சிவபெருமானும், தேவர் குழாத்திற்குத் தலைவர்களாகப் பின்செல்ல, வசுக்கள், மருத்துவர், ஆதித்தர், உருத்திரர் என்னும் உயர்நிலை பெற்ற முப்பத்து மூவரோடும் பதின்னெண் வகைப்பட்ட தேவகணங்கள் விண்வழியாக இன்பம்மிக்க மண்ணுலகிலே வந்து தோன்றி வள்ளி நாச்சியாருடனாய முருகப் பெருமானைத் திருவாவினன்குடியென்னும் ஊரில் கோயில் கொண்டிருப்பவனைக் காண்கின்றனர். திருவாவினன்குடியில் மேலேயுள்ள சிவகிரி, சத்திகிரி என்னும் மலைகளுள் சத்திகிரியில் சத்திதரனாகிய முருகப்பெருமான் ஸ்ரீ தண்டாயுதபாணியாகத் துறவுக் கோலத்தில் எழுந்தருளியிருப்பதாலும், அக்கோலத்தில் இருப்பவரை பார்வதி தேவியார் உலகைச் சுற்றி முதலில் வந்து சேர்ந்து தாய் தந்தையரைச் சேவிப்பவர்க்கு மாங்கனி கொடுக்கப்படுகிற சம்பவத்தில் முருகப் பெருமானுக்கு மாங்கனி கொடுக்கப்படாததற்குக் காரணம் "பழம் நீ" என்பதே, என்று கூறியது சிவபெருமான் பார்வதி தேவியாரிடம் முருகப்பெருமான் "ஆதலினால் நமது சத்தி அறுமுகன், அவனும் யாமும் பேதமன்றால் நம் போற் பிரிவிலன், யாண்டும் நின்றான், ஏதலமில் குழவிபோல்வான், யாவையும் உணர்ந்தான், சீரும், போதமும், அழிவில் வீடும் போற்றினர்க்கு அருள வல்லான்!" என்று கூறியதால் "பழம் நீ" என்றது, முருகப் பெருமான் ஆருயிர்களுக்குப் பேரா இயற்கைப் பேரின்பமயமான முத்திக்கனியை அருள்பவனாகையால் அவனுக்கு மாங்கனி கொடுக்கப்படாதது இவ்வுட் குறிப்பின் அடிப்படையிலேயே என்பதும், அத்தகைய பிரான் தண்டாயுதபாணிக் கோலத்தில் சத்திமலையில்





கோயில் கொண்டெழுந்தருளியதால், அம்மலை பழநி என்றாயிற்று. கிரிப்பிரதக்ஷணம் வரலாம். தலபுராணமும் உண்டு. பழநி ஊரிலும் சுப்பிரமணிய சுவாமி கோயில் இருக்கிறது. அதற்குச் சிவகிரி, சிவமலை, சித்தன்வாழ்வு, பழனாகிரி என்ற பெயர்களும் உண்டு. கந்தர் அலங்காரத்தில் "படிக்கின்றிலைப் பழநித்திருநாமம், படிப்பவர்தாள் முடிக்கின்றிலை" என்றும், திருப்புகழ் "சிவமயமாம் நின் பழநி", "பதினாலுலகோர் புகழ் பழநி", காசியின் மீறிய பழநியங்கிரி", "அதிசயம் அநேகமுற்ற பழநிமலை" என்றெல்லாம் இத்தலத்தைச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. இப்பழநிமலையில் உள்ள ஸ்ரீ தண்டாயுதபாணித் திருக்கோலம் பாசநீக்கம் அடைந்த உயிர் உலகத்தைத் துறந்து, சிவனையே தியானித்து, சிவயோக நிட்டையில் நிலை பெறுவதை உணர்த்துவது.

வெறுங்கர்மயோகம் சிவயோகத்தை நோக்க அவயோகமே என்பதும், பதஞ்சலியின் யோக தெரிசனம், ஹடயோகம் போன்றவை உடல் நலத்துக்கே ஏதுவாகுமேயன்றி, சிவயோகத்திற்கு நிகராகாது என்பதும், அருணகிரிநாத சுவாமிகள் அருளிய கந்தர் அலங்காரச் செய்யுள் 71 "துருத்தி எனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றி முறித்து அருத்தி உடம்பை ஒருக்கில் என்னாம் சிவயோகம் எனுங் கருத்தையறிந்து முகமாறுடைக் குருநாதன் சொன்ன கருத்தை மனத்தில் இருத்தும் கண்டீர் முத்திகைக் கண்டதே" என்றதும் ஈண்டு குறிப்பிடத்தக்கன. தண்டபாணி என்ற சொற்றொடரில், தண்டு என்ற சொல்லின் அகராதிப் பொருட்கள் (1)கோல், (2) கதை, (3) உலக்கை, (4) முதுகுத்தண்டு (Spinal colums அதாவது சுழுமுனைநாடி) என்பனவாகும். இச்சொல்லை வினைச் சொல்லாக உபயோகப்படுத்தும்போது (1) வருத்து அதாவது தண்டித்தல் செய், (2) இணைத்தல் செய் (to join அதாவது செறியச் செய்) என்பனவாகும். எனவே ஸ்ரீ தண்டாயுதபாணிக் கோலம் உயிர்களை இறைவனோடு இணைக்கும் அல்லது செறிந்திருக்கச் செய்யும் யோகநிலையைக் குறிப்பது. தண்டாயுதம் ஞானநிலையைப் பெறுவதற்கு ஏதுவான நிலைமையையும், வேலாயுதம் ஞானநிலையையும் முறையே பெறச் செய்வன.

திருமுருகாற்றுப்படையில் நான்காவது படைவீடாகிய **திருவேரகம் (சுவாமிமலை):**

கும்பகோணத்திற்கு மேற்கே நான்கு மைலில் உள்ள தலம். முருகப்பெருமான் சிவபிரானுக்கு பிரணவோபதேசம் செய்த திருப்பதி. இதனால் இத்தலத்திற்குச் சுவாமிமலை. சுவாமிக்கு சுவாமிநாதன், தகப்பன் சுவாமி, புத்ரகுருக்கள் என்ற திருநாமங்கள் வழங்கி வருகின்றன. நக்கீர தேவர் சுவாமியை "வாரிது வந்து ஏரகத்துறைதலும் உரியன்" என்கிறார் திருமுருகாற்றுப்படையில். அருணகிரிநாத சுவாமிகள் பாததரிசனம் பெற்ற தலம் இது. அருணகிரிநாதர் "பரமகுருக்கொரு குருக்களென' முத்தர் புகழ் தம்பிரானே" என்கிறார். இப்படை வீடு பக்குவமடைந்த ஆன்மாவுக்குக் குருவாக எழுந்தருளி உபதேசித்து மெய்யுணர்வளிப்பதை" குறிப்பது.

திருமுருகாற்றுப்படையில் ஐந்தாவது படைவீடாகிய **குன்று தோறாடல்** மலைகள் மீதுள்ள பல முருக தலங்களுக்கும் பொதுவாக உரியது. முருகப்பெருமான் குறிஞ்சி நிலமக்கள் வணங்கும் தமிழ்த் தெய்வமாகையால் "மலைக்கிழவோன்", "கிரி ராஜன்", "குறிஞ்சி வேந்தன்" என்றெல்லாம் விளங்குகின்றான். குறிப்பாகத் தணிகைமலை, வள்ளிமலை, திருச்செங்கோடு, குன்றக்குடி போன்ற புகழ் பெற்ற தலங்கள் இதில் அடங்கும். மெய்யுணர்வு பெற்ற உயிர் மூர்த்தி, தலம், தீர்த்த உணர்வுடன் சிவநல்வினையில் ஈடுபட்டிருப்பதை இப்படை வீடு உணர்த்துகிறது.

திருமுறுகாற்றுப்படையில் ஆறாவது படைவீடாகிய **பழமுதிர்ச்சோலை** மதுரைக்கு வடக்கே பன்னிரண்டு மைலிலுள்ள தலம். இத்தலத்திற்கு அழகர் கோயில் என்றும் பெயர் உண்டு. இது அடிவாரத்தில் விஷ்ணு தலமாகவும், மேல்மலை முருகத்தலமாகவும் இயற்கை வளப்பம் மிக்க சோலையாகவிருப்பதால் சோலைமலை எனவும் அமைந்துள்ளது. அருவியை உடையதால் "நூபுரம்" இரங்கு கங்கை" என்றதால் சிலம்பாறு ஒலிக்கும் தலமாக உள்ளது. கந்தர் அந்தாதியில் இத்தலம் "தண்கார்வரை" எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. பரிபாடல் "மாலிருங் குன்றம்" எனவும், "இருங்குன்றம்" எனவும் கூறுகின்றது. "திருமாலிருஞ் சோலை" எனவும் வழங்குகின்றது. இத்தலத்துப் பிரதான மூர்த்தியின் பெயர் "பரமசாமி" என்று கல்வெட்டுக்களிற் காணப்படுவதால், இத்தலத்தில் முன்பு சிவாலயமும் இருந்ததெனத் தெரியலாம். சிலப்பதிகாரத்தில் காடுகாண் காதை இதைக் குறிப்பிடுகின்றது. இங்கு சரவணப்பொய்கை உள்ளது. இப்படைவீடு உயிர்கள் முத்திப்பேறடைவதைக் குறிப்பிடும் தலமாக உள்ளது.



இந்த ஆறுபடைவீட்டின் முக்கியத்துவத்தைக் குமரகுருபர சுவாமிகள் கந்தர் கலிவெண்பாவின் இறுதியில் "ஆறு திருப்பதி கண்டு ஆறெழுத்தும் அன்பினுடன் கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே" எனப் புகழ்ந்துள்ளார்.

இனி மூன்றாவது படை வீடாகிய பழநிலையில் ஸ்ரீ தண்டாயுதபாணியாகத் தலையில் உருத்திராக்ஷக்கண்ணியும், நெற்றியில் திரிபுண்டரமாகத் திருநீறும், கண்டத்தில் ருத்திராக்ஷமும், கழுத்தில் ருத்திராக்ஷக்கண்டிகை (மாலை)யும், கையில் தண்டமும், அரையில் கோவணமும், தரித்த வடிவத்தில் துறவுநிலையையும் சிவயோக சாதனையையும் உணர்த்தும் பழநி ஆண்டவராக விளங்குகின்றார். இக்கோலத்தை "மணிமேகலை" என்னும் தொகுப்பு நூலில் செய்யுள் 6, கையில் தண்டமும், மருங்கில் ஒருகை, மார்பில் அசையும் மாலை, அருகில் அஞ்சும் வேல், காதில் மகர குண்டலம், இடுப்பில் நல் அரைஞாண் என்னே அவன் அழகு!" எனக் குறிப்பிடுகிறது. அருணகிரிநாத சுவாமிகள் கந்தர் அநுபூதி செய்யுள் 15ல் "குருபுங்கவ எண்குண பஞ்சரண்" என்றும், செய்யுள் 41ல் "யோகா சிவஞானோப தேசிகனே" என்றும், செய்யுள் 51ல் "குருவாய் வருவாய் அருள்வாய் குகனே" என்றும், மேலும் அவர் திருப்புகழ் செய்யுட்கள் 871லும் 1212லும் பழநிப்பதியில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள ஸ்ரீ தண்டாயுதபாணியை விளித்து அருள் பெறவும் ஞானிகளோடு இணங்கவும் பிரார்த்தித்துப் பாடியுள்ளார்.

திருவகுப்பில் முதலாவது வகுப்பாகச் சீர்பாத வகுப்பையும், இருபத்து நான்காவது வகுப்பாகத் திருப்பழநி வகுப்பையும், கடைசியில் இருபத்தைந்தாவது வகுப்பாகத் திருபரங்கிரி வகுப்பையும் அமைத்து நூலை முடித்திருப்பதும், திருவடிப்பேறே உயிரின் வாழ்க்கை இலக்ஷியம் என்பதையும், உலகு உடல் யான் எனது என்னும் உயிர்ப் பற்றற்ற முழுத்துறவும் நிலையான சிவயோகத்தாலேயே உயிர் திருவடியைப் பொருந்திச் சிவபோகமான பேரா இயற்கைப்பேரின்பத்தை எப்போதும் துய்த்துக் கொண்டு முடிந்த முத்தி நிலையில் ஆனந்த மேலீடில் ஆழ்ந்திருக்கும் என்பதையும் குறிப்பதாகும்.

**24. திருப்பழநிவகுப்பு**

"எந்த வினையும் பவமும் எந்த விடமும் படரும்
எந்த இகலும் பழியும் எந்த வழுவும் பிணியும்
எந்த இகழ்வும் கொடிய எந்த வசியும்
சிறிதும் அணுகாமலே...............

மேலும் அருணகிரிநாத சுவாமிகள் பழநித் திருப்புகழில் யோகநிலையில் விளங்கும் பழநியாண்டவரை வழிபடுவோர் பெறும் பேறுகளை 130 பாடல்களில் கூறியவற்றுள் 42 பேறுகளைக் கீழே காண்போம்.

1. மாகயிலையிலேகும் அருள் பெறுவர்.
2. மாதர் மயக்கத்தை மாயா காரியமென அறியும் அறிவைப் பெறுவர்.
3. ஞானிகளோடு இணங்கும் நுண்ணறிவைப் பெறுவர்
4. பூவும் நீரும் சொரிந்து இருபாத பங்கயத்தை வணங்கிப் பூசை செய்யும் அருளைப் பெறுவர்.
5. முற்றும் உணர்ந்த தியான மூர்த்தியான நிலையில் உள்ளத் தாமரையில் விளங்குகின்ற மௌன சுந்தர ரூபியான யோக நாயகனால் ஆண்டருளப் பெறுவர்.
6. திருப்புகழைத் தினந்தோறும் தவறாமல் பாடவேண்டுமென்ற அன்பைப் (பக்தி சிரத்தையை)ப் பெறுவர்.
7. தண்டாயுதபாணியாக விளங்கும் தேசிகர் அருளிய உபதேச மந்திரப்பொருளையே துணையாகக் கொள்ள அருள் பெறுவர்.
8. உயிர் தன்வச மழிந்து தனக்கு உள்ள சேமநிதி அந்தத் தண்டாயுதபாணியே என நினைந்து அப்பெருமானையே புகழ்வர்.





9. அறிவு மனத்திற் பெருகி வரவும், இடர்கள் நீங்கவும், திருவருளால் ஞான இன்பத்தை அருளப் பெறுவர்.

10. பக்தர்களுக்கு மயில்மீது அற்புதமாக எழுந்தருளி வருகின்ற காட்சியுடன் அருளும் பெறுவர்.

11. இப்பெருமானின் திருவடிகளைப் பரவுதல் நல்லதென்று மனத்தில் அறிந்து, என்றும் திருக்கோயிலுக்குச் சென்று தொழுகின்ற பெருமையின் பண்பை தனது அறிவினில் அவனருளால் பெற்று அவ்வருளால் இன்பமும் நற்பண்பும் உற்சாகமும் சேர்ந்த பூரண அன்பைப் பெறுவதற்கான வழியும் அருளப் பெறுவர்.

12. பொதுமகளிரின் கலவிச் செயலின் இன்பமே இனிமையானதென்று மனம் நாள்தோறும் அலையாதபடி பெருமானின் கருணை வழியே ஆண்டருளப் பெறுவர்.

**ஸ்ரீ தண்டாயுதபாணியை வழிபட்டுப் பிரார்த்திக்க வேண்டியவை:**

13. இறைவனின் அன்பை வேண்டிப் பிராத்திப்பர்.

14. அடியாரோடு கூடப் பிரார்த்திப்பர்.

15. திருவடியைப் பற்றி நின்று ஈடேறப் பிரார்த்திப்பர்.

16. பிறவிக்கடல் விட்டு உயர் நற்கதியைப் பெற அருளை நாடிப் பிரார்த்திப்பர்.

17. இறைவனது உயர்வும் ஒப்புமிலாத கிருபையைத் தரவும், ஒர் உபதேசச் சொல்லை யருளவும் பிரார்த்திப்பர்.

18. இறைவனைத் தியானிக்கும் கருத்தையும் ஞானத்தையும் அருளப் பிராத்த்திப்பர்.

19. தன்னையும் சஞ்சலிக்கும் மனத்தையும் இறைவசப்படுமாறு அருள்புரியவும் அடிமை கொள்ளவும் பிரார்த்திப்பர்.

20. கீர்த்தி உற அதாவது பிரசித்தமடைய அன்பு கூர்ந்து அருளவும், திருவடியைத் தந்தருளவும் பிரார்த்திப்பர்.

21. அரகரசிவாய என்று தினமும் நினைக்க அருள் புரியப் பிரார்த்திப்பர்.

22. மெய்ஞான இன்ப அமுதை ஒழியாதருந்த அருள் புரியப் பிரார்த்திப்பர்.

23. இருவினை பொதிந்த பிறப்பு இறப்பை அழிக்கத் திருவடியை வழங்க அருள்பாலிக்குமாறு பிரார்த்திப்பர்.

24. தண்டையணிந்த திருவடியைத் தனது தலையிற்சூடி அமுது அமுது அருளை விரும்பி இறைவனது இனிய புகழை விளம்ப அருள் புரியப் பிரார்த்திப்பர்.

25. இறைவனது காவிய நூல் ஆராயும்போது இடர்ப்பாடு ஏற்படாதிருக்க அருள வேண்டுமெனப் பிரார்த்திப்பர்.

26. பழநிக்குப் போய் பிறவி என்கின்ற வினை நீங்கத் தரிசித்துக் குராமலர்த் திருவடியை பற்றும்படியான நாளைப் பெரிதும் விரும்பிப் பிராத்த்திப்பர்.

27. இறைவனைப் போற்றி வழிபடும் பணியைத் தந்தளுளப் பிரார்த்திப்பர்.

28. பழநி மாமலையில் வீற்றிருக்கும் பெருமானை முத்தியருளப் பிரார்த்திப்பர்.

29. எமனது பாசக்கயிறினின்றும் விலகி பழநியாண்டவரது திருவடித் தாமரையை அடைந்து தமிழ்க்கவிகளை ஓதிப்பணிந்துருகும்படியான அன்பையருளப் பிரார்த்திப்பர்.

30. பரமஞானமயமான சிவகதியைப் பெறத் திருநீற்றை, நல்ல நிலையைத்தான் பெற, அருளித் திருவடியையும் தந்தருளப் பிரார்த்திப்பர்.

31. இக்கலியுகத்தே புகழ்ச் சிவபதத்தே பதித்து அருள்வாயே எனப் பிரார்த்திப்பர்.

32. தன் மனது பதமுற, எனது தலை பதமருள்வாயே என, அதாவது திருவடிதீக்ஷை பெறப் பிரார்த்திப்பர்.



33. சீவாத்மாவும் இறைவனும் ஆகிய இருவரும் ஒன்று சேரும் முடிவை அடைந்து சிவஞானம் என்னும் யானையின் மேல்ஏறி அற்புதநிற் குண நிலையைப் பெற்றுப் பொலிவுற அருளப் பிரார்த்திப்பர்.

34. கல்விக்கு முடியவில்லை, அது முடிய பெருமானை நின்று பக்தியால் செம்மையான சொற்களால் துதிக்க அருள் புரியப் பிரார்த்திப்பர்.

35. மெய்ப்பக்தியினைப் பெறுமாறு உள்ளம் குளிரும் புத்தியை அருளப் பிரார்த்திப்பர்.

36. சிவலோகத்தில் உள்ளவர்களுடன் கூடி விளையாட அருள்புரியப் பிரார்த்திப்பர்.

37. யோகநிலையிற் கேட்கப்படும் பாட்டொலி நாதத்திலும், சிலம்பொலியுடன் கழலொலியாலும் அன்பு பெருகும்படியாக அருளப் பிரார்த்திப்பர்.

**ஸ்ரீ தண்டாயுதபாணியை வழிபடுவோர் பெறும் பிற பேறுகள்:**

38. திருப்புகழ் என்னும் சந்தப்பாவால் இறைவனைப் புகழும் உரிமையைப் பாக்கியமாகப் பெற்ற அடிமையானவன் உலக வாழ்வை விட்டு அந்த ஆண்டானையே நம்பி இருப்பன்.

39. செய்யுள் 152ல்

"ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்
ஆறுமுகம் ஆறுமுகம் என்று பூதி
.......................................................
..............ஆனை முக தேவர் துணைவா சிகர் அண்ட கூடம்\
சேரும் அழகார் பழநிவாழ் குமரனே
பிரமதேவர் வரதா முருக தம்பிரானே"

எனப் பழநிப் பெருமானை வழிபடுபவர் வியாகூலப்பட நேர்ந்தால் யார்தான் அவரை வழிபடுவர் என்று பாடியதன் மூலம், அவரை வழிபடுபவரின் வியாகூலம் நிச்சயம் தீர்ந்து அடியார் துணையையும் பெறுவர் என்று அறுதியிட்டுத் கூறப்பட்டுள்ளது.

40. பழநி மலை எனும் ஊரைச் சேவித்து அறியேனே பெருபுவியில் உயர்வரிய வாழ்வைத் தீரக் குறியேனே, பிறவியற நினைகுவன் என் ஆசைப் பாட்டைத் தவிரேனோ என்றதால் ஆசையை அறுத்து மரணமில்லாப் பெருவாழ்வைப் பெறுவர் என்றது.

41. பழநியாண்டவரது பிரசித்தமாகிய கனதனமொத்த மேனியும், முகம் ஆறும், அதிபல வஜ்ரவாகும். அயில் நுனைவெற்றி வேலதும், அரவு பிடித்த தோகை (மயிலும்), உலகமும் அதிர அரற்று கோழியும், அடியர் வழுத்தி வாழ்வுறும் அபிநவ பத்மபாதமும் மறவேனே என ஆண்டவரின் திருவுருவத்தை மறவாதிருக்க அருள் பெறுவர் என்றது.

42. ஆரவாரமுடன் இருந்தாலும் விரிந்த தாமரை மலர்ப்பாதத்தை மறவாதிருக்கும் அருளைப் பெறுவர் என்றது.

**திருவாவினன்குடி (பழநி)யில் அருணகிரிநாத சுவாமிகள் அருள்பெறப் பாடிய திருப்புகழ் செய்யுள் 871:**

"நாதவிந்து கலாதி நமோ நம
வேத மந்தர சொரூபா நமோ நம
ஞானபண்டித சாமீ நமோ நம வெகுகோடி
ஞானசம்பு குமாரா நமோ நம..................





சேரர் கொங்குவை காவூர் நனாடதில்
ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே".

குறிப்பு: இப்திருப்புகழில் யோக நிலையும், போக நிலையும் கூறியிருப்பது சிவயோகத்தால் சிவபோகமடைவதைக் குறிப்பிடுகின்றது.

**திருவினன்குடி (பழநி)யில் ஞானிகளோடு இணங்க அருள் வேண்டிய திருப்புகழ் செய்யுள் 1212:**

"மூலமந்திரம் ஓதல் இங்கில்லை.......
ஆவினன்குடி வாழ்வு கொண்டருள் பெருமாளே."

**குறிப்பு:**
இத்திருப்புகழில் அருணகிரிநாத சுவாமிகள் பொதுவாக மக்களுக்கு உள்ளவற்றையும், இல்லாதனவற்றையும் குறிப்பிட்டு, மக்கள் திருந்தி ஞானசம்பந்தர் போன்ற மெய்அடியார்களோடு இணங்கி நல்வாழ்வு பெற முருகப்பெருமானை வணங்கி அருள்பெற வேண்டுமென்பதை வலியுறுத்தியுள்ளார்.

"உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே."

- கந்தர் அநுபூதி செய்யுள் 51

"உல்லாச நிராகுல யோக இதச்
சல்லாப வினோதனு நீயலையோ
எல்லாமற என்னை இழந்த நலம்
சொல்லாய் முருகா சுரபூபதியே."

- கந்தர் அநுபூதி செய்யுள் 2

"மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்"



# அநுபூதி அமுதில் சில துளிகள்

முனைவர் ஸ்ரீமத் குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்
கட்டளை விசாரணை
தருமையாதீனம் ஸ்ரீ பஞ்சநதீஸ்வரஸ்வாமி தேவஸ்தானம்
திருவையாறு

"கந்தரநுபூதி பெற்றுக் கந்தரநுபூதி சொன்ன எந்தையருளும் நாடி இருக்கு நாள் எந்நாளோ?" என்று தாயுமானார் உள்ளம் உருகிப் பாடியருளினார். பல ஞானிகளை, பல அருளார்களை நினைந்து நினைந்து உருக வைத்த நூல் கந்தரனுபூதி.

மற்றையப் பாடல்கள் எல்லாம் பாடி அருள் பெற்றது. 'கந்தரநுபூதி'ப் பாடல்கள் கந்தப் பெருமான் அருளால் அருணை முனிவர் அநுபூதி பெற்ற பின் பாடியருளியது.

அகர முதலென உரை செய்தன" ஐம்பத்தோரட்சரமும் என்று சிவமார் திருப்புகழில் பகர்ந்தபடி, ஆறு ஆதாரங்களிலும் அடங்கியுள்ள மாத்ருகா மந்திரங்கள் ஐம்பத்தியொன்றையும் தொடுத்து சொல் மாலையாக்கி கந்தப் பெரஞ்மான் திருவடிக்குச் சூட்டி அருளிய மந்திரப் பாமாலையிது. அருணகிரிநாத சுவாமிகள் இந்த உலகிற்கு அருளிய அருட்கொடை

ஆசைசூர்பக்தனேன் மனோ பத்ம
மானபூ வைத்து... நடுவேயன்
பான நூலிட்டு நாவறிலே சித்ர
மாகவே கட்டி.... ஒருஞான
வாசம் வீசிப் பூ காசியா நிற்ப
மாசிலோர் புத்தி... யளிபாட
மாத்ருகா புஷ்ப மாலை கோலப்பர
வாள பாதத்தி ... லணிவேனோ!

மலரைக் குஞ்சமாகவும், அன்பை நூலாகவும் ஞானத்தை வாசனையாகவும் புத்தியைப் பாடும் வண்டாகவும் கொண்டு ஓசை முனிவர் ஆசையோடு பாடிய, தோத்திர - சாத்திர- மந்திர நூல் கந்தரநுபூதி.

அநுபூதி ஒளிவிடும் சத்திய வாக்குகளில், சிலவற்றையேனும் சிந்தித்து வந்திப்பதே இக்கட்டுரையின் நோக்கம். அது மட்டுமல்ல இக்கட்டுரையைப் படிப்பவர்களோடு சில நிமிடங்கள் ஞானபூசை செய்யலாம் என்ற அவாவும் கூட.

ஞானநூல்தனை ஓதல் ஒதுவித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல் தான் கேட்டல்- நன்றாய்
ஈனமிலாப் பொருளைச் சிந்தித்தல்-இவை ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில் ஞான பூசை- அன்றோ

நூலில் முதலில் ஒளிர்வது காப்புப்பாடல். மரபுப்படி பாடப் பெற்றுள்ளது.

"நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந்துருகத்
தஞ்சத்தருள் சண்முகனுக்கியல்சேர்
செஞ்சொற்புனைமாலை சிறந்திடவே
பஞ்சக்கர ஆனை பதம் பணிவாம்





தஞ்சமென்று அடைந்தவரைக் காத்து அருள்பவன் சண்முகன், என் செயல் யாதொன்றும் இல்லை எல்லாம் உன் செயலே என உணர்ந்து தொழுவது சரணாகதி. 'தண்டனிட்டேன் என்று சொல்லடி' என்பார் வள்ளலார்.

ஒரு பாட்டுப் பாடினாலும் படிப்பவரும் உருக வேண்டும், 'கேட்பவரும் உருக வேண்டும். பாட்டில் உருகிலை, கேட்டும் உருகிலை' என்பது திருப்புகழ் வரி. மனித நெஞ்சம்கற்பாறை, கல் உருகுவது மிக மிகக் கடினம். உலோகங்கள் வெப்பத்தால் உருகும். கல்லையும் இளகவைக்கும் வல்லான் முருகனே, தந்தை சிவனும், தனயன் முருகனும், இக்கலையிலே வல்லவர்கள்.

வன்னெஞ்சக்கள்வன் மனவலியன் என்னாது
கன்னெஞ்சு உருக்கிக் கருணையினாலாண்டு கொண்ட
அன்னம் திளைக்கும் அணிதில்லை அம்பலவன்
பொன்னங்கழலுக்கே சென்றுதாய் கோத்தும்பி (திருவாசகம்)

கல்லைப் பிசைந்து சினியாக்கி; தன் கருணை
வெள்ளத் தழுத்தி வினை கடிந்த வேதியனை
கல்லை மென் கனியாக்கும் தன் கருணை
என்னை நின் கழற்கு அன்பனாக்கினாய்

என்கின்ற ஞானவரிகள் சிந்திக்கத் தக்கன. இதற்கும் மேலாகத் தாயுமானார் "ஐயையோ! இன்னும் நெஞ்சம் இளக வில்லையே" என ஏங்குகிறார்.

"கல்லேனும் ஐய ஒரு காலத்தில் உருகும்
என கல்நெஞ்சம் உருகவில்லையே" என்பது அவர் தம் வாக்கு.

பாடலின் அடுத்த இருவரிகளில் அநுபூதிப் பாமாலை சிறப்புற அமைய வாக்குதரும் வள்ளல் ஐங்கரனின் பாதம் பணிகின்றார்.

**நூலின் முதற்பாடல்**

ஆடும்பரி வேல் அணிசேவல் எனப்
பாடும் பணியே பணியாய் அருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவில்
சாடும் தனி யானை சகோதரனே.

பெரியோர்கள் முன்பெல்லாம் கடிதம் எழுதும்போது முதலில் "உ" கரம் எழுதி அதன் கீழ் "வேலும் மயிலும் துணை" என எழுதுவது வழக்கம். பயந்த தனிவழிக்கு அவைதானே துணை.

ஆடும்பரி வேல் அணிசேவல்

ஆடும்பரி - இவ்விடத்தில் மயிலைக் குறிக்கும். ஆன தனி மந்தர ரூபநிலைகொண்டது ஆடும் மயில்.

வேல் - வேலாயுதம், ஞானமே வடிவானது.

அணிசேவல் - சேவற்கொடியோன்

மயிலை "ஆடும் பரி" என அடைமொழி சேர்த்துச் சொன்னவர், சேவலை "அணிசேவல்" என அழைத்தவர், ஞானாயுதத்தை வேல் என்று அடைமொழி சேர்க்காது கூறியதன் காரணம் ஞானம் தனித்தே நிற்கும். வேலை மட்டும் வழிபட்டாலே முருகவழிபாடு செய்வதற்கு சமம். "வேலை வணங்குவது எனக்கு வேலை" எனக்கூறினார் பாரதியார்.



"மந்திரதத்துவம் - மயில்", "நாத தத்துவம் - சேவல்", "ஞான தத்துவம்- வேல்" இவற்றை யாண்டும் பாடும் பணியே பணியாய் அருள்வாய் என உறுதிபடக் கேட்கிற உரிமை சந்தக் கவிக்கே உரித்து.

கலியுகத்தில் இறையருள் பெற எளிய வழி "பாடும் வழி". "குளறிக் குளறிக் குமரனைப் பாடு" என ஒரு முதுமொழி உண்டு.

அவனுக்கு நாம் அடிமை, அவனோ தமிழ்ப் பாட்டுக்கு அடிமை "திருப்புகழ் பாடு" எனச் செப்பிய செவ்வாய், செவ்வேள் செவ்வாய்.

"அர்ச்சனை பாட்டேயாகும்"- சேக்கிழார்
"பாடும் தொண்டர் இனத்தகத்தான்"- அப்பர்
"பாடுவார் பசி தீர்ப்பார்" சுந்தரர்
"பாட வேண்டும் போற்றி நின்னையே"- மணிவாசகர்

"தெருப்பாடல் உவந்து எனையும்
சிவமாக்கும் தெய்வம்" வள்ளாலார்
"பலகானும் உனைத் தொழுவோர்கள்
மறவாமல் திருப்புகழ்பாடி".... திருப்புகழ்

முருகனைப் பாடுவதோடு, குருநாதர் நுணுக்கமாகக் கேட்கிறார்; அவன் மயிலையும் அயிலையும் சேவலையும் பாட வேண்டும் என்று.

பாடலின் கடைசி வரி நீ! இன்னாருடைய தம்பியல்லவா என்பது. இப்பாடலை படித்தால் வேல்பூஜையும், கஜபூஜையும் செய்த பலன் உண்டு என்பர்.

**பாடல் எண் 15**

முருகன் குமரன் குகன் என்று மொழிந்து
உருகும் செயல்தந்து உணர்வு என்று அருள்வாய்
பொருபுங்கவரும் புவியும் பரவும்
குருபுங்கவ எண் குண பஞ்சரனே.

ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றுமில்லார்க்கு ஆயிரம் திருநாமங்கள் அன்பினால் செப்புகின்றனர். ஒரு நாமம் போதாதா? இல்லை! இல்லை! ஒவ்வொரு திருநாமத்திற்கும் தனிசக்தியுண்டு.

மொழிக்குத்துணை "முருகா" எனும் நாமங்கள் என்றுதான் பேசுவார்கள். பல கோடி நாமங்களிலும் பெருமானுக்கு மூன்று நாமங்கள் மிகச் சிறப்புடைத்து. அவை 1. முருகன், 2. குமரன், 3 குஹன் என்பதே.

**1. முருகன்:** "உ" என்ற ரட்ஷக அட்ஷரம் ஒவ்வோர் எழுத்திலும் இணைந்திருக்கும். ம்+உ=மு, ர்+உ=ரு, க்+உ=கு= முருகு. முருகு என்றால் இளமை, இனிமை, அழகு, தமிழ் எனப் பல்வேறு பொருள் உண்டு என்பர். மு- முகுந்தன், ரு. ருத்ரன், கு. கமலன் என்றும் கொள்வர்.

**2. குமரன்:** காக்கும் மந்திரம், மாரனை எரித்த பின் வந்தவன் குமாரன். "குமாராய நம" என்பது குருமூலம் அறிந்து கொள்ள வேண்டிய மந்திரம்.

**3. குகன்:** உயிர்களின் இதய குகையிலே என்றும் உள்ளவன்.
"இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதவன்" (திருவாசகம்)
"தேடியும் தேடொனாத் தேவனை என் உள்ளே தேடிக் கண்டு கொண்டேன்" அப்பர் சுவாமிகள்.





"மனத்து அகத்தான்" மறக்க முடியாத வாக்கு.
"கந்தர் அநுபூதியின் கடைசிப் பாடலில், கடைசி வரியில், கடைசி வார்த்தையாக வருவது" குஹனே! என்ற திருவார்த்தைதான்.

**பாடல்-17**

யாம் ஓதிய கல்வியும் எம் அறிவும்
தாமேபெற வேலவர் தந்ததனால்
பூமேல் மயல்போய் அறமெய்யுப்புணர்வீர்
நாமேல் நடவீர் நடவீரினியே!

மனித குலத்திற்கு அன்புக் கட்டளையிடும் அதி அற்புதமான பாடல் இது. விரித்துரைப்போம். அறம்பாவம் எனும் அருங்கயிற்றால் கட்டி அனுப்பிவிட்டான். வந்துவிட்டோம், மயங்குகின்றோம். "புயங்கனே மயங்குகின்றேன்" என்பார் மணிவாசகப் பெருமான். இம்மயக்கம் தீர என்ன வழி?

தொலையா வழியை நடந்துதான் கடக்க வேண்டும். காலால் அல்ல நாவால். "நாமேல் நடவீர்! நடவீர் இனியே, நாவால் எப்படி நடப்பது- அவன் டாமம் கூறியே ஒவ்வோர் அடியையும் நாமம் சொல்லியே கழிக்க வேண்டும்.

யாம் ஓதிய கல்வி- நல்லறிவு பெற ஞான நூல்களை அனுதினம் ஓத வேண்டும். "ஓதாமல் ஒரு நாளும் இருக்க வேண்டாம்" (ஔவையார்). கற்ற அனைத்து ஊறும் அறிவு. கற்றுப் பெற்ற அறிவும் கந்தன் தந்த அறிவே.

"கற்றதனால் ஆய பயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழார் எனின்"

அறிவால் அறிந்து முருகனின் இருதாள் இறைஞ்சிடவே நமக்கு அறிவு தந்துள்ளான், அறிவின் துணை கொண்டு பிறப்பு அறுக்க முயல வேண்டும்.

பிறப்பு மயக்கமறுக்க "பூ" மேல் (பூமி மேல்) உள்ள எளிய வழி நாவினால் நாமம் சொல்வது.

கல்லிலே கட்டி கடலிலே இடப்பட்ட அப்பர் பெருமான் கடலை எப்படிக்கடந்தாராம்.

ஒரு முக்கிய கருத்தை, உண்மையை, அழுத்திச் சொல்ல வரும்போதுதான் அருளாளர்கள் இருமுறை ஒரே தொடரைச் சொல்வர்.

நடவீர் ! நடவீர்!!- இப்பாடலில் வருவது
இரும்புதரு மனத்தேனை ஈர்த்து! ஈர்த்து!!-திருவாசகம்

சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து...... மணிவாசகர்

கந்தரனுபூதியில் பல பாடல்களில் இது போல் காணலாம்.

தளைபட்டழியத் தகுமோ!! தகுமோ! (பாடல்-4)

விடுவாய்! விடுவாய்! வினையாவையுமே (பாடல்-7)

உய்வாய்மனனே ஒழிவாய்! ஒழிவாய்! (பாடல் 14)

முடியக் கெடவோ முறையோ! முறையோ! (பாடல் 23)



கா! கா! நமனார் கலகம் செயுநாள் (பாடல் 41)

கற்றது கை மண்ணளவு, பெற்ற அறிவும் பெருமான் தந்தது, பிறவி மயக்கம் தீர எளிய வழி நாளும் நாமம் சொல்வதே.

**உருகும் செயல்:**

தோத்திரப் பாடலையோ, நாமங்களையோ, ஒப்புக்கு உதட்டளவில் சொல்லிடின் பயன் குறைவு. உணர்ந்து உணர்ந்து, நெகிழ்ந்து நெகிழ்ந்து, ஊற்றெழும் கண்ணீரதனால் நனைந்து நனைந்து கூவி உருக வேண்டும். “உனை உனும்,” “உணர்வை” நல்காய் ஒற்றியூர் உடையகோவே” என்பார் அப்பர் பெருமான்.

“கதிதனை ஒன்றையும் காண்கின்றிலேன்” என்கின்ற உறைப்பான அனுபவ உணர்வு அவன் அருளால் நமக்கு வரவேணும். அதற்கு குருகடாட்சம் வேண்டும்.

குருவின்றிக் கிடையாது ஆன்மிக அருள் என்பர். குருகடாட்சம் பரிபூர்ணம். குருவுக்கு எல்லாம் குருவானவன், சிவனுக்கே குருவான அற்புதத் தெய்வம் “சுவாமிநாதன்” தான்.

கடவுட் தன்மையை மனிதன் தெற்றென உணரச் சாத்திரங்கள் குணங்களைப் பகன்று “எண்குணத்தான்” என இயம்பின, “எண்குணத்தான் தாளை வணங்காத்தலை” என்பார் வள்ளுவர்.

பஞ்சரம் என்பது வீடு. எட்டு குணங்களாகிய கூட்டில் உள்ள ஞானக்கிளி.

எண்குணங்கள் என்பது 1. தன் வயத்தனாதல், 2. தூய உடம்பினன் ஆதல், 3. இயற்கை உணர்வினன் ஆதல், 4. முற்றும் உணர்தல், 5. இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல், 6. பேரருள் உடைமை, 7. முடிவில் ஆற்றல் உடைமை, 8. வரம்பில் இன்பமுடைமையாகும்.

நக்கீரர் ஒரு பாடலை நிறைவு செய்யும்போது “பழமுதிர்சோலை மலைகிழவோனே” என்றதும், அசரீரி “நான் என்ன கிழவனா?” என ஒலித்ததாம். கேட்ட நக்கீரர் பெருமான் ஆடிப்போய் “முருகா நீ என்றும் இளையாய், என்றும் அழகன்” எனப் பாடினாராம்.

குன்றம் எறிந்தாய்!குரைகடல் சூர் தடிந்தாய்
புன்றலைய பூதப் பொரு படையாய்! என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாய் என் உள்ளத்து உறை''..... நக்கீரர்

17-ம் பாடலின் இனிய கருத்து, குருவுக்கும் குருவான எண்குணபஞ்சர குருநாதா! உனை, முருகன்! குமரன்! குஹன்! என அழுது, தொழுது, உருகி, உணர்ந்து வழிபட அடியேனுக்கு என்று அருள்வாய் என ஏக்கத்தோடு விண்ணப்பிப்பதாகும்.

**பாடல்-18**

உதியா! மதியா! உணரா! மறவா!
விதிமால் அறியா விமலன் புதல்வா!
அதிகா! அனகா! அபயா! அமரா!
பதிகாவல சூர பயங்கரனே!

அருணகிரி நாதரை “ஓசை முனி” என அழைப்பார் பாம்பன் சுவாமிகள். இந்த விளிப் பாடலின் தாள ஓசை படிப்பவரை மயக்கிடும். கூவி அழைக்கும் பாடல் ஆதலால் குரல் பலமாக ஒலிக்கிறது.

முதல் இரண்டு வரிகளில் இன்னார் முதல்வா எனக் கூவி அழைத்துக் குமரன் புகழை அடுத்த இருவரிகளில் புகழ்வார்.

***தந்தை சிவன்:***

சிவன், பிறவா யாக்கைப் பெரியோன், பிறவான் இறவான். தான் பிறவான் இறவான், பிறர் பிறப்பு இறப்பைத் தவிர்த்திடுவான்.

தாயுமிலி தந்தையிலி தான் தனியன்"மணிமொழி.
பிற உயிர்கட்கு தாயாய் தந்தையாய் இருப்பான்.
உதியா! மரியா!- ஆதி அந்த மிலான்
உணரா! மறவா!- நினைப்பும் மறப்பும் இலான்
விதிமாலறியா விமலன்; மாலறியா நான் முகனும்
காணா மலையினன்

***சிவகுமாரன்:***

விமலன் புதல்வன் (மலம் இலா விமலன்) அதிகா!- யாவர்க்கும் மேலானவன்

அநகா!- பாபமற்றவன்- பாபமகற்றுபவன் தலைவன்.

அமராவதிகாவலன்:- தேவசேனாதிபதி அடியார்க்குத் தலைவன்.

சூர பயங்கரன்: அசுரனை அழித்தவன்.

உதியா விமலன், மரியா விமலன், உணரா விமலன், மறவா விமலன் விதிமாலறியா விமலன் - எனக் கொண்டு கூட்டிப் பொருள் கொண்டால் சுவைமிகுதியாயிருக்கும்.

இதுபோன்ற விளிப்பாடல்கள், நாமம் கூறி அழைக்கும் பாடல்கள் பல நூல்களில் உண்டு. உதாரணமாக அபிராமி அந்தாதியில்

50ஆம் பாடல்.

நாயகி! நான்முகி! நாராயணி! கை நளின பஞ்ச
சாயகி! சாம்பவி! சங்கரி! சாமளை! சாதிநச்சு
வாயகி மாலினி! வாராகி! சூலினி! மாதங்கியென்று
ஆயகி ஆதி உடையாள் சரணம் அரண் நமக்கே

77ஆம் பாடல்:

பயிரவி பஞ்சமி! பாசாங்குசை! பஞ்சபாணி! வஞ்சர்
உயிரவி உண்ணும் உயர்சண்டி! காளி! ஒளிருங்கலா
வயிரவி! மண்டலி! மாலினி! சூலி! வராகி! என்றே
செயிரவி நான்மறை சேர்திரு நாமங்கள் செப்புவரே.

அருணகிரிநாதர் சந்தமாகக் கூவி அழைத்துக் குமரனிடம் என்ன கேட்கப் போகிறார் என்ற கேள்விக்கு விடை அடுத்த பாடலில் அறியக் கிடக்கிறது.



பாடல் எண் 19:

வடிவும் தனமும் மனமும் குணமும்
குடியும் குலமும் குடிபோகிய வா!
அடி அந்தமிலா அயில்வேல் அரசே!
மிடி என்று ஒரு பாவி வெளிப்படினே!

"பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லை" என்பார் வள்ளுவர். அவர் பாவி என்ற பெயரிட்டு இரண்டைக் கூறுவார். ஒன்று வறுமை. (பசிப்பிணி)

''நாணணிகளையும், மாணெழில் சிதைக்கும்
பசிப்பிணி என்னும் பாவி''
மற்றது அழுக்காறு.

''அழுக்காறு என ஒரு பாவி திருச் செற்றுத் தீயுழி உய்த்து விடும்.''

கொடிய நோய் வந்தால் உயிர் "ஒன்று" நீங்கும். வறுமை வந்தால் மற்றவை எல்லாம் நீங்கிடும் உயிர் ஒன்றுதான் நிற்கும்.

பசிவந்திடப் பத்தும் பறந்து போகும். எந்தப் பத்து அவை,

''மானம், குலம், கல்வி, வண்மை அறிவுடைமை
தானம் தவம் முயற்சி தாளாண்மை தேனின்
கசிவந்த செல்வியர்மேல் காமுறுதல் பத்தும்
பசிவந்திடப் பறந்து போம்'' (இராமச்சந்திரக்கவிராயர்)
கொடிது, கொடிது வறுமை கொடிது- அதினினும்
கொடிது இளமையில் வறுமை.

இந்தக் கொடிய வறுமையினின்று நாம் தப்பிக்க, மிக அருமையான, எல்லோர்க்கும் எளிய வழியினைக் கண்டு சொன்னார் அருணகிரியார். கந்தரலங்காரப் பாடல் எண் 34.

''முடியாப் பிறவிக்கடலில் புகார்- முழுதும் கெடுக்கும்
மிடியால் படியில் விதனப்படார்.வெற்றிவேல் பெருமாள்
அடியார்க்கு நல்ல பெருமாள் அவுணர் குலமடங்கப்
பொடியாக்கிய பெருமாள் திருநாமம் புகல்பவரே.''

தமிழ்ப் புலவனானது. மநத்தனமாயிற்று. வருமானமே இல்லை என வருந்துவார் படிக்காசுப் புலவர். புலமையும் வறுமையும் சேர்ந்தே இருக்கும் போலும். வறிஞன் தருமிக்குப் பொன் கொடுக்க சிவனே வரவேண்டியிருந்ததே. வறுமை கொடிது.

பழநித் திருப்புகழில் குருநாதர் மிக அருமையாக உரிமையோடு வேண்டுவார்; எனக்குப் பிறவி வேண்டாம். ஆனால் நீ பிறப்பிக்க எண்ணினால் கொஞ்சம்கூட வறுமை (மிடி) அணுகாத அழகான அறிவான, ஆரோக்கியமான செல்வந்தனான மனிதப் பிறவி கொடு, கொடுத்து நீயே என்னை அடிமை கொள் என வேண்டுவார்.

''திமிரஉததி அனையநரக செனன மதனில் விடுவாயேல்
செவிடுகுருடு வடிவு குறைவு சிறிதுமிடியும் அணுகாது
அமரர் வடிவம் அதிககுலமும் அறிவும் நிறைவும் வரவே நின்
அருளதருளி எனையுமனதோடு அடிமை கொளவும் வரவேணும்.''

முருகனடியார்க்கு மிடி வராது. சகல செல்வ யோகமிக்க வாழ்வு நாடி வரும்.

**பாடல் - 26**

ஆதாரமிலேன் உன் அருளைப் பெறவே
நீதான் ஒரு சற்றும் நினைந்திலையே
வேதாகம ஞான வினோத மனோ
அதீதா சுரலோக சிகாமணியே

முருகா உன் அருளை இந்தப் பிறப்பில் யான்பெற்றிட எனக்கு ஏது ஆதாரம். உன் கருணை தவிர, நீ இரங்கினாலன்றி இது கைகூடாது. நீ நினைத்தால் நான் உய்வேன்.

"அவனருளாலே அவன் தாள் வணங்கி"- மணிவாசகர்
"என்னை நினைந்து அடிமை கொண்டு, என் இடர்
கெடுத்துத்தன்ன நினைக்கத் தருகின்றான்" (நம்பியாண்டார் நம்பி)

முருகா! உன் தயவு கேட்க எனக்கு என்ன உரிமை உள்ளது. உனைப் பாடினேனா? பணிந்தேனா? தேடினேனா? தெருவுதோறும் அலறினேனா? சிந்தித்தேனா? சேவித்தேனா? வந்தித்தேனா? வாழ்த்தினேனா?

"ஏழைத் தொழும்பனேன் எத்தனையோ காலமெல்லாம்
பாழுக்கிறைத்து விட்டேன் பரம்பரனைப் பணியாதே"..... திருவாசகம்

நான் என்ன தவசியா? யோகியா? முனிவனா? பக்தனா? உன் அருள் பெறக் கொஞ்சங்கூடத் தரமற்றவன். பரம் என்று உனை அடைந்தேன், அவ்வளவுதான்.

"பரம் என்று உனை அடைந்தேன் தமியேனும் உன்
பக்தருக்குள் தரம் அன்று இவன் என்று தள்ளத் தகாது" எனக் கெஞ்சுவார் அபிராமி பட்டர்.

போற்றியோ நமசிவாயா! புறம் எனைப் போக்கல் கண்டாய்" (மணிவாசகர்)

குற்றம் புரிதல் எனக்கு இயல்பு
குணமாக் கொள்ளல் உனக்கு இயல்பு" - வள்ளலார்

அறியாக் குழந்தை நான், தாய்முலை கடிக்கும் சேய் நான்.
ஐயோ!
அடித்தது போதும் அம்மை அப்பா இனி ஆற்றேன்.

"ஆதமிலியான் பிறப்பு இறப்பு எனும் அரு நரகில்
ஆர்தமரும் இன்றியே அழுந்து வேற்கு ஆ! ஆ!! என்று" (திருவாசகம்)

மனம் வாக்கிற்கெட்டா மால்மருகா! மயில்வாஹனா! சுரலோக சிகாமணியே! ஆதாரம் என்றும் வள்ளி நீதானே. ஆறுமுகனே அம்மை மணாளனே அருள்வாய்! அருள்வாய்! எனைத் தள்ளிவிடாதே-என்பது பாடலின் சுருங்கிய விளக்கம்.

**பாடல் என். 35:**

"விதிகாணும் உடம்பை விடா வினையேன்
கதிகாண மலர்க்கழல் என்று அருள்வாய்
மதிவாள் நுதல் வள்ளியை அல்லது பின்
துதியா விரதா சுரபூபதியே".....



"நாம் சுமப்பது விதி காணும் உடம்பு
அவரவர் வினைவழி அவரவர் வந்தனர்
அவரவர் வினைவழி அவரவர் அநுபவம்..." (தருமைக்குருமணி)

இந்த உடம்பு வினையால் வந்தது.

"வினைப்போகமே ஒருதேகம் கண்டாய். வினைதான் முடிந்தால்
திணைப் போதளவும் நில்லாது கண்டாய்

"புணரபி ஜனனம், புணரவி மரணம்
புணரபி ஜனனே ஜடரே சயனம்

பிறப்பு இறப்பு- இறப்பு, பிறப்பு - விசித்திரச் சக்கரத்தில் உயிர் சுழன்று கொண்டே பல பிறப்புக்களை எடுத்துத் தளர்ந்து விட்டது. புல்லாகிப் பூடாகிப் புழுவாய்... எண்பத்து நான்கு நூறாயிரம் யோனிகள் என்பர்.

உயிர் எடுத்த முதல் பிறவி "புல்" அதில் உயர்ந்தது "அருகம்புல்" அடுத்தது புழு அதில் உயர்ந்தது தீர்த்தக்கட்டப்புழு, அடுத்தது மரம் அதில் சிறந்ததது அரசமரம். அடுத்தது மிருகம் சிறந்தது பசு இந்த வரிசையில் கடைசி மனிதன்- மனிதருள் சிறந்தவன் தொண்டன்- அடியவன்- (முருகன் பரிவாரமே வலையே)

உயிரை, உடலில் ஏற்றுகிறவன் பிரமன்- இறக்குகிறவன் எமன். படைத்துப் படைத்துக் கமலனும் மிகவும் அயர்வானன்.

"எழுகடல் மணலை அளவிடின் அதிகம்
என திடர்ப் பிறவி அவதாரம்..." கோவில் திருப்புகழ்.

நிழல் கூடவே வரும். ஆனால் ஒரு நிழல் இருக்கிறது அதனை அடைந்தால் உடல் கிடையாது. அந்த நிழல் "ஈசன் இணையடி நிழல்"

எல்லோருக்கும் ஆன்மிக நாட்டம் வருவதில்லை. பிறப்பைத் தொலைக்க வேண்டும் என்ற எண்ணம் வருவதில்லை. இச்சாசக்தியான வள்ளியம்மையின் அருள் இருந்ததால் தான் மெய்ஞான நாட்டம் வரும்.

உலகத் தேடல்களான பொன் தேடல், பொருள் தேடல், மண் தேடல், பெண் தேடல் முடிந்து ஓய்ந்த பின்னரே, நிலையாமையை உணர்ந்த பின்னரே ஆன்மிகத் தேடல் வரும். அருள் தேடி மனது ஓடி வரும். வள்ளி அம்மையின் அருள் கிடைக்கும்.

நீடு தனிவேல் விடும் மடங்கல் வேலன் அருளால் தீவினை எல்லாம் மடியும். மலர்க்கழல் காட்டி ஆண்டுகொள்வான்.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேராதார்.

**பாடல் எண் 41**

சாகாது எனையே சரணங்களிலே
காகா நமனார் கலகம் செயுநாள்
வாகா முருகா மயில் வாஹனனே
யோகா சிவஞான உபதேசிகனே!





"கா" என்ற பதம் பாடல் வரிதோறும் வருகிறது. கா! கா! என்பது ஓர் அடுக்குத் தொடர் (காப்பாற்று, காப்பாற்று).

"யானேதும் பிறப்பு அஞ்சேன் இறப்பதற்கு என் கடவேன்" (திருவாசகம்) எது அதிசயம்? என்ற கேள்விக்கு மகாபாரத விராடபர்வத்தில் விடைபகர்ந்தார் தருமர், தினந்தோறும் சாவு நடப்பது தெரிந்திருந்தும் அகங்காரமாய் இருக்கும் மனிதன் என்று.

பிறந்தால் இறப்புண்டு... இறவாதிருக்க வழி உண்டா. உண்டு என்று உறுதிபடச் சொல்கிறார் பட்டினத்தார். தனது ஆன்மிகத் தபோபலத்தால், ஞான ஆய்வு செய்து அனுபவத்தால் மருந்தொன்று கண்டு பிடித்துச் சொல்கிறார். விலையே கிடையாது. இலவச மருந்து. எங்கும் இருக்கும் மருந்து, ஏழைக்கு ஏற்ற மருந்து, நிச்சயமாய் பிறவி நோய் தீர்க்கும் மருந்து.

"பிறவாதிருக்க வரம் பெறல் வேண்டும்; பிறந்து விட்டால்
இறவாதிருக்க மருந்துண்டுகான், இது எப்படியோ
அறமார் புகழ்தில்லை அம்பலவாணர் அடிக்கமலம்
மறவாதிருமனமே அதுகான் மருந்துனக்கே"

ஞானியும் இறக்கின்றான், அஞ்ஞானியும் இறக்கின்றான். ஞானி இறந்தால் முக்தி. அஞ்ஞானி இறந்தால் பிறப்பு. இதன் கருத்து நீ ஞானி ஆவாயாக.

Q. What is the reason for the suffering of the pepole?
Ans. Ignorence! Ignorence! Ignorence only.

துன்பத்திற்கு மூல காரணம் எது?
அறியாமை! அறியாமை! அறியாமையே!

எமன் எப்போது வருவான்? யாருக்குத் தெரியும். அவன் எப்போதும் வருவான்.
வா நாளும் சா நாளும் யாரறிவார்?

Death will come at any time any minute without giving a moments notice. "Swamy Sian-anda"

அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடியாரொடு மந்தனம் கொண்டார்
இடப்பக்கம் இரை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந்தாரே.... (திருமந்திரம்)

கார்மாமிசை காலன் வரில் கலபத் (மயில்)
தேர்மாமிசை வந்து எதிரப் படுவாய்.
முருகா! காப்பாற்று! காப்பாற்று! இனிப்
பிறவாதிருக்க வரம் தா! வரம் தா!

பாடல் 51

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குஹனே!

குருவருளின்றித் திருவருள் இல்லை. குருகடாட்சம் பரிபூரணம்.



"குருவடிவாகிக் குவலயம் தன்னில் திருவடி வைத்துத் திறம் இது பொருளென" (விநாயகர் அகவல்)

எம் பெருமானே நான் கண்டு கொண்டு வழிபட்டு நலம் பெறக் குருவாக வரவேண்டும்.

அருபரத்து ஒருவன் அவனியில் வந்து
குருபரனாக அருளிட வேண்டும்
உருவாக வந்து காட்சிதந்து அருவாக நின்றருள வேண்டும்
உளதாக வந்து காட்சி தந்து இலதாக நின்றருள வேண்டும்
மலராக வந்து காட்சி தந்து மருவாக இணைந்தருள வேண்டும்
மணியாக வந்து காட்சி தந்து ஒளியாக நின்றருள வேண்டும்
கருவாக வந்து தோற்றம் காட்டி உயிராக இன்பம் தரவேண்டும்
கதியாக வந்து வழிகாட்டி விதியாக என்றும் அருள வேண்டும்
குருவாகி எழுந்தருளி குஹனாக பேரின்பம் அருளிட வேண்டும்.

**நிறைவுரை:**

கட்டுரையின் முதற் பக்கம் கூறியபடி கந்தரனுபூதியில் சில பாடல்களை, ஞான ஆசிரியர்களின் உரைகளையும், கேட்ட பொழிவுகளின் சாரத்தையும், சிந்தித்து, முருகனை வந்திப்பதே இக்கட்டுரை. இதன் நோக்கம்:-

"வீடுதோறும் கந்தரநுபூதி நூல் வாசித்திடல் வேண்டும்
மனிதப் பிறப்பின் மேன்மை தெரிந்திடல் வேண்டும்
ஒவ்வொருவரும் குருவருளுக்குப் பாத்திரமாக வேண்டும்
கொடியவினை யாவும் நீங்கிடல் வேண்டும்
அடியவர் நடுவே பிரிவின்றி இருக்கும் அருள் வேண்டும்
எந்தை கந்தவேள், இதய குஹன்
எங்கும், யாண்டும், காத்தருள குருவாக வரவேண்டும்." - என்பதே

கந்தரநுபூதி ஞானமலர் வாசம் உலகெலாம் பரவிட வேண்டும். இதுவே பிரார்த்தனை.

# நான் மறைய வேண்டும்; நாம் மலர வேண்டும்!

(திருவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகாளர்)

ஏறுமயில் ஏறி விளையாடும்முகம் ஒன்றே!
ஈசருடன் ஞானமொழி பேசும்முகம் ஒன்றே!
கூறும் அடியார்கள் வினைதீர்க்கும்முகம் ஒன்றே!
குன்று ருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே!
மாறுபடு சூரரை வதைத்த முகம் ஒன்றே!
வள்ளியை மணம்புணர வந்த முகம் ஒன்றே!
ஆறுமுகம் ஆனபொருள் நீ அருளல் வேண்டும்
ஆதி அருணாசலம் அமர்ந்த பெருமாளே!

என்று ஆறுமுகங்களாய் ஆறுமுகப்பெருமான் அருள்பாலிக்கின்றார். கச்சியப்ப சிவாச்சாரியார் முருகப்பெருமானின் கருணையைக் காப்பாகப்பாடுகின்றார்.

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவரும் துதிக்க நின்ற இராறு தோள் போற்றி காஞ்சி
மாவடி வைகும் செவ்வேள் மலரடி போற்றி அன்னான்
சேவலும் மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி!

என்று அறம், அன்பு, அழகு, அறிவு, ஆற்றல், அருள் ஆகியவற்றின் ஒருமித்த வடிவமாகிய ஆறுமுகப் பெருமான் சூரபன்மனைத் தடிந்து ஆட்கொள்வது அறத்தை நிலைநிறுத்தவே! தீமையை நன்மையாக மாற்றவே!

வளரும் பயிர் முளையிலே தெரியும் என்பதைப்போல அறத்தின் வழிப்பட்ட நெறியைக் குழந்தைகளுக்கு இளமையிலேயே ஊட்ட வேண்டும். "கருவிலே திரு" என்பதைப் போல தாயின் கருப்பையிலேயே கரு வளரும்பொழுது உயர்ந்த பண்புகளைப் பெற வாயில்கள் அமைய வேண்டும். மோகன்தாஸ் பள்ளியில் படித்தபொழுது, பார்த்து எழுத ஆசிரியரே தூண்டியபொழுது பார்த்து எழுதாத நேர்மைதான் அவரை மகாத்மாவாக உயர்த்தியது.

அப்பூதியடிகளின் மூத்த குழந்தை "மூத்த திருநாவுக்கரசு" தம் இல்லத்திற்கு வந்த திருநாவுக்கரசர் பெருமான் உணவு அருந்த வாழை இலை அரிந்துவருமாறு தம் தாய்தந்தை ஆணையிட்டபொழுது "நல்லதாய் தந்தை ஏவ நான் இது செய்யப்பெற்றேன்" என்று அந்தக் குழந்தை கூறி அப்பணியை செய்யச் சென்றது.

'நல்ல தாய் தந்தை' என்று தம் பெற்றோரை அக்குழந்தை அழைத்தது. "நல்லதாய்தந்தை" என்று கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் தர இயலாது. அந்தப் பெருமையைப் பெற்றுத் தரவேண்டிய அவர்களின் அன்புக் குழந்தைகள்தாம்! அதனால்தான் நல்ல பெற்றோர் என்ற அடைமொழியைப் பெற அறிவறிந்த மக்கட்பேறு தேவை. மூத்த திருநாவுக்கரசு அதைப்போன்ற ஞானக் குழந்தைதான். வாழை இலை பறிக்கச்சென்ற இடத்தில் விடப்பாம்பு தீண்டி உயிருக்குப் போராடும் நிலையிலும் தன் வீட்டுக்கு வந்த பெரியவர் உணவு உண்பதில் காலதாமதம் ஏற்பட்டுவிடக்கூடாது என்று உயிருக்குப் போராடிய நிலையிலும் இலையை வீடு கொண்டுவந்து சேர்த்துவிட்டு மயங்கிக் கீழே விழுந்தது.



"பண்டுபழுத்த முதுமைமுழுத்தவம் உடைய உயிர் ஒன்று இன்று இவ்விளமையுடலில் உலாவியதோ" என்று நமது மகாசந்நிதானம் குறிப்பிடுவார்கள். சேக்கிழாரின் காப்பியத்தில் ஆண்டில் இளையர் உண்டு! ஞானத்தில் இளையம் இல்லை! ஞானம் என்பது தருக்கித் தரிவதல்ல! தான் அடங்கிப் பிறர் வாழக் கரைந்து போவது!

"உற்றநோய் நோன்றல் உயிர்க்கு உறுகண்செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு"

சூரபன்பமனும் தவம் செய்தான். அந்தத் தவத்தில் உக்கிரம் இருந்தது. உருக்கம் இல்லை. வெறி இருந்தது. நெறி இல்லை!

ஆகாயத்தில் இருந்து தன் உடம்பு தசைகளை எல்லாம் அறுத்து நெருப்பில் போட்டான். இப்படிப் போடப் போடத் தனக்கு பலம் வரும் என்று நினைத்தான்! இறைவனின் அருள் பெற ஈரம்நிறைந்த இன்ப அன்பு வேண்டும்.

"என்பே விறகா இறைச்சி அறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போடு உருகி அகம்குழைவார்க்கு அன்றி
என் போல் மணியினை எய்த வொண்ணாதே"

என்று திருமூலர் சுட்டுவது இன்ப அன்பு வழியே இறைஅருள் பெறும் தவவாழ்வு சாத்தியம் ஆகும்! சூரபன்மனின் தவம் அன்புவழியே அமையவில்லை.

கனகதாசர் என்பவர் தன் குருநாதரிடம் நான் ஞானம்பெறவேண்டும். எனக்கு ஞானத்தின் பாதையைக் காட்டுங்கள் என்று பலமுறை மன்றாடினான்! குருநாதர் ஒரு நாள் கனகதாசர் கையில் பழத்தைக் கொடுத்து "யாரும் இல்லாத இடத்தில் இந்தப் பழத்தை உண்டு வா, ஞானத்தைத் தருகின்றேன்" என்றார். கனகதாசர் இரண்டு நாள் முழுவதும் யாரும் இல்லாத இடத்துக்குச் சென்று முயற்சித்துத் தோற்றுக் கடைசியில் குருநாதரிடம் சென்று "நான் எங்கே சென்றபோதும் என்னில் குடிஇருக்கும் இறைவன் தோன்றாத் துணையாய் உடன் வருகின்றான். எப்பொழுதும் யாரும் இல்லாத தனிமை வாய்க்கவில்லை! எப்போதும் உடன் தோன்றாத் துணையாய் வருகின்றான்! அவர்தான் ஒப்பில்லா பரம்பொருள்" என்றார் கனகதாசரிடம் அக்குருநாதர். "நீ ஞானம் பெற்றுவிட்டாய்" என்று கூறினார். ஞானத்தை அடைய புறமுயற்சிகளை விட அகமுயற்சிகளே தேவை! சூரபன்மனிடம் அன்பு வழிப்பட்ட அகமுயற்சி இல்லை. பிறப்பு இறப்பு அற்ற வாழ்வை நோக்கிய பெரும்பயணம் தான் இறைஅருள் பேறு பெறும் நிலை!

எத்தனைப் பிறப்புகள்! எய்த்துக் களைத்துப் போய் ஆயிற்று. மணிவாசகப் பெருமான்,

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்அசுரராகி முனிவராய்த் தேவராய்
செல்லாஅ நின்ற இத்தாவரசங்கமத்துள்
எல்லாப்பிறப்பும் பிறந்துஇளைத்தேன் எம்பெருமான்"

என்று கூறுவார். பிறப்புத்தளையில் இருந்து விடுபட, இறைவனின் திருவடிநிழலில் நீங்காத இன்பம் பெற, அவன் அருளாலே அவன்தாள் வணங்க வேண்டும்.

சூரபன்மன் அவன் அருளால் பெற்ற வரங்களை எல்லாம் பிறரைத் துன்புறுத்தவே பயன்படுத்தினான். 1008 கோடி அண்டங்களை 108 யுகங்கள் ஆளும் வல்லமையும் வரமாகப் பெற்றான்!

அழியாத வச்சிரத் தேகத்தைப் பெற்றான். வாயு வேகத்தில் செல்லும் இந்திரஞாலத் தேரைப்பெற்றான்! எவ்வளவு வரம் பெற்றும் என்ன பயன்? தான் எனும் அகந்தையில் ஆழ்ந்து கிடந்தான். நம்மிலும் நிறைய அசுரர்கள் இன்று உள்ளனர். அவர்களில் தேவர் யார்? அசுரர் யார்? என்று எப்படிக் கண்டறிவது!

நவீன அரக்கர்கள் தலையில் கொம்பு இருப்பதில்லை! அரக்கர்கள் மற்றும் தெய்வகுணம் நிரம்பியவர்களை எப்படி அடையாளம் காண்பது? பிறர் பசித்திருக்கத் தான் மட்டும் உண்ண நினைப்பவர் அரக்கர். தான் பசித்திருந்த பொழுதும் பிறர் பசியாது இருக்கத் தன் உணவைப் பங்கிட்டு அளிப்பவன் தெய்வகுணம் நிரம்பியவன்! அந்த தெய்வகுணம் தான் நம்முள் வரவேண்டும். வரலாறுகளில் ஆணவம் வீழ்ந்த நிகழ்வுகள் ஏராளம்! மண் ஆசை, பெண் ஆசை, பொன் ஆசை, வீழ்ச்சியின் பாதைக்கு அழைத்துச் சென்றது.

சென்றான்! கண்டான்! வென்றான்! என்ற பெருமைக்குரியவன்! பிரெஞ்சுப்புரட்சியை நடத்தியவன் ''நெப்போலியன் போனபார்ட்'' வெற்றியின், புகழின், பெருமையின் உச்சத்தில் வாழ்ந்தவன் அடங்காத நாடு பிடிக்கும் ஆசையால் அடையாளம் தெரியாமல் வீழ்ந்தான்!

ஹிட்லர், முசோலினியின் வீழ்ச்சிகளும் அப்படித்தான்!

சிலப்பதிகாரம் மூன்று போர்களின் காலஅளவைச் சொல்கின்றது. மண் ஆசையில் விளைந்த பாரதப் போர் 18 நாட்கள் நடந்தது. பெண் ஆசையில் நடந்த இராம இராவண யுத்தம் 18 மாதங்கள் நடந்தது. முருப் பெருமான் சூரபன்மனை வதம்செய்ய நடந்த போர் 18 ஆண்டுகள் நடைபெற்றது. உலகில் போரால் விளைந்த துன்பங்கள் ஏராளம்!

இரண்டாம் உலகப் போரில் அழிந்த செல்வத்தைக் கணக்கிட்டால் உலகில் உள்ள அனைவருக்கும் ஐந்து அறைகள் கொண்ட வீடுகளும், ஒவ்வொரு நகரத்திற்கும் ஒரு மருத்துவமனையும் கட்டித் தரலாம்! என்று ஆய்வு முடிவுகள் தெரிவிக்கின்றன.

போரற்ற உலகம் வேண்டும். ''யாரொடும் பகைகொள்ளலன் என்ற பின் போர் ஒடுங்கும் புகழ் ஒடுங்காது'' என்றான் கம்பன்!

''போரிடும் உலகத்தை வேரோடு சாய்ப்போம்'' என்றான் பாரதிதாசன்.

முருகப்பெருமான் சூரபன்மனை வதம் செய்ய நிகழ்த்தியபோர் ஆணவத்தை எதிர்த்து நிகழ்ந்த போர்! இராமனை எதிர்த்து நின்ற இராவணன் எப்படி கடைசி நாளில் ஞானம்பெற்றான்?

''நாசம்வந்து உற்றபோதும் – நல்லதோர் பகையைப் பற்றேன்''

என்றான் இராவணன். அதைப்போல சூரபன்மன் ஆணவம் அகன்ற நிலையில் இறை இன்பத்தை உணர்கின்றான்.

''போயின அகந்தை போதம் புகுந்தன வலத்த தான
தூயதோர் தோளும் கண்ணும் துடித்தன புவனம் எங்கும்
மேயினபொருள்கள் முற்றும் வெளிப்படுகின்ற விண்ணோர்
நாயகன் வடிவம் கண்டேன் நற்றவப் பயன் ஈதன்றோ''

என்றான். சூரபன்மனின் இதயத்தின் இருள் விலகி மனம் இறைவனின் தூய அன்பை அனுபவிக்கின்றது.

எவருக்கும் கிட்டாத பெரும்பேறு! தான் போர்புரிந்தது பரம்பொருளோடு! அழியப்போகின்ற இந்த உடலைப்பற்றி நான் கவலை கொள்ளவில்லை!

''ஒன்றொரு முதல்வன் ஆகி உரைதரு மூர்த்தி முன்னம்
நின்றுஅமர் செய்தேன் இந்நாள் நெஞ்சினில் தளரேன் அம்மா!
நன்றிதோர் பெருமைபெற்றேன்! வீரனும் நானே ஆனேன்!
என்றும் இப்புகழே நிற்கும்! இவ் வுடல் நிற்பதுண்டோ''



''அழியப்போகின்றது தனது உடலாய் இருந்தபோதும் அழியாப் பேரின்பத்தைப் பெற்றேன்'' என்ற உணர்வு சூரபன்மனுக்கு ஏற்பட்டது.

பழம் வேண்டி நடைபெற்ற போட்டியில் விநாயகப்பெருமான் பழம் பெற்றார்! முருகனோ ஆண்டிக்கோலம் கொண்டு பற்றற்ற நிலையில் ஞானப்பழமாகவே மாறிவிட்டார்! அதனால் தாம் முருப்பெருமான் ''பழம் நீ'' என போற்றப்படுகின்றார்.

கோவணத்து ஆண்டி உலகவாழ்வைத் துறந்த உலகு நலம் போற்றும் உன்னத வாழ்வைக் காட்டுகின்றார். தீயவை அழித்தல் அல்ல அறம்! தீயவரின் தீமைக்குணத்தை நன்மையாக மாற்றுதலே உண்மையான அறம்!

சூரபன்மனை அழித்து ஒழித்துவிடாமல் மயிலாகவும், சேவற்கொடியாகவும் மாற்றித் தம் அருகே வைத்து அருள்பாலிக்கின்றார் முருகப்பெருமான்!

தீமையை நன்மையாக மாற்றுவதுதான் உண்மையான பக்திநெறி! முருகப்பெருமான், சூரபன்மனை வதம்செய்து மடைமாற்றிவிட்டார்! நாம் ஒவ்வொருவரும் நமக்குள் மறைந்து இருக்கின்ற சூரபன்மனை எப்பொழுது ஒடுக்கப்போகின்றோம்! நமக்குள் ''நான், நான்'' என்று சூரபன்மன் வாழ்ந்து கொண்டிருக்கின்றார். சூரபன்மன், சேவலாக மயிலாக மாறியது போல,

*நமக்குள் இருக்கின்ற நான் மறையவேண்டும்;*
*நாம் மலரவேண்டும்!*

நான் மறைய நாம் என்று உலகம் அனைத்தும் ஒருங்கிணைத்து மகிழவந்ததே உண்மையான சம்காரத் திருநாள்! இதயத்தில் நான் மறைய நாம் மலர காலம் அறிந்து கருணை புரியும் கோலாலம்பூர் நகரத்தார் அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமியின் திருவருளைப் போற்றி வணங்குவோம்!

# முருகப் பெருமான் திருவிளையாடல்

(சிவஞான சுவாமிகள் அடிப்பொடி சு. குஞ்சிதபாதம்,
திருவாவடுதுறை ஆதீனப்புலவர், திருவாவடுதுறை)

எல்லா உலகங்களிலும் புண்ணியம் தழைக்கவும், பக்குவ ஆன்மாக்கள் சிவஞானம் பெற்று உய்யவும் சிவபரம்பொருள் மேற்கொண்ட விசேடத் திருவுருவம் முருகப் பெருமான். இவ்வுண்மை கந்த புராணத்தில் இனிதே உணர்த்தப்படுகின்றது.

சிவபரம்பொருள் வாக்கு மனங்களுக்கு எட்டாதது. மறைகளின் முடிவுகளாலும் அளக்கொணாதது. எங்கும் வியாபித்திருப்பது. அந்த நின்மல மூர்த்தியே ஆறுதிருமுகங்கள் கொண்டு திருவுருவாய்ச் சரவண பொய்கையில் மணம்கமழும் தாமரைப் பூவில் தோன்றி அருளியது.

*மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினால் அளக்கொ ணாமல்*
*நிறைவுடன் யாண்டு மாகி நின்றிடும் நிமல மூர்த்தி*
*அறுமுக வுருவாய்த் தோன்றி அருளொடு சரவ ணத்தின்*
*வெறிகமழ் கமலப் போதின் வீற்றிருந் தருளி னானே.*

என்பது கந்தபுராணம். இப்பாடலின் மூலம் சிவபரம்பொருளே முருகப் பெருமான் என்னும் கருத்து தெளிவாக உணரப்படுவதாய் உள்ளது.

சூரபதுமன் முதலிய அசுரர்களை ஒடுக்கும் பொருட்டே முருகப் பெருமான் அவதாரம் நிகழ்ந்தது. ஆயினும் முருகப்பெருமான் முதலில் ஆற்றியபோர் அசுரர்களோடு அன்று. பின்னர் வேறு யாரோடு என்று வினவினால் நமக்குப் பெரு வியப்பினைத் தரும்வகையில் விடை கிடைக்கும். முருகப் பெருமான் முதலில் ஆற்றிய போர் தேவர்களோடுதான். இச்செய்தியினைக் கந்தபுராணத்துத் திருவிளையாட்டுப் படலத்தில் காணலாம். அப்போரும் முருகப் பெருமானின் திருவிளையாடல்களுள் ஒன்றே ஆகும்.

மனிதர்களாகிய நாம் விளையாடுவதன் மூலம் உடல் நலத்தையும் மன உற்சாகத்தையும் பெறுகின்றோம். இறைவன் ஏன் விளையாடல்களை மேற்கொள்ள வேண்டும் எனில் இறைவன் புரிகின்ற செயல்கள் யாவும் ஆன்மாக்களை உய்யக் கொள்வதற்காகவே ஆகும்.

ஆகையால் அவன் புரிகின்ற விளையாடலும் நாம் தெளிவு பெற்று முன்னேற்றப் பாதையில் உயரும் பொருட்டே ஆகும். அதனால் தான் அவன் இயற்றும் விளையாடல் 'திருவிளையாடல்' என்றழைக்கப்படுகின்றது.

திருவடியில் சலங்கைகள் ஒலிக்கவும், திருஅரையில் அரைஞாண்மணி ஒலிக்கவும், குன்றுகளிலும், சிவத்தலங்களிலும், செந்தமிழ் மொழி பயிலப்பெறும் இடங்களிலும் உமைக்கு இனிய மைந்தன் விளையாடல் புரிகின்றார்.

இந்த இனிய விளையாடல்களைக் கொண்ட எம்பிராட்டி உமை அன்னையார், சிவபிரானை வணங்கி வினவு-வார். "ஐயனே, நம் திருக்குமரனின் விளையாடல்கள் உள்ளத்தை உவகையுறச் செய்கின்றன. இவனுடைய திருவிளையாட்டு நெறியினை எனக்கு மொழிந்தருள வேண்டும்", என்று விண்ணப்பித்துக் கொள்வார்.

உமையன்னை இவ்வாறு அறியாதவர்போல வினவுவதைத் திருச்செவிமடுத்த எம்பெருமான் "உன் திருமகன் விளையாடல் நெறி நீ அறியாததன்று. இருப்பினும் உயிர்கள் அறிந்து உய்ய வேண்டி எம்மிடம் வினவுகின்றாய்" என்று உரைத்தருளி முருகப் பெருமானின் பெருமைகளைக் கூறலுற்றார்.

நம் குமரன் அழகிய சரவண பொய்கையில் தோன்றி அருளியமையாலே "சரவண பவன்" என்னும் திருநாமம் பெறுகின்றான். கங்கையினால் சரவண பொய்கைக்குத் தாங்கிச் செல்லப் பெற்றமையிலான் "காங்கேயன்"



என்னும் திருப்பெயரும் அவனுக்கு உண்டு. கார்த்திகைப் பெண்கள் வளர்த்தமையாலே 'கார்த்திகேயன்' என்னும் திருநாமமும், அவனுடைய திருவுருவங்கள் ஆறையும் திரட்டி நீ ஒருருவமாகச் செய்தமையாலே 'கந்தன்' என்னும் திருநாமமும் உண்டாயின.

நமக்கு உரிய ஆறுதிருமுகங்களே கந்தனுக்கும் ஆறுதிருமுகங்களாய் இலங்குகின்றன. நமது ஐந்தெழுத்துத் திருநாமம் ஓங்காரத்தோடு சேர்த்து வழங்கப் பெறுகையில் ஆறெழுத்தாகும். இந்த ஆறெழுத்தே உன் திருக்குமனின் ஆறெழுத்துத் திருநாமமாகும்.

ஆகையால் நமது சக்தியே! கேட்பாயாக. ஆறுமுகனாகிய அவனும் யாமும் வேறல்லோம். ஒருவரே! அவன் குழந்தைபோல் இருப்பான். ஆனால் முற்றும் உணர்ந்தவன். வழிபடும் பக்குவர்க்குச் செல்வமும், ஞானமும், வீடுபேறும் அருளவல்லவன் என்று சிவபெருமானே உரைத்தருள்கின்றார்.

*ஆதலின் நமது சக்தி அறுமுகன் அவனும் யாமும்*
*பேதகம் அன்றால், நம்போல் பிரிவிலன் யாண்டும் நின்றான்*
*ஏதமில் குழவி போல்வான், யாவையும் உணர்ந்தான் சீரும்*
*போதமும் அழிவில் வீடும் போற்றினர்க் கருள வல்லான்.*

இக்கந்தபுராணப் பாடல் சைவ மக்கள் எந்நாளும் மனதிற் கொண்டு போற்றத்தக்கது. அஞ்சும் வண்ணமும் அதே சமயம் யாருக்கும் துன்பம் நேராத வண்ணமும் திருவிளையாடல்கள் புரிந்தார்.

பூமி, மேலுலகம், கீழுலகம் ஆகியவற்றில் உள்ள பொருள்களை உலகம் விட்டு உலகம் பெயர்ந்து செல்லும் வண்ணப் பெயர்த்து விளையாடத் தொடங்கினார்.

இவ்வாறு விளையாடி அருளியது அசுரர்களுக்குத் தம் வலிமையினைக் குறிப்பாக உணர்த்தும் பொருட்டே ஆகும். எவர் கண்ணிலும் தோன்றாமல் இருந்து கொண்டு திருவிளையாடல்களைப் புரிந்தமையால் யாவரும் திகைத்தனர். அஞ்சி நடுங்கினர்.

ஒரு சமயம் இந்திரன் முதலிய தேவர்களுக்கு மட்டும் தரிசனமாகும் படித் தன்மையாய் ஒடியருளி மேருமலையின் ஒரு பகுதியைத் தாமரை இலையினைக் கொய்து எடுப்பது போல் கொய்து வீசு அருளினார். உடனே தேவர்கள், எல்லா உலகங்களையும் புரட்டி விளையாடுபவன் இப்பாலனே. இவன் மிகுந்த ஆற்றல் உடையவனாக இருக்கின்றான். இருப்பினும் இவனைப் போரில் வென்று வசப்படுத்தி ஆள்வோம் என்று செருக்குடன் முன்னே வந்தனர். அதன் விளைவாகப் போர் மூண்டது.

சிறிது நேரம் முயன்று போர் செய்வது போலக் காட்டிய பெருமான், பின்னர் பார்த்தோர் அனைவரையும் விரைவாக அழித்தருளினார். பின்னர் தேவகுரு வேண்ட உயிர்ப்பித்தருளினார். தேவர்களுக்குத் தம் விசுவரூப தரிசனத்தைக் காட்டியருளி கயிலாய மலைக்கு அருகில் உள்ள மலையில் அவர்கள் தமக்குப் புரிந்த பூசையை ஏற்றருளினார்.

தேவர்களின் சேனைக்குத் தலைவரெனத் தேவசேனாதிபதியாக விளங்கி அருளி சூரபதுமன் முதலிய அசுரர்களின் ஆதிக்கத்தை ஒடுக்கி எல்லா உலகங்களையும் இனிதே அருள்புரிந்தருளினார்.

செவ்வேள் பரமன் சேவடி வாழ்க.





# கோலாலம்பூர் - செந்தூல் ஸ்ரீ தண்டாயுதபாணி பதிகம்

ஆசிரியர்:- சிவஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்கள்
1969

காப்பு
கண்டார்விரும்பிக்
கருதுகோ லாலம்பூர்த்
தண்டா யுதபாணி
தாள்மலரைக் - கொண்டாடி
நற்பதிகம் சாற்றுதற்கு
நாடித் துணைநிற்கும்
கற்பகப்பேர் கொண்ட களிறு.

நூல்
பொன்பெருக்கும் கோலாலம்
பூரில் நகரத்தார்
முன்பெடுக்கும் ஆலயத்தே
முற்றிநிறை - அன்படுத்தார்க்
கின்பருளத் தண்டா
யுதமேந்தி எங்களிறை
துன்பொழிய நின்றான் துணை. 1

துணையடிகள் அன்றியிந்தத்
தொல்லுலகில் வேறு
துணையுண்டோ ஆருயிர்க்குச்
சொல்லில் - இணையில்லாக்
கோலாலம் பூரில்
குளிருந்தண் டாயுதக்கைச்
சீலா அடியேற்குச் செப்பு. 2

செப்பும் புகழ்மிகுதி
சேர்கோலா லம்பூரில்
அப்பனைக் கையில்தண்
டாயுதனை - எப்போதும்
பேசும்வாய் வாழ்வாய்
பிறவாயெல் லாமிரைக்கு
மூகும் வாய் சாவாய் மொழி. 3

மொழிமனமெய் மூன்றும்
முருகனுக்கே ஆக்கிப்
பொழில்மருவும் கோலாலம்
பூரில் - கழியுவகை
தாங்கி அமர்ந்தருளும்
தண்டா யுதபாணி
பாங்கிற் புரிக பணி. 4

பணியும் நகரத்தார்
பணிக்குநிகர் உண்டோ
தணிவில் பெருங்காதல்
சார்ந்தே - அணிமருவக்
கோலாலம் பூரிலவர்
கோயிலினில் தண்டொருகை
வேலாளன் பாதம் விரும்பு. 5

விரும்புவதும் அல்லால்
வெறுப்பதுவும் இல்லான்
சுரும்பர்க் கடம்பணியும்
தோளான் - விரும்புமன்பர்
வேண்டுவதை ஈய
வியன்கோலா லம்பூரை
ஆண்டுதண்ட பாணியா னான். 6

ஆனாத சீர்த்தி
அமைகோலா லம்பூரில்
மானாள் கரத்தோன்
மகிழ்மைந்தன் - தேனார்சொல்
நற்றாய் உமைகளிக்க
ஞானதண் டாயுதங்கொண்
டுற்றான்யாம் உற்றேம் உயர்வு. 7

உயர்வை விரும்புபவர்க்
கொன்றுரைப்பேன் உங்கள்
அயர்வை ஒழித்தின்பத்
தாழ்த்தி - உயர்வுதரும்
தண்டா யுதபாணிச்
சாமியைக்கோ லோலம்பூர்
கண்டு தொழுமின் கனிந்து. 8

கனியாத நெஞ்சக்
கயவர்க்குச் சேயன்
இனியான் நகரத்தார்க்
கென்றும் - நனியார்ந்த
தொண்டுகொண்டு பேறளிப்பான்
தொல்கோலா லம்பூரில்
தண்டா யுதபாணி தான். 9

தானே தனக்குத்
தலைவனாய் நின்றொளிர்வான்
வானாய் நிலனாகி
மன்னுவான் - கோனான
கோலாலம் பூர்த்தண்ட
பாணிக் குமரனன்பர்
பாலாவாள் பொன்மாது பார். 10

வாழ்த்து
மன்னுயிர்கள் வாழ்க
மருவுகோலாலம்பூர்
தன்னில் நகரத்தார்
சார்ந்தமைத்த - பொன்னிமயக்
கோயில் விளங்கும்
குகன்தண்ட பாணியருள்
மேயினிது வாழ்கபுவி மேல்.
நலமே தழைக.



# திருமுறைகளில் திருமுருகன்

*சித்தாந்தச் செம்மயி முனைவர் பழ. முத்தப்பன்*
*திருச்சி*

தென்னாடுடைய சிவபெருமானைப் போற்றி வழுத்துகின்ற தேவாரப் பதிகங்களில் சிவபெருமானின் புகழ் பெரிதும் பேசப் பெற்றிருந்தாலும் இடையிடையே விநாயகரைப் பற்றிய செய்திகளும், குமரவேளைப் பற்றிய செய்திகளும் இடம் பெற்றுள்ளன. தமிழ்க் கடவுளாம் திருமுருகனை மூவர் முதலிகளும் தங்கள் பதிகங்களில் சிற்சில இடங்களில் குறிப்பிட்டுள்ளனர். அவற்றைத் தொகுத்துத் தருவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

தேவாரத்தில் சிவபெருமானை முருகப் பெருமானின் தந்தை என்று குறிப்புடுவதில் தேவார ஆசிரியர் மூவரும் பெருமை கொள்கிறார்கள். ஞானசம்பந்தப் பெருமான் இரண்டாம் திருமுறையில், திருச்சக்கரமாற்றப் பதிகத்தில் "விளங்கிய சீர் பிரமன் ஊர்" என்று தொடங்கும் பாடலில்,

> "இளங்குமரன் தனைப்பெற்று இமயவர்தம்
> பகைஎறிவித்த இறைவன் ஊரே"

என்று குறிப்பிடுகின்றார். இப்பகுதியில் இமயவர்தம் பகை எறிவித்த என்ற தொடர் அமைந்து முருகப் பெருமான் தேவர்களின் பகையாகிய அரக்கர்களை வென்ற செய்தி குறிக்கப் பெற்று இளங்குமரன் என்பது முருகப் பெருமானைத் தான் என்பதை உறுதி செய்கிறது எனலாம். மேலும் இத்தொடரால் முருகப் பெருமான் தோற்றத்திற்கும் காரணமே தேவர்களின் பகையை அழிப்பதற்குத்தான் என்ற செய்தியும் பெறப்படுகிறது.

அதுபோலத் திருநாவுக்கரசரும் தன்னுடைய நான்காம் திருமுறையில் தனித்திரு நேரிசை என்னும் பதிகத்தில், உடம்பெனும் மனையகத்துள் என்று தொடங்கும் பாடலில்,

> "இடம் படுஞானத் தீயால் எரிகொள இருந்து நோக்கில்
> கடம்பமர் காளைத் தாதை கழலடி காண லாமே"

என்று குறிப்பிடுகின்றார். ஞானம் என்னும் தீயை ஏற்றி ஒன்றி இருந்து நினைந்தால் கடம்பமாலை அணிந்துள்ள முருகப் பெருமானின் தந்தையின் பொற்கழலைக் காணலாம் என்ற பொருளை இப்பகுதி தருகிறது. போருக்கு உரிய கடம்ப மாலையை அணிந்த முருகன் என்று இங்கு குறிக்கப் பெறுவதால் முருகனின் தோற்றம் பகையை அழிப்பதற்கே என்பதும் பெறப்படுகிறது. ஐந்தாம் திருமுறையில் முருகனின் தோற்றத்திற்கு உமையவளும் ஒரு காரணமாக அமைந்தவள் என்பதைத் திருக்கடம்பூர் திருப்பதிகத்தில் நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன் என்ற தொடர் மூலம் பெருமான் குறிப்பிடுகின்றார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளும் திருவாரூர் திருப்பதிகத்தில் ஆட்கொண்டு என்று தொடங்கும் பாடலில்,

> "காதலால் கடல் சூர் தடிந்திட்ட
> செட்டி அப்பனைப் பட்டனைச் செல்வ
> ஆரூரானை மறக்கலு மாமே"

என்று கடலில் மரமாக நின்ற சூரனை அழித்த செட்டி முருகனுக்கு அப்பன் என்று திருவாரூர் தியாகேசரைப் பொற்றுகின்றார். முருகனைச் செட்டி முருகன் என்று குறிப்பிடுவது சுந்தரர் காலத்திலேயே வழக்கத்தில் இருந்தமை புலனாகின்றது.

இம்மூவரின் பாடற் பகுதிகளால் முருகப் பெருமானைப் பெற்றுத் தேவர் பகையை அறுத்துப் பெருமை கொண்டவர் சிவபெருமான் என்பது மெய்ப்படுகிறது. மகன்வழி தந்தையின் பெருமையைப் குறிப்பிடுவது தமிழ்மரபு என்பதையும் இப்பகுதிகளால் அறியலாம்.

முருகப் பெருமான் ஆறு முகங்களையும், பனிரெண்டு கண்களையும் பெற்றவன் என்பதையும் மூவர் தேவாரப் பகுதிகள் குறிப்பிடுகின்றன. திருஞான சம்பந்தர் மூன்றாம் திருமுறையில் வழிமொழித் திருவிராகப் பதிகத்தில் "பகல் அளி செய் நகபணி" என்று தொடங்கும் பாடலில்,

''பகைகளையும் வகையில்அறு முகஇறையை
மிகருள நிகரில் இமையோர்''

என்று ஆறுமுகங்களை முருகப் பெருமான் கொண்டு விளங்கிய தெய்வம் என்று குறிப்பிடுகின்றார். அதுபோலத் திருநாவுக்கரசுப் பெருமானும் நான்காம் திருமுறையில் விடம் தீர்த்த திருப்பதிகத்தில்,

''ஆறுகொ லாம் அவர் அங்கம் படைத்தன
ஆறுகொ லாம்அவர் தம்மக னார் முகம்''

என்று குறிப்பிட்டுச் சிவபெருமான் மகனாகிய முருகப் பெருமானுக்கு ஆறுமுகங்கள் உண்டு என்பதைக் குறிப்பிட்டுக் காட்டுகின்றார். ஒன்று முதல் எண்களைப் பெற்றுள்ள இப்பதிகத்தில் ஆறு என்ற எண்ணுக்கு முருகப் பெருமானின் ஆறுமுகம் சுட்டிக்காட்டப் பெறுவது மிகவும் சிறப்புடையதாகும். அதுபோல முருகப் பெருமான் பன்னிரண்டு கண்களை உடையவர் என்பதைத் திருநாவுக்கரசுப் பெருமான் திருப்பூவணம் என்ற திருப்பதிகத்தில்,

''படைமலிந்த மழுவாளும் மானுந் தோன்றும்
பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றும்''

என்று தொடங்கும் பாடலில் என்று குறிப்பிடுவார். இவ்வாறு தேவாரப் பதிகங்களில் முருகப் பெருமானின் ஆறுமுகங்களும், பன்னிரண்டு கண்களுமாகிய உருவ அமைப்பு போற்றிப் புகழ் பெறுகின்றது எனலாம்.

அடுத்து தேவாரப் பதிகங்களில் சூரன் உள்ளிட்ட அசுரர்களைத் திருமுருகன் அழித்த செய்திப் பல இடங்களில் குறிக்கப் பெறுகின்றது. திருஞான சம்பந்தர் தேவாரத்தில் இரண்டாம் திருமுறையில் திருமீயச்சூர் பதிகத்தில் காயச்செவ்வி என்று தொடங்கும் பாடலில்,

“மாயச்சூர் அன்று அறுத்த மைந்தன்” என்று மாயைகளைச் செய்த சூரபன்மனை அழித்த செய்தி குறிக்கப் பெறுகிறது. அதுபோலத் திருநாவுக்கரசர் தேவாரத்தில் நான்காம் திருமுறையில், திருவதிகை வீரட்டானத் திருப்பதிகத்தில் ஆட்ட தேனும் என்று தொடங்குகின்ற பாடலில், “சூரட்ட வேலவன் தாதை” என்று குறிக்கப் பெறுகிறது. அது போலச் சுந்தரர் தேவாரத்தில் திருவாரூர்த் திருப்பதிகத்தில், திருத்தினை நகர் திருப்பதிகத்தில் வேட்தராய் என்று தொடங்கும் பாடலில், “கடல் சூர் தடிந்திட்ட சேந்தர்” என்று குறிக்கப் பெற்றுள்ளது. மேலும் திருக்கலய நல்லூர் திருப்பதிகத்தில்,

''பொரும்பலம துடை அசுரன் தாரகனைப் பொருது என்று தொடங்கும் பாடலில்
பொன்றுவித்த பொருளினைப் படைத்துகந்த புனிதன்''



என்றும் குறிக்கப் பெறுகிறது. இவ்வாறு மூவர் தேவாரத்திலும் அசுரர்கள் அழிக்கப் பெற்று புராணச் செய்தி இடம் பெற்று முருகனின் பெருமை நினைவு கொள்ளப் பெறுகிறது.

முருகப் பெருமானின் தேவியராக வள்ளி தெய்வானை என்று இரு பெண் தெய்வங்கள் உள்ளன. என்றாலும், மூவர் தேவாரத்தில் வள்ளியம்மை பெருமாட்டி பற்றிய செய்திகளே காணப் பெறுகின்றன. திருஞான சம்பந்தரின் இரண்டாம் திருமுறையில் அரிசில்கரைப்புத்தூர் திருப்பதிகத்தில், ஆறாம் பாடலில்

"வள்ளி முலைதோய் குமரன்" என்ற செய்தி இடம் பெற்றுள்ளது. திருநாவுக்கரசர் தேவாரத்தில் நான்காம் திருமுறையில் திருப்பெருவேளூர் திருப்பதிகத்தில், மூன்றாம் பாடலில் குறவி தோள் மணந்த செல்வக் குமரவேள்" என்று குறிக்கப் பெற்றுள்ளது. அதுபோலத் திருமறைக்காட்டுப் பதிகத்தில் கள்ளி முதுகாட்டில் என்று தொடங்கும் பாடலில், "வள்ளி மணாளர்க்குத் தாதை என்று குறிக்கப் பெற்றிருக்கின்றது. சுந்தரர் தேவாரத்தில் திருநள்ளாறு பதிகத்தில் மற வனை என்று தொடங்கும் பாடலில்,

"அமரர் சேனைக்கு நாயகன் ஆன
குறவர் மங்கைதன் கேள்வனை"

என்று குறிக்கப் பெற்றுள்ளது. இவ்வாறு முருகனை வள்ளியம்பெருமாட்டியை மணந்த முருகப் பெருமான் என்று குறிக்கப் பெற்றுப் போற்றப் பெறுகின்றான்.

முருகப் பெருமான் மயிலை வாகனமாகக் கொண்டவன் என்பது முருக வரலாற்றில் குறிப்பிடத் தக்கதாகும். முருகனின் மயில் ஊர்தியைப் பற்றியும் தேவாரப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. திருஞான சம்பந்தர் தேவாரத்தில் முதல் திருமுறையில், இராமேஸ்வரப் பதிகத்தில், "தழை மயில் ஏறவன்" என்றும், திருநாரையூர் சித்தீச்சுவரப் பதிகத்தில், "மடமயில் ஊர்தி தாதை " என்றும் குறிக்கப் பெற்றுள்ளது. திருநாவுக்கரசர் தேவாரத்தில் ஐந்தாம் திருமுறையில் திருப்பேரெயில் பகிகத்தில், "முன்னை யார் மயில் ஊர்தி முருகவேள்(7) என்று குறிக்கப்பெறுகிறது. சுந்தரர் தேவாரத்தில் திருவதிகை திருவீரட்டனப் பதிகத்தில், "பொன்னானை மயில் ஊர்த்தி முருகவேள் (8) என்று குறிக்கப்பெறுகிறது.

இதுபோல முருகப் பெருமான் வேலைக் கையில் ஏந்தியவர் என்ற செய்தி நாவுக்கரசர் தேவாரத்தில் குடந்தைக் கீழ்கொட்டம் திருப்பதிகத்தில், கூர் இலங்கு திருக்குமரன் (7) என்றும், திருவீழிமிழலை திருப்பதிகத்தில் "வேலார் கை, வீரியை (6-6) என்றும் குறிக்கப் பெற்றுள்ளது.

இத்தகைய செய்திகளோடு தேவாரப் பதிகங்களில் முருகனுடைய பெயர்களாக முருகன், இளங்குமரன், சேந்தன், கடம்பன், குமரன், சரவணத்தான், முருகவேள் என்ற பெயர்களும் இடம் பெற்று முருகப்பெருமானின் பெருமையைப் போற்றுகின்றன.

இதுவரை குறிப்பிட்ட செய்திகளால் முக்கட் பெருமானின் பெருமைகளைக் கூறும் தேவாரப் பதிகங்களில், முருகப் பெருமானின் பெருமைகளும் கூறப் பெறுகின்றன. முருகப் பெருமானின் பெருமைகள் குறிக்கப் பெறுகின்ற பொழுது தனி ஒரு செய்தியாகக் குறிக்கப் பெறாமல் பெருமைகளைக் கொண்ட முருகப் பெருமானின் தந்தை சிவபெருமான் என்றே குறிக்கப் பெறுகிறது. அதாவது மகனின் பெருமையோடு சிவபெருமான் தந்தையாக உருவகிக்கப் பெற்று முழுமுதல் தெய்வம் போற்றப் பெறுகின்றது எனலாம்.

# அலைகடலுக்கப்பால் ஆறுமுகன்

தமிழாகரன் தெ. முருகசாமி
(முன்னாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி, புதுச்சேரி 9)

மானமிகு தருமத்தின் வழிநின்று வாய்மையினில்
ஊனமில்சீர்ப் பெரு வணிகர்.... (பெரிய, காரைக்-1)

எனத் தன வணிக நாட்டுக்கோட்டை நகரத்தார் பெருமக்களைத் தெய்வச் சேக்கிழார் போற்றுகிறார். "தருமத்திற்கென்றே பிறந்தவர்கள் அவர்கள்" என்ற குறிப்பைச் சுட்டிய பின்னரே பெருவணிகர் என அவர்களைச் சுட்டுவது சிந்தனைக்குரியதாகும். தெய்வத் திருக்கோயில்களுக்கும் கல்விக்கும் அவர்கள் ஆற்றிய தொண்டுக்கு ஈடு இணை இல்லை. இப்பண்பிற்கான காரணம் யாதெனில் அவர்களிடம் இயல்பாகவே அமைந்த "வாய்மையினில் ஊனமில்சீர்" தான் என்கிறார் சேக்கிழார். சீர் என்ற சொல் புகழைக் குறித்தாலும் மற்றவர்க்கும் இல்லத்தார்க்கும் சீர் செய்யும் சிறப்பில் மகுடம் தாங்குபவர் நகரத்தார்களே ஆவர். இந்தச் சீர்மைக்கும் வளத்திற்கும் அவர்களின் வாய்மையுடன் கூடிய வாழ்க்கை முறையில் தெய்வபக்தியே சிறந்த காரணம் எனலாம். "வழிபடு தெய்வம் நிற்புறங் காப்ப" எனத் தொல்காப்பியர் கூறுதற்கேற்ப ஆரவாரமின்றி அவர்கள் கொண்டாடும் தெய்வபக்திதான் அவர்களுக்கான பக்கபலம் என்றால் அதில் மிகையில்லை. அந்த வகையில் நகரத்தார் போற்றும் வழிபடு தெய்வமாகக் கொண்டாடுவது தண்டேந்தும் தண்டாயுதபாணிக் கடவுளாகும்.

வரலாற்றுக் காலந்தொட்டுப் புலம்பெயர்ந்து வாழும் பூந்தமிழர்கள் தாம் கால்பதித்த இடங்களில் எல்லாம் தம் தாய் மண்ணின் வாசனையோடு தம்வழிபடு தெய்வத்தையும் உடன் கொண்டு சென்றனர். அப்படிச் சென்றதில் பெரும்பாலும் நாட்டுப் புறத் தெய்வங்களைக் கொண்டு சென்ற தமிழர்களுள் நகரத்தார்கள் தம்முடன் தண்டாயுதபாணியாம் முருகனை உடன் கொண்டு சென்றார்கள். "செட்டிக் கப்பலுக்குச் செந்தூரான் துணை" என்ற பழமொழியே இதனை மெய்ப்பிக்கும். அந்த வகையில் கீழைக் கடற்கரை நாடுகளாம் மலேயா, சிங்கப்பூரில் மக்களோடு மக்களாகத் தண்டாயுதபாணியும் தமிழகத்திலிருந்து குடிபெயர்ந்தான்.

உலகெங்கிலும் வாழும் ஆன்மாக்களுக்குக் குடி கூலி தரும் ஆண்டவன், யானை தன் பாகனுக்குக் கட்டுப்பட்டுக் கிடப்பது போல் பக்தர்களுக்குக் கட்டுப்பட்டவனாய் எங்கும் உடன் செல்வான். "பயந்த தனி வழிக்குத் துணை முருகா எனும் நாமங்கள்" என அருணகிரிநாதரின் கந்தரலங்கார வாக்கிற்கேற்ப நகரத்தார்கள் தங்கள் வாழ்க்கையின் அலங்காரமாக முருகனைக் கொண்டு சென்றார்கள். அலைகடலுக்கு அப்பாலான இடங்களில் ஆறுமுகன் ஆனந்தமாக உள்ளான். அவனை ஆனந்தப்படுத்தும் விதமாகத் தாய்த்திரு நாட்டில் அருளாளர்கள் பாடல் பாடிக் கொண்டாடியது போலவே அயல் மண்ணிலும் அசல் ஆன்மிகத் தமிழை அள்ளி அர்ச்சித்துள்ளார்கள். அந்த வகையில் யாழ்ப்பாணம் க. வேலுப்பிள்ளை என்பவர் எழுதிய சிங்கப்பூர் முருகேசர் பதிகம் என்பதும் ஒன்றாகும்.

அண்டபுவனாதி யுலகெங்குமருள்காலுமணி!
யானந்தமுய்க்குமணிமெய்
யடியரிதயத்தினில் வயங்குமணி! சுகசெல்வ
மருளுமணியனவரதமேற்
றண்டனைவிலக்குமணி! பிறவிப் பெருங்கட
றனைக்கடப் பிக்குமணிமுன்



றாரகன கந்தைகெட மாரகம் அளித்தமணி!
சரவணதடம்பயின்மணி!
முண்டகப் பிரமனைக்குட்டிவன் சிறைவை
முதுக்குறை வுறுமணி! யறு
முகமேவுமணிகார்த்திகைப் பெண்களருண்மரு
முலைப்பாலருந்தியமணி!
தெண்டிரையினஞ் சுண்டகண்டருக்குபதேசஞ்
செய்மணி! நீயென்பர்காண்!
செங்கமலமாதுவளர் சிங்கைநகர் மேவியருள்
பொங்குமுருகேசபரனே!

இறைவனை மணியாகக் கூறும் வழக்கம் உண்டு. அப்பன் நீ! அம்மை நீ! என்ற தாண்டகத்தில் இன்பொன் நீ! இம்மணி நீ! இம்முத்தும் நீ!" என அப்பர் பெருமான் பாடுகிறார். நவரத்தினங்களுள் மணிக்குத் தனியானதொரு சிறப்புண்டு. தானாகவே ஒளிரும் இயல்புடையது மட்டுமின்றி அதன் உட்புறமும் ஒளியுடையதாக இருக்கும். இறைவன் உள்ளும் புறம்பும் உள்ளவன் என்பதற்கான பொருத்தமுறும் உவமையாகும். அத்தகு சிறப்புமிக்க மணி என்ற சொல், ஒளி என்ற பொருளை மட்டுமின்றி ஓசைக்கும் உரிய சிறப்பைத் தருவதாகும். "ஓசை ஒலி எலாம் ஆனாய் நீயே!" என்பது அப்பர் வாக்கு. ஆக ஒலி, ஒளிகளை ஒரு சேரக் கொண்டுள்ளது மணி என்பதால்தான் அருணகிரிநாதர் திருவாவினன் குடித் திருப்புகழை "நாதவிந்து கலாதி நமோ நம" என்று முருகப்பெருமாளை மணியாகப் போற்றி பாடத் தொடங்கினார். நாதம் - ஒலி, விந்து - ஒளி, ஒலியும் ஒளியும் இல்லையேல் உலக இயக்கமே இல்லை. இதன் குறியீடுதான் மணி. இதைத்தான் வடலூர் வள்ளலார் சென்னைக் கந்தகோட்டம் பெருமானை,

தண்முகத் துய்யமணி! யுண்முகச் சைவமணி!
சண்முகத் தெய்வ மணியே!

என்றார். புறத்தே கருணையுள்ள முகம் உடையவனாக இருப்பதோடு அகத்தே பக்தர்களை நாடித் தேடும் கடவுளாகவும் உள்ளான் என்ற கருத்தில் தண் முகம், உள் முகம் என்ற சொற்கள் புறத்தும் அகத்தும் ஒத்துள்ள மணிக்குச் சமமாகக் கூறப்பட்டன. எனவே சிங்கப்பூர்ப் பதிகம் முருகனை மணிமணியாக வருணித்ததில் வியப்பில்லை எனலாம்.

முருகனுக்குள்ள பல பெயர்களுள் தண்டாயுதபாணி என்பதும் ஆறுமுகன் என்பதும் சிறப்பான பெயர்களாகும். அச்சிறப்பிற்கான காரணத்தைச் சிங்கப்பூர் பதிகம் பதிவு செய்துள்ளது. இப்பதிகப் பாடல் அவன் வாழும் சிங்கப்பூரை "செங்கமல மாது வளர்சிங்கை நகர்" என்கிறது. செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள் எப்போதும் தாண்டவமாடும் ஊர் சிங்கப்பூர். பதிகம் பாடிய புலவரின் வாக்கிற்கேற்ப "மாது வளர்" என்ற சொல் புண்ணிய புனிதமானது. எந்த விளைபொருளாலும் பெருந் தொழில்களாலும் பொருளாதாரப் பெருக்கம் இல்லையானாலும் சிறிய தீவாக உள்ள சிங்கப்பூர் சிங்காரத் திருநகராகவும் செல்வங்கொழிக்கும் பெருநகராயும் உள்ளதற்குக் காரணம் யாதெனில் கீழை நாடுகளுக்குச் செல்வோரை வரவேற்கும் வாயில் நகரமாக அமைந்த இயற்கை வாய்ப்பால் தெய்வீகம் கொழிக்கும் செல்வ நகரமாக உள்ளது. இத்தெய்வீகம் இயல்பாகவே "சிங்கப்பூர்" என்ற பெயரில் அமைந்ததாக அவ்வூரில் சித்திரக் கவி ஒன்று சிறப்பிக்கின்றது.

வாலரிதன் னாமமெது! வண்மைபெறு மாமேய்த்த
வாலரிதா னுண்டதென்னே! யாரிறென்? - வாலில்லா
வேங்கையான் நின்றவடி வேலவனே வாழ்ந்திருக்கும்
சிங்கப்பூ ரென்றே தெளி

கேள்வி கேட்டு விடை பகருவதான கருத்தில் பாடப்பட்ட வினா விடை வெண்பாப் பாடலாகும் இது. தோன்றா எழுவாயாக நெஞ்சத்திடம் கூறும் பாங்கில் மூன்று வினாக்களைக்கேட்டு அவற்றிற்கான விடை பகர்கிறது இப்பாடல்.

முருகன் வாழும் ஊர் - சிங்கப்பூர் என்கிறது பாட்டு. அச்சிங்கப்பூரைச் சொல்லும் விதந்தான் தெய்வீகச் சொல் விளையாட்டாக உள்ளது.

வாலையுடைய அரி என்தன் பெயர் எது? அது சிங்கம். வளமான ஆ நிரைகளை மேய்த்த ஆலிலையில் கிடந்த அரியானவன் (திருமால்) தான் உண்டது என்னே! என்றால் அது "பூ" ஆகும். பூமி அல்லது பூலோகம் என்றதன் முதலெழுத்து "பூ". பூ என்றால் ஐம்புதங்களால் பூத்தது என்று பொருள். அடுத்து "ஆர்" என்ற சொல்லின் இறுதி எழுத்து என்ன என்றால் அது "ர்" என்பதாகும். இப்படியாக - சிங்கம்+பூ+ர்= சிங்கப்பூர் என்ற சொல், பாட்டுள் சொற்பொருளாக உள்ளது. இத்தகு சிங்கப்பூரில், வாலில்லாத வேங்கை என்ற கருத்துடைய வேங்கை மரமாய் முருகன், வள்ளி திருமணத்தின் விளையாடலில் நின்றான் என்பதால் வேங்கையாய் நின்ற வடிவேலன்தான் சிங்கப்பூரில் வாழ்ந்து கொண்டிருக்கிறான் என முருகனுக்குப் புகழாரம் சூட்டுகிறது இப்பாட்டு. ஆக, தெய்வீக மணமும் திருமகளின் செல்வச் செழிப்பும் ஒருங்கே கொண்டதால் சிங்கப்பூர் பதிகம் "செங்கடலை மாது வளர் சிங்கை நகர்" எனப் பாராட்டியது தகும் எனலாம்.

இப்பாடலில் 11 மணிகளாக முருகன் உவமைப்படுத்தப்பட்டுள்ளான். முருகேசன் அகில உலகிற்கும் அருள் புரிகின்ற மாமணியாய் உள்ளான் என்கிற முதல் தொடரால் ஓர் உண்மை புலப்படுகிறது. யார் யார் என்னென்னவற்றையெல்லாம் சிந்திக்கின்றார்களோ அவற்றையெல்லாம் சிந்தாமல் சிதறாமல் அருளுவதால் அவனை (முருகனை) அருள் காலு மணி என்கிறார் பதிக ஆசிரியர். காலுதல் என்றால் தருதல், எனவே முருகன் சிந்தாமணி போன்றவன் என்பது கருத்து. அவன் எப்போதும் எல்லோர்க்கும் ஆனந்தம் தருபவன். அன்புடன் வணங்கும் அடியார்களின் உள்ளத்தின் ஒளிரும் மணியானவன். சுகமெலாம் அருள்பவன். எப்போதும் (அனவரதமேல்) அடியார்க்குமேலெழுந்து வரும் (பாவங்களை) தண்டங்களைப் போக்குபவன். பிறவிக் கடலைக் கடக்க உதவுபவன். முன்னொரு காலத்தில் தாரகா சூரனின் அகந்தையைக் கெடுத்து அவனை அழித்தவன் (மாரகம் அளித்தல் - இறப்பைத் தருதல் - அதாவது அழித்தல்). சரவணப் பொய்கையில் வளர்ந்தவன். மிக்க முதறிவுடையவன். அறுமுகமானவன். கார்த்திகைப் பெண்கள் அறுவரால் பால் கொடுத்து வளர்க்கப்பட்டவன். நஞ்சுண்ட கண்டனான சிவனுக்கு உபதேசம் செய்தவன். இத்தகு பண்பு நலங்கள் கொண்ட முருகன் சிங்கை நகரின்கண் உள்ளான் என்று அனைவரும் கூறுவர் - என்பது பாடலின் கருத்து.

இப்பாடலின் உள்ள "அனவரதமேல் தண்டனை விலக்கு மணி" என்ற தொடர் பொருளாளல் முருகன் தண்டாயுதபாணி என்ற சிறப்புப் பெற்றவன் என்ற குறிப்பு அடங்கிக் கிடக்கின்றன. தண்டம் என்பது கோல், பாணி - கை, கோலேந்துவதால் தண்டபாணி, பாது காப்பு காரணமாகச் சாதாரண மனிதன் கையில் கோல் ஏந்துவது போல் முருகன் கோலை ஏந்துவதில்லை. தண்டம் உள்ளவரெல்லாம் தண்டபாணியும் அல்லர். தண்டேந்தியவரெல்லாம் தண்டல்காரர் அல்லர் என்பது ஒரு பழமொழி. இதனால் அரசாங்கத்திற்குச் செலுத்தும் வரிப்பொருளைத் தண்டல் செய்வதற்க்கு அடையாளமாகத் தண்டேந்துபவர் உண்டு. அவரைப் போல முருகன் ஆன்மாக்களின் உண்மையான அன்பை, பக்தியை வசூலிப்பவனாக (தண்டல் செய்பவனாக) உள்ளதால் அவன் தண்டபாணி ஆவான்.

வரி வசூலிப்பில் மாற்றம் ஏற்படுமாயின் தண்டிக்க வேண்டியும் அமையலாமென்பதால் தண்டிப்பதற்குரிய அடையாளமாகவும் தண்டம் இருப்பதைப் போல முருகன், சூரபதுமன் போன்ற அசுரர்களைத் தண்டிப்பதற்குத் தண்டேந்தியதால் முருகன் தண்டபாணி என்ற பெயர் பெறுவான். பத்தியை வசூலிப்பதற்கான அறக்கருணையையும் அசுரரை அழிப்பதற்கான மறக்கருணையையும் தண்டாயுதத்தாலே செய்வதால் முருகனின் சிறப்பான அருட்செங்கோல் பொற்பைக் காட்ட அவன் தண்டபாணி எனப்பட்டது தனிச் சிறப்பேயாம் என்க! இந்தச் சிறப்பிற்கேற்பவே சிங்கப்பூர்ப் பதிகம் அனவரதமேல் தண்டனை விலக்கு மணி" என்றது பெருஞ்சிறப்புக்குரியதாம். அதாவது, தண்டனை செய்பவன் தண்டபாணி ஆகான் என்பது திண்ணம். தண்டனை விலக்குபவனே அப்பெயருக்குப் பொருத்தமாவான். தீய ஆன்மாக்களுக்குத் தண்டனை கொடுப்பதும் நல்ல ஆன்மாக்களுக்கு அவை அறியாமலே படரும் தீமையை ஒறுத்துத் தண்டித்து நல்லான்மாவாக ஆட்கொள்வதுமான மந்திரக்கோல் முருகனேந்தும் தண்டம் என்பதால் அவன் தண்டபாணி என்று சொல்லுக்கு முற்றிலும் பொருத்தமாவான் என்பதால்தான் தமிழகத்து முருகக் கடவுளின் கோயில்கட்கெல்லாம் சிகரமாகத் திகழ்வது தண்டாயுதபாணி வீற்றிருக்கும் பழநியம்பதியேயாம் எனலாம்.



ஆண்டிக் கோலமான தண்டாயுதனுக்கு முகம் ஆறு. திசைகள் நான்கு. மேல் கீழ் பூமிகள் இரண்டு. ஆக ஆறு பக்கங்கள் போல் "எங்கும் ஈசன் எனாதவர்க்கில்லையே" என்றபடி அவன் எல்லா இடங்களிலும் நீக்கமற உள்ளான் என்பதை உணர்த்தவே ஆறுமானான் முருகன். இதைக் குமரகுருபரர் ஐந்து முகத்தோடு அதோ முகம் என்று போற்றினார். கண்ணாற் காணும் பெட்டிக்கு நான்கு பக்கம் தெரிகிறது. மேற்பக்கமும் தெரிகிறது. தரை மீது படிந்த பக்கம் தெரியாததாய் உள்ளதாலேயே அது இல்லை என்பதாக இல்லாமல் உன் முகமாய் உள்ளதென்பதை, அப்பெட்டியை உயர்த்திப் பிடித்தால் நன்கு புரிந்து கொள்ளல் போன்றதாக ஐந்து முகத்தோடு அதோ முகம் உள்ளவன் முருகனாவான். எனவே எங்கும் வியாபித்தவன் என்பதாலும் அவன் ஆன்மாக்களைக் கண்காணித்துக் கொண்டே இருப்பதற்குக் அடையாளமாகத் தண்டு கொண்டிருப்பவன் என்பதாலும் அவனையே பிரதானமாக நகரத்தார்கள் தாம் புலம்பெயர்ந்து வாழும் இடங்களில்லெல்லாம் நிலைநிறுத்தி வழிபட்டனர் எனலாம்.

அலைகடலுக் காப்பால் மலேயாசிங் கப்பூர்
நிலை கொண்ட நீள்தண்ட பாணி - கலைவல்ல
தண்டமிழ் நாட்டார்க்கும் தாரணி யுள்ளார்க்கும்
கண்கண்ட தெய்வமவன் காண்!



# வினை தீர்க்கும் வேலவன்

(முனைவர் இராமசௌந்திரவல்லி, தமிழ்நாடு)

பாரத தேசத்தின் அரிய இந்து சமயமும் ஒன்று. இது எல்லாக் காலங்களிலும், எல்லா இடங்களிலும் மனித வாழ்வில் பெரும் பங்கு வகிக்கிறது. மனங்களில் எழுப்பப்படும் பல்வேறு வினாக்களுக்கு, அறிவுசார்ந்த விடைகளைத் தேடிய பணியைச் செவ்வனே செய்தவர்கள் இந்து சமயப் பெரியவர்கள். இந்த தேசத்தின் பாரம்பரிய நம்பிக்கைகளுள் ஒன்று விதி பற்றிய கோட்பாடு. இது எந்த நிலைகளுள் ஏற்றுக் கொள்ளத்தக்கது, எங்கு ஒதுக்கத்தக்கது என்பது ஆய்வுக்குரியது.

நம் நாட்டில் வழக்கில் இருந்த சமயங்களுள் பெரும்பாலானவை விதிக்கோட்பாட்டை ஏற்றுக் கொண்டவையே. விதி என்ற ஒன்றுதான் மனிதனின் எல்லா நிலைக்கும் காரணமாக அமைவதாகவே இச்சமயங்கள் பேசுகின்றன. பிறவிகள் பற்றிய நம்பிக்கையும், அவற்றின் தொடர்ச்சி பற்றிய செய்திகளையும் இந்து சமயங்கள் மட்டுமல்லாது சமண, பௌத்த சமயத்தாரிடமும் காணலாம். சைவ சமயத் தத்துவங்கள் விளங்கும் சைவ சித்தாந்த நூல்கள் இந்த விதிக் கோட்பாட்டையே வினை அல்லது கன்மா எனக் குறிப்பிடுகின்றன. உயிரினை ஆட்படுத்துவனாக ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்கள் பேசப்படுகின்றன. இவற்றில் கன்ம மலமே வினை அல்லது விதி எனப்படுவது. இந்த மலமே பிறப்பின் தொடர்ச்சிக்குக் காரணமாகிறது. உயிர் சென்ற பிறப்பில் செய்த நல்வினை தீவினைகளை சஞ்சித கன்மம் என்கின்றனர்.

சஞ்சித கன்மமே இப்பிறவிக்கு காரணமாகிறது. செய்த வினைகளின் பயனை அனுபவிப்பதற்கு இப்பிறவி எடுத்துள்ளோம். இப்பிறவியால் அனுபவிப்பதே பிராரத்த கன்மம். இப்பிறவியிலும் நாம் செய்யும் நன்மை தீமைகள் உண்டு. அவற்றின் பயனை அடுத்து வரும் பிறவிகளுக்காக விட்டுச் செல்கின்றோம். அவையே ஆகாமிய கன்மம் எனப்படும். ஆகவே, சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் எனப்படும். இவையே சங்கிலித் தொடர் போன்ற நம் பிறவிக்களுக்குக் காரணம் என்கின்றது சைவ சித்தாந்தம். எனவே நாம் அனுபவிக்கும் இன்ப துன்பங்களுக்குக் காரணம் நாம் செய்த வினைகளே; இவற்றை அனுபவித்தே தீர வேண்டும் என்பதுதான் விதிக் கோட்பாடு என்பது.

சமணமும் இதனை ஏற்றுக் கொள்கிறது. பழம் பிறப்பின் தொடர் நிகழ்வுகளே இப்பிறப்பின் சிக்கல்களுக்குக் காரணம் என்கிறது சமணம். சமணக் காப்பியமாகிய சிலப்பதிகாரம் கூறும் மூன்று அடிப்படைக் கொள்கைகளில் ஒன்று "ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும்" என்பதே. கதை நிகழ்வில் காரணம் கூற முடியாத இடங்களில் இளங்கோவடிகள் ஊழ்வினையையே முன் வைக்கிறார். காப்பிய நாயகனாகிய கோவலனின் துன்பங்களுக்குக் காரணம் என்ன? இப்பிறப்பில் அவன் தானதர்மங்கள் பல செய்தவன்; அறவழிப்பட்ட சிந்தனை உடையவன், எனவே மாடலமறையோன் என்ற அந்தணன் வழியாக "இம்மை செய்தது யானறி நல்வினை, மும்மைப் பயன் கொல்" என்று பேச வைக்கிறார்.

அதுபோலவே பழம் பிறப்பின் கதைகளும், அவற்றின் தொடர்ச்சியே இப்பிறப்பு நிகழ்வுகளும் என்பது பௌத்த காப்பியமாகிய மணிமேகலையாலும் பேசப்படுகிறது.

காலத்தில் முற்பட்டவை என நமக்குக் கிடைத்துள்ள சங்க இலக்கியங்களில்கூட இந்த நம்பிக்கையைக் காணலாம்.



நீர்வழிப் படூஉம் புணை போல்
ஆருயிர் முறைவழிப் படூஉம் என்பது
திறவோர் காட்சியின் தெரிந்தனம் ஆதலின்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை வியத்தல் அதனினும் இலமே

எனப் புறநானூறு பேசுகிறது. நீரின் போக்கில் மிதந்து செல்லும் புணைபோல விதி வழியே உயிர் செல்லும் என்பது இங்கு வலியுறுத்தப்படுகிறது.

திருவள்ளுவர் "ஊழ்" என்ற தனி அதிகாரமே படைத்துள்ளார். அறிவினால் சகலமும் வசப்படும் என்று உரைத்த வள்ளுவரே "ஊழில் பெருவலி யாவுள?" என்ற மிகப் பெரிய வினாவை எழுப்புகிறார்.

மண்ணில் வந்து மனிதனாக நடமாடிய பரம் பொருள்கூட இந்த விதிவசப்பட்டதே என்பதைக் கம்பரும் காட்டுகிறார். அண்ணனுக்குப் பட்டாபிஷேகம் இல்லை என்பதை அறிந்து கோபத்தில் கொந்தளிக்கிறான் இலக்குவன். ஆனால், அவன் சினத் தீயைத் தணிக்கும் கார்கால மேகம்போல வந்த இராமன் பேச்சு நம்மைச் சிந்திக்க வைப்பதாகும்.

''நதியின் பிழையன்று நறும்புனல் இன்மை, அற்றே
பதியின் பிழையன்று, பயந்து நமைப் புரந்தாள்
மதியின் பிழையன்று, மகன் பிழையன்று, மைந்த
விதியின் பிழை இதற்கு என்ன வெகுண்டது என்றான்''

இப்படித்தான் நடக்க வேண்டும் என்பது விதிக்கப்பட்ட விதி. எனவே அதை ஏற்றுக் கொள்வதே முறை என இராமன் பேசும் பேச்சு விதிக் கோட்பாட்டின் அழுத்தமான நம்பிக்கையை விளக்குவதாகும்.

இவை மட்டுமின்றி, நம் தமிழ் மக்களிடையே வழங்குகின்ற சில தொடர்களும் இந்த நம்பிக்கையை வலியுறுத்தவன. "ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ் கடல் நீர், நாழிமுகவாது நானாழி" என்னும் ஔவையின் கூற்று நாட்டுப்புற மக்களின் நம்பிக்கை வெளிப்பாடேயாகும். எழுதிச் செல்லும் விதியின் கை எழுதி எழுதி மேற்செல்லும் என்றே உமர்கய்யாம் பாடலில் பேசப்படுகிறது. பல புரட்சிச் சிந்தனைகளுக்கு உரத்துக் குரல் கொடுத்த பாரதிகூட ஓரிடத்தில் "விதியே! விதியே! தமிழச் சாதியை என் செய நினைக்கிறாய்!" என்று நொந்து கூறுகிறான்.

இவ்வளவு அழுத்தம் பெற்ற இந்த விதிக் கோட்பாட்டை ஏற்றுக் கொண்ட இந்து சமயம் இதை வெல்வதற்கான வழியையும் சிந்தித்துள்ளது என்பதுதான் வியப்புக்குரியது. ஏனைய சமயங்கள் விதியை வெல்லும் வழி பற்றிப் பேசவில்லை. இந்து சமயம் மட்டுமே இது பற்றிச் சிந்தித்துள்ளது. பூரண சரணாகதி என்பதே விதியை வெல்லவல்லது.

''சிவனவன் என் சிந்தையினுள் நின்றவதனால்
அவனருளாலே அவன்தாள் வணங்கி
சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை
முந்தை வினை முழுதும் ஓய உரைப்பன் யான்''

என மணிவாசகர் போற்றுகிறார்.

சிவபுராணம் படிப்பதன் பயனாக முந்தை வினை முழுதும் ஓய்ந்து தேய்ந்து விடும் என்பது வெளிப்படை. கோளறு திருப்பதிகம் பாடிய திருஞான சம்பந்தப் பெருமானும் இறைவன் குடிகொண்டிருக்கும் உள்ளம் உடையோரை நாளும் கோளும் நலிவுறச் செய்யா என்கிறார்.





வைணவ சமயப் பெரியார்களும் இந்த நெறியையே உரைக்கின்றனர்.

"செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே" எனக் குலசேகர ஆழ்வாரும்,

"வாயினால் பாடி மனதினால் சிந்திக்கப்
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும்"

என ஆண்டாள் நாச்சியாரும் பேசுவன நோக்கத்தக்கவை. போய பிழை என்பது சஞ்சித கன்மமாகவும், புகுதருவான் நின்றன என்பது ஆகாமிய கன்மம் எனவும் கொள்ளலாம்.

கௌமார நெறிநின்ற முருக பக்தர்களுக்கு வினை தீர்க்கும் மருந்தாக நிற்பவன் முருகப் பெருமானே. "சும்மாயிரு சொல்லற என்றலுமே அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே" என்றுதான் முருகப் பெருமானிடம் பெற்ற உபதேசத்தை அருணகிரிநாதர் பதிவு செய்கிறார். முருகப் பெருமானையே தன் ஞானாசிரியனாகக் கொண்டவர். முருகப் பெருமானின் அருள் வெள்ளத்தில் ஆனந்தம் அடைந்த அருணகிரியார் அந்த அனுபவத்தோடு ஒப்பிடும்போது கரும்பும் துவர்த்துச் செந்தேனும் புளித்து அறக்கைத்தது என்பர். இவ்வாறு முருகப் பெருமானின் அருளானந்தத்தில் திளைத்த அருணகிரியார் மனித வாழ்வின் சகல நிலையிலும் அவனே துணையாவான் என்பார்.

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்மை குன்றா
மொழிக்குத் துணைமுருகா எனும் நாமங்கள் முன்பு செய்த
பழிக்குத் துணையவன் பன்னிருதோளும் பயந்த தனி
வழிக்குத் துணை வடிவேலும் செங்கோடன் மயூரமுமே"

என்கிறது கந்தரலங்காரம். இங்கு முன்பு செய்த பழி என்பது சஞ்சித கன்மத்தைக் குறிப்பது எனலாம். பயந்த தனிவழி என்பது மரணத்துக்குப் பின் உயிர் செல்கின்ற பாதை. இந்தப் பயணம் அடுத்த பிறவியை நோக்கியது. ஆனால் முருகப் பெருமானின் பூரண அருள் கிடைத்தால் அவன் அழித்துப் பிறக்க வொட்டாத அயில் வேல் உடையவன். எனவே பிறப்பின் தொடர்ச்சியும் நாம் செய்த வினையின் விளைவுகளும் நம்மை அணுகா என்கிறார்.

அனுபவித்தே ஆக வேண்டும் என்ற விதிக் கோட்பாடு, இங்கு அருணகிரியார் போன்ற பக்தர்களால் உடைக்கப்படுகிறது. விதி எனப்படுவது படைப்புக் கடவுளாகிய பிரம்மன் என்றும் பொருள்படும். பிரம்மனால் விதிக்கப்பட்ட நம் விதியைக் கூட முருகனின் அருள் இருந்தால் நாம் வெல்லலாம் என்பதே அவர் தரும் உண்மை. அந்த நான்முகனையே 'குட்டிச் சிறையிலிட்ட கோமான்" அல்லவா முருகன். எனவே அவனிடத்து முழுமையாகச் சரண் அடைகின்றபோது, அந்த பிரம்ம தேவன் எழுதிய தலை எழுத்துக் கூட அழிந்து போகிறதாம்.

"சேல்பட்டழிந்தது செந்தூர் வயல்பொழில் தேங்கடம்பின்
மால்பட்டழிந்தது பூங்கொடி யார்மனம் மாமயிலோன்
வேல்பட்டழிந்தது வேலையும் சூரனும் வெற்பும் அவன்
கால்பட்டழிந்தது இங்கு என்தலைமேல் அயன் கையெழுத்தே"

பிரம்மனின் எழுத்து அழிக்க இயலாதது. ஆனால் முருகனின் திருவடிச் சரணம் அந்த விதியையும் மாற்றி எழுத வல்லது.

வாழ்நாள் முழுவதும் முருகனை நிந்தனை செய்தவன் சூரபதுமன். இந்தச் சின்னக் குழந்தையா என்னை வெல்லும் என்று எண்ணியவன். 1008 அண்டங்களை 108 யுகங்கள் ஆளுகின்ற வரமும், இந்திரஞாலத் தேரும், வச்சிரயாக்கையும் பெற்றவன் என்ற செருக்கே அவன் ஆணவத்திற்குக் காரணம். ஆணவ மலத்தின் உச்சத்தில் நின்ற சூரன் போர்க்களத்தில் முருகப் பெருமானை



நேருக்கு நேர் சந்திக்கிறான். கண்டவுடன் அவன் மனத்தில் தோன்றிய எண்ண மாற்றங்களைக் கச்சியப்பர் விவரிக்கிறார். பாலன் என்று நினைத்த முருகனின் விசுவரூபம் அரக்கன் மனத்தில் பெரும் கிளர்ச்சியை ஏற்படுத்திவிட்டது. ஆயிரம் கோடி மன்மதர்களின் அழகும் இவன் பாததூளிக்கு ஈடாகாதே! என்று வியக்கிறான். அவன் மனத்தின் ஆணவம் கொஞ்சம் அகன்றது. ஓடிப்போய் முருகனை வணங்க வேண்டும்; அவன் திருப்பாதங்களில் சரணடைய வேண்டும் என்ற எண்ணுகின்றான். ஆனால் அரக்கனிடத்து இருந்த நான் என்ற ஆணவம் தடுத்தது. மீண்டும் போர் செய்தான். முருகனால் வதம் செய்யப்பட்டு ஆட்கொள்ளப்பட்டான். சேவலும் மயிலுமாக வந்த சூரனுக்கு முருகன் தன் அருகிருக்கும் வரம் தந்தான். கச்சியப்பரே இதனைக் கண்டு வியக்கிறார். சேறுபடிந்தவர்கள் நீரில் கழுவினால் தூய்மை பெறுவர். அதுபோல ஆணவ மலம் முருகனின் அருள் வெள்ளத்தில் அழிந்து போகும்.

> ‘‘தீயவை புரிந்தாரேனும் குமரவேள் திருமுன் உற்றால்
> தூயவராகி மேலைத் தொல்கதி அடைவர் என்கை
> ஆயவும் வேண்டுங் கொல்லோ அடுசமர் இந்நாள் செய்த
> மாயையின் மகனுமன்றோ வரம்பிலா அருள்பெற்றுய்ந்தான்’’

என்பது கந்தபுராணம். தீய வினை உடையவர்கள்கூட திருமுருகன் அருள் பெற்றால் உய்தி அடைவர் எனில் மனம் நிறைந்த பக்தியோடு வழிபடும் பக்தர்களின் விதி என்னும் இடர் களைந்து ஆட்கொள்வன் வடிவேலன் என்பதில் ஐயமில்லை.







# கச்சியப்ப சிவாச்சாரியார்

"சைவ சமயப் புரவலர்" டத்தோ டாக்டர் வ. கதிரேசன்
துணைத் தலைவர், மலேசிய அருள்நெறித்திருக்கூட்டம், கோலாலம்பூர்

"அப்பா இம்முத்திக்கு அழியாத காரணந்தான்
செப்பாய் அருளாலே; செப்பக்கேள் - ஒப்பில்
குருலிங்கவேடம் எனக்கூறில் இவை கொண்டார்
கருவொன்றி நில்லார்கள் காண்
உண்மை விளக்கம் - 51

குருவழிபாடும், இலிங்க வழிபாடும் அடியார் வழிபாடும் ஆகிய இவையே முக்திக்கு வழியாகும் என்பது இப்பாடலில் தெளிவாகக் கூறப்பட்டது. முருகன் ஔவைப் பாட்டியிடம் இவ்வுலகத்தில் பெரியது எனக்கேட்க ஔவையார்

"உமையோ இறையவர் பாகத்தொடுக்கம்
இறைவரோ தொண்டர் உள்ளத் தொடுக்கம்
தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே"

எனக் கூறுகிறார். இவ்விரு பாடல்கள் மூலம் இறையடியார்கள் பெருமை எத்தகையது என்பது தெளிவாகக் கூறப்பட்டுள்ளதைக் காணலாம்.

சங்க கால நக்கீரர் தொடக்கம், அருணகிரியார், குமர குருபரர்; கச்சியப்பர், பாம்பன் சுவாமிகள் எனப் பல முருகனடியார்கள் வாழ்ந்துள்ளார்கள். அவர்களில் ஒருவரான கச்சியப்ப சிவாச்சாரியாரின் வாழ்க்கை வரலாற்றை சுருங்கக்கூறி கச்சியப்பரின் கந்தபுராணத்தை ஆதாரமாகக்கொண்டு சிவனே முருகன் என விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**கச்சியப்பர் வரலாறு**

சோழ நாடு சோறுடைத்து, பாண்டிநாடு முத்துடைத்து தொண்டைநன்னாடு சான்றோருடைத்து என்பது மரபு. இத்தொண்டை நன்னாட்டின் புகழ்மிகு நகரமாக விளங்கியது காஞ்சிபுரம் என்ற காஞ்சி மாநகரம். காஞ்சிமா நகரம் கோவில் உடைத்து என்று கூறுவர். இது முத்தித்தலங்கள் ஏழினுள் ஒன்று. அக்காஞ்சிமாநகரில் குமர கோட்டத்தில் அர்ச்சகராக பணியாற்றியவர் ஆதிசைவ மரபைச் சார்ந்த காளத்தியப்ப சிவாச்சாரியார். அவருக்கு நெடு நாட்களாக குழந்தைப்பேறு இல்லை. குமர கோட்டத்து குமரக்கடவுளை நாள் தோறும் வழிபட்டு வந்தார். பல நாட்கள் கழித்து அவருக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு கச்சியப்பர் எனப் பெயரிட்டு வளர்த்து வந்தார்.

இவர் ஐந்து வயதிலேயே கல்வி பயின்று வடமொழி, தமிழ் இரண்டிலும் புலமை பெற்றவரானார். ஏழாம் வயதில் ஆதிசைவர் முறைப்படி உபநயனம் செய்யப்பட்டு வேத, ஆகமங்களை கற்றுத் தேர்ந்தார். பின்பு தமிழ் மறையாம் தேவார திருவாசகங்களையும் கற்றுத்தேர்ந்தார். சமய தீட்கை முதல், விசேட தீட்கை, நிர்வாண தீக்கையும் ஆசாரிய அபிடேகமும் பெற்று சைவ ஆகமங்களை ஓதி உணர்ந்தார். காஞ்சி கந்த கோட்டத்து கந்தக் கடவுளை நாள் தோறும் வழிபட்டு வந்தார்.

ஒரு நாள் கந்த கோட்டத்து கந்தன் கச்சியப்பரின் கனவில் தோன்றி கந்த புராணத்து ஆறு சங்கிதைகளுள் ஒன்றான சங்கர சங்கிதையின் முதற் காண்டமான சிவ ரகசிய காண்டத்தை



தமிழில் கந்தபுராணம் எனப்பாடுக என "திகட சக்கர" என அடியெடுத்துக் கொடுத்து மறைந்தார். கச்சியப்பரும் கனவிலிருந்து தெளிந்து மகிழ்ச்சி பொங்க முருகனை வணங்கி கந்தபுராணம் பாடத் தொடங்கினார். சிவ ரகசிய காண்டத்தில் உற்பத்தி காண்டம் அசுர காண்டம், மகேந்தர காண்டம், யுத்த காண்டம், தேவ காண்டம், தட்ச காண்டம், உபதேச காண்டம், ஏழு காண்டங்கள் உள்ளன. அதில் முதல் ஆறு காண்டங்களை கச்சியப்பர் பாட ஏழாவது காண்டமாகிய உபதேச காண்டத்தை குகநேரியப்ப நாவலர் தமிழில் இயற்றினார்.

கச்சியப்பர் நாள் தோறும் 100 செய்யுட்கள் பாடி அர்த்தஜாம பூஜை முடிந்து இறைவன் திருவடியில் வைத்துவிட்டு இல்லம் திரும்புவார். மறுநாள் ஆலயம் சென்று இறைவனைத் தொழுது அவனது திருவடியில் வைத்த ஏடுகளை எடுத்துப் பார்ப்பார். அதில் சில இடங்கள் திருத்தப்பட்டிருந்தைக் கண்டு கச்சியப்பர் ஆனந்தக் கண்ணீர் சிந்துவார். இவ்வாறு 10345 செய்யுட்களும் எழுதி முடிக்கப்பெற்று நூல் அரங்கேற்றத்திற்கு ஒரு நன்னாள் தேர்ந்தெடுக்கப்பட்டது.

**நூல் அரங்கேற்றம்**

அரங்கேற்ற நன்னாளும் வந்தது. காஞ்சிமா நகரம் முழுவதும் அலங்கரிக்கப்பட்டது. கச்சியப்பர் கந்தகோட்டத்து கந்தனை வணங்கி இறைவன் சந்நிதியில் அமர்ந்து தன் முதல் செய்யுளின் முதல் அடியாகிய "திகடசக்கர செம்முகம் ஐந்துளான்" என்ற வரியை படித்து அதற்கு பொருள் சொல்லத் தொடங்கினார். அந்த வரியை திகழ் தசக்கரம் செம்முகம் ஐந்துளான் என்று பதம்பிரித்து பத்துக் கரங்களும், செம்மையான ஐந்து திருமுகங்களும் உள்ள சிவபெருமான் எனப்பொருள் சொன்னார், அப்போது அங்கு அவையில் இருந்த புலவர்களில் ஒருவர் எழுந்து திகழ் தசம் என்ற சொல் திகடசம் என்று புணர்வதற்கு பழமையான தொல்காப்பியம் போன்ற நூல்கள் எதிலும் விதி கூறப்படவில்லை. எனவே இது இலக்கணப் பிழை என வாதாடினார். கச்சியப்பர் இது என் வாக்கு அல்ல முருகன் எடுத்துக் கொடுத்த முதலடி எனக் கூற அப்புலவர் முருகன் எடுத்துக் கொடுத்த முதலடியாயின் அவரே வந்து அதற்கு விளக்கம் கூறட்டும் என்று சொல்லி நூல் அரங்கேற விடாது தடுத்தார். அரங்கேற்றம் மறுநாள் ஒத்திவைக்கப்பட்டு சபை கலைந்தது.

கச்சியப்பர் அன்றிரவு கந்தனை உள்ளம் உருக வேண்ட முருகன் அவர் கனவில் தோன்றி "அன்பரே சோழ நாட்டில் வீர சோழியம் என்ற ஓர் இலக்கண நூல் உள்ளது. அந்த நூலில் சந்திப்படலம் 18ம் செய்யுளில் இதற்கு விதி கூறப்பட்டுள்ளது. நாளை சோழ நாட்டு புலவன் ஒருவன் அந்தநூலைக் கொண்டுவந்து சபையில் விளக்குவான்" எனக் கூறி மறைந்தார். மறுநாள் கந்தனே புலவராகத் தோன்றி சபையில் தன் கையிலிருந்து வீர சோழியம்" என்ற நூலைக்காட்டி அந்த வார்த்தை புணர்வதற்கு உரிய விதியைக் கூறி மறைந்தார். இது முருகனின் திருவிளையாடலே என்று உணர்ந்து அனைவரும் கச்சியப்பர் திருவடியில் வீழ்ந்து வணங்கினர். குற்றம் கண்ட புலவரும் கச்சியப்பரை வணங்கி அவருடைய பெருமைகளைப் போற்றி மன்னிப்புக் கேட்டார். தடை நீங்கியதால் நாள் தோறும் புராணம் வாசிக்கப்பட்டு கச்சியப்பரால் பதவுரை விளக்கவுரை கூறப்பட்டு ஓராண்டு காலத்தில் முற்றுப் பெற்றது.

**கந்தபுராணம்**

புராணம் என்ற சொல் பழமை என்று பொருள்படும். புராதனம் என்ற சொல் புராணம் என்று மருவியது வைரத்தை சோதிப்பவனுக்கு பூதக் கண்ணாடி இன்றியமையாதது போல் வேதத்தில் உள்ள நுண் பொருள்களை விரித்துக்காட்டுவது புராணங்களாகும்.

நன்றி கொன்றவனுக்கு உய்வில்லை என்ற தருமத்தை விரித்து உணர்த்துவது கந்தபுராணம். சூரபன்மனுக்கு 1008 அண்டங்களையும், 108 யுகங்கள் அரசு புரியும் ஆற்றலையும், வச்சிரயாக்கையையும், வேறு பல வரங்களையும் அள்ளி வழங்கிய சிவனின் திருக்குமாரரான முருகவேளையே எதிர்த்து போராடினான் சூரபன்மன். அவன் கொன்ற நன்றியே அவனைக் கொன்று விட்டது.





**"ஒன்றொரு பயன்தனை உதவினோர் மனம்**
**கன்றிட ஒருவினை கருதிச் செய்வரேல்**
**புன்றொழிலவர்க்கு முன் புரிந்த நன்றியே**
**கொன்றிடும் அல்லது கூற்றும் வேண்டுமோ?**
**- கந்த புராணம்**

சைவ சமயக் கோட்பாட்டின் படி ஏக நாயகனான சிவனே ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலை நடத்தும் போதும் முப்பெயர் பெறுகிறார்.

இதனை அப்பர் பெருந்தகை,
ஒருருவே மூவுருவும் ஆன நாளோ" எனவும்

நம்மாழ்வார்.

**ஒளிமணி வண்ணன் என்கோ; ஒருவன்**
**என்றேத்தநின்ற நளிர்மதிச் சடையன் என்கோ; நான்**
**முக்கடவுள் என்கோ"** எனவும்

மாணிக்கவாசகர்:
**"மூவர் கோணாய் நின்ற முதல்வன்: மூர்த்தி"**
- திருவாசகம், திருச்சதகம்-30

சேரமான் பெருமாள் நாயனார்;

**"அரியாகிக் காப்பான்; அயனாய்ப் படைப்பான்;**
**அரனாயழிப்பவனுந்தானே" எனவும் கூறுகிறார்**

கச்சியப்பரின் கந்த புராணத்தில் சிவனே முருகன் எனப் பல காண்டங்களில் பல பாடல்களில் கூறப்பட்டுள்ளது.

**சிவனே முருகன்**

உற்பத்திக்காண்டம்:
முருகனின் தோற்றத்தைக் கூற முற்படும் கச்சியப்பர்
**"வந்திக்கு மல ரோனாதி வானவர் உரைத்தல் கேளாப்**
**புந்திக்குள் இடர் செய்யற்க புதல்வனைத்தருதும் என்னா**
**அந்திக்கு நிகர் மெய்யண்ணல் அருள்புரிந்தறிஞராயோர்**
**சிந்திக்குந் தனது தொல்லைத் திருமுகம் ஆறும் கொண்டான்"**

எனக்கூறுகிறார். சிவனுக்கு சத்யோஜாதம், வாமதேவம், தத்புருஷம், ஈசானம், அகோரம், அதோமுகம் என ஆறு முகங்கள் உள்ளன. வானவர்களின் குறைகளைக் கேட்ட சிவனின் ஆறு திருமுகங்களின் நெற்றிக்கண்களிலிருந்து தோன்றிய ஆறு அருட்பெருஞ்சோதி பொறிகள் சரவணப்பொய்கையை அடைந்து ஆறு திருமுகங்களும், 12 திருக்கரங்களும் கொண்டு உலகம் உய்ய முருகக் கடவுளாகத் தோற்றமளித்தது.

இதனைக் கச்சியப்பர்

**"அருவமும் உருவும் ஆகி அநாதியாய் பலவாய் ஒன்றாய்பின்**
**பிரம்மாய் நின்றசோதிப் பிழம்பதோர் மேனி ஆகக்**
**கருணை கூர் முகங்கள் ஆறும் கரங்கள் பண்ணிரண்டும் கொண்டே**
**ஒரு திருமுருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய"**



என்று கூறுகிறார். அருவமாக, உருவமாக, அநாதியாய், பலவாய், ஒன்றாய் பிரம்மமாய் நின்ற சோதிப் பிழம்பதோர், மேனிஆக ஆறுமுகங்களுடன், பன்னிரு கரங்கள் கொண்ட திருமுருகன் உதித்ததாக கூறுகிறார்.

"மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினாலளக்கொணாமல்
நிறைவுடன் யாண்டுமாகி நின்றிடும் நிமலமூர்த்தி
அறுமுக வுருவாய்த்தோன்றி அருளொடு சரவணத்தின்
வெறிகமழ் கமலப்போதில் வீற்றிருந்தருளினானே"

மறைகளினால், வாக்கால், மனத்தினால் அளக்கமுடியாத நிறைவுடன் எப்போதும் நின்றிடும் நிமல மூர்த்தியே அறுமுக உருவமாய் தோன்றியதாக கூறுகிறார்.

முருகனின் திருவிளையாடல் தங்களின் திருவிளையாடலுக்கு ஒப்பாக உள்ளதே என்று உமையவள் கேட்க சிவன் கூறுகிறார்.

"ஆதலின் நமது சக்தி அறுமுகன் அவனும் யாமும்
பேதகம் அன்றால்; நம்போற் பிரிவிலன்யாண்டும் நின்றான்
ஏதமில் குழவிபோல்வான்; யாவையும் உணர்ந்தான்;சீரும்
போதமும் அழிவில் வீடும் போற்றினர்க்கு அருளவல்லான்"

கந்தக்கடவுள் நமது சக்தியே. அவனுக்கு நமக்கும் வேற்றுமை இல்லை. அவனும் நம்மைபோல் பிரிவிலன் எப்போதும் நீக்கமற நிறைந்திருப்பான் என்கிறார்.

**மகேந்திர படலம்:** (வீரவாகு சயந்தனை தேற்றும் மடலம்)

"தன்னிகர் இன்றி மேலாய்த் தற்பர வொளியாய் யாரும்
உன்னரும் பரமாய் நின்ற ஒருவனே முகங்கள் ஆறும்
பன்னிரு புயமுங் கொண்டு பாலகன் போன்று கந்தன்
என்னுமோர் பெயரும் எய்தி யாவரும் காண வந்தான்"

கந்தவேள் வீரவாகுதேவரை சூரபன்மனிடம் தூது வராக அனுப்புகிறார். சூரபன்மனின் மகேந்திர புரியை அடைந்த வீரபாகு தேவர் சிறையில் அடைப்பட்டிருக்கும் இந்திரனின் மகன் சயந்தனை தேற்றுவதாக வரும் படலத்தில் வீரவாகு தேவர் சொல்வதாக தனக்கு நிகரில்லாத எல்லாவற்றிற்கும் மேலாக தற்பரவொளியாய் நின்ற பரமனே ஆறுமுகங்களும், பண்ணிரு கைகளும் கொண்ட பாலகன் போன்று கந்தன் என்ற பெயர்கொண்டு தோன்றியதாகக் கூறுகிறார்.

**அவை புகு படலம்:**

சயந்தனை தேற்றியபின் சூரபன்மனின் அறையில் புகுந்த வீரவாகு தேவர் சூரபன்மனிடம் கூறுவதாக

"முன்னவர்க்கு முன்னாகுவோர் தமக்கு முற்பட்டுத்
தன்னை நேரிலாத ஈசனாம் தனிப்பெயர் தாங்கி
இன்னுயிர்க் குயிராய் அருவுருவாய் எவர்க்கும்
அன்னை தாதையாய் இருந்திடும் பரமனே அவன்காண்.

முன்னைப் பழம்பொருளாக, தனக்குவமை இல்லா தலைவனாக ஈசன் என்ற தனிப்பெயர் தாங்கி, உயிருக்கு உயிராக, எல்லோருக்கும் அன்னையாகவும், தந்தையாகவும் விளங்கும் பரமனே முருகனாக வந்து தோன்றியுள்ளான்.

"ஈசனே அவன் ஆடலால் மதலை ஆயினன்காண்
ஆசிலா அவன் அறுமுகத்துண்மையால் அறிநீ





பேசில் ஆங்கவன் பரனொடு பேதகன் அல்லன்
தேசுலாவகன் மணியிடைக் கதிர் வருதிறம்போல்"

சூரபன்மனே, சங்கரனே சண்முகமாக ஒரு திருவிளையாடல் காரணமாக குழந்தையாக வந்து உதித்துள்ளான். இதை சிவனுக்கு உள்ள ஆறுமுகம் போல முருகனுக்கும் உள்ள அறுமுக உண்மையால் நீ அறியலாம். அவனுக்கும் சிவனுக்கும் வேற்றுமையில்லை. மாணிக்க மணியிலிருந்து ஒளி வீசுகிறது. அந்த மணிவேறு ஒளிவேறு அன்று. அதுபோன்று சிவன் என்ற மணியிடமிருந்து தோன்றிய ஒளி முருகன்.

"பூதம் ஐந்தினும் கீழ்நிலைத்தாகிய புவியுள்
ஓதுகின்ற பல்லண்டத்தின் ஓராயிரத்தெட்டும்
கோதில் ஆக்கமும் படைகளும் உனக்கு முன் கொடுத்த
ஆதியீசனே அவன் எனில் மாற்று வதரிதோ

உனக்கு ஆயிரத்தெட்டு அண்டங்களையும், பெருஞ்செல்வமும், படைகளும் வரமாக கொடுத்த ஆதீசனே முருகனாக வந்து உதித்துள்ளான் என்று கூறுகிறார்.

"அளப்பருங்குணத் தாதியாம் எம்பிரான் அமரர்
தளைப்படுஞ்சிறை மாற்றவும் சதுர்முகன் முதலோர்
கொளப்படுந்துயர் அகற்றவும் கொடியரையறுத்து
வளப்படும் பரிசுலகெலாம் போற்றவும் வந்தான்"

தேவர்களுடைய சிறையை விடுவிக்கவும், பிரம்மா முதலியோரின் துயரை நீக்கவும், தீயவர்களை அழித்து உலகத்தை காக்கவும் அளக்க முடியாத குணங்களை உடைய எம்பெருமானே ஈசனாகத்தோன்றினார்.

**சிங்கமுகன் வதைப்படலம்:**

சூரபன்மனுக்கு சிங்கமுகன் போருக்கு செல்லும் முன் கூறுவதாக

"மூலமும் முடிவு மில்லாத மூர்த்தியைப்
பாலனென் றெண்ணினை படுவதோர்ந்திலை
ஆலமதானே ஐய என்மொழி
மேலையின் விதியையார் வெல்லும் நீரினார்"

ஆதியும் அந்தமும் இல்லாத முழுமுதற்மூர்த்தியை நீ பாலன் என்று எண்ணி போரிடுகிறாய். முன் வினையை யாரால் வெல்ல முடியும் என்று கூறுகிறார்.

**யுத்த காண்டம் சூரபன்மன் வதைப்படலம்.**

"கோலமா மஞ்ஞை தன்னில் குலவிய குமரன் தன்னைப்
பாலன் என்றிருந்தேன் அந்நாள் பரிசிவை உணர்ந்திலேனால்
மாலயன் தனக்கும் ஏனை வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகாரணமாய் நின்ற மூர்த்தி இம்மூர்த்தி அன்றோ"

தேவர்களுக்கும், மால் பிரம்மா முதலானோர்க்கும் மூலகாரணமாய் உள்ள முழுமுதற்பொருளை நான் பாலன் என்று நினைத்து இகழ்ந்தேனே என்று சூரபன்மன் வருந்துகிறான்.

"ஒற்றென முன்னம் வந்தோன்
ஒரு தனிவேலோன் தன்னைப்
பற்றுகல்இன்றி நின்ற
பராபரமுதல்வன் என்றே



சொற்றனன் சொற்ற எல்லாம்
துணிபெனக் கொண்டிலேனால்
இற்றை இப்பொழுதில் ஈசன்
இவன் எனுந்துன்மை கண்டேன்"

முன்பு தூதுவனாக வந்த வீரவாகுதேவர் ஈசனே முருகன் என்று சொன்ன சொல்லை எல்லாம் நான் நம்ப மறுத்தேனே. இப்போது ஈசனே இவன் என்னும் தன்மையை உணர்ந்தேன் எனக் கூறுகிறார். மேற்கூரிய பல கந்தபுராண பாடல்களால் சிவனே முருகன் என்பது தெள்ளத்தெளிவாக கூறப்பட்டுள்ளது.

***கச்சியப்பரின் கவிதைத் திறன்:***

காமதகனப் படலம்:

"என்னானும் ஓர் உதவியாதொருவன் யார்க் கெனினும்
தன்னால் முடிவதெனில் தானே முடித்தல் தலை
சொன்னால் முடித்தல் இடையாகுஞ் சொல்லுகினும்
பன்னாள் மறுத்துப் புரிதல் கடைப்பான்மையதே."

நாம் ஒருவருக்கு உதவிசெய்ய விரும்பினால் கேட்கும் முன்னே செய்தல் உத்தமம். கேட்ட பின்பு செய்தல் மத்திமம். கேட்ட பின்பும் பலநாள் மறுத்து பின்பு செய்வது கடை நிலை அதமம். பிரம்மன் மன்மதனிடம் சிவனை மயக்குறச் செய்யுமாறு வேண்ட மன்மதன் மறுக்க பிரம்மன் கூறுவதாக உதவி எப்படிச் செய்ய வேண்டும் என்பதை கச்சியப்பர் நயம் பட கூறுகிறார்.

**மகேந்திர காண்டம் (உவமை நயம்)**

வீரவாகு தேவர் சூரபன்மன் தேவர்களை சிறைபிடித்து வைத்துள்ளதை

"மெய்ச்சோதி தங்கு சிறுகொள்ளி தன்னை
விரகின்மை கொண்ட குருகார்
கச்சோதம் என்று கருதிக் குடம்பை
தனில் உய்த்து மாண்ட கதைபோல்"

என்று தூக்கனாங்குருவி தன் கூட்டினுள் இரவில் வெளிச்சம் தெரிவதற்காக மின்மினி பூச்சி என்று நினைத்து கொள்ளிக்கட்டையை வைத்ததைப்போல் சூரபன்மன் தேவர்களை சிறைகொண்டது தமக்கு இதனால் ஒரு அழிவு வரும் என்று உணராததால் தான் என்று திறம்பட கூறுகிறார்.

***சிங்கமுகன்வதைப் படலம்*** (சகோதர பாசம்)
(உடன் பிறப்பின் சிறப்பு)

"பொன்னை நிலந்தன்னைப் புதல்வர்களை மங்கையரைப்
பின்னேயுள பொருளையெல்லாம் பெறலாகும்
என்னையுடை இளங்கோவே இப்பிறப்பில்
உன்னை இனிப் பெறுவதுண்டோ உரையாயே"

பொன்னை, பூமியை, மக்களை, மனைவியை இழந்து விட்டால் மீண்டும் பெறலாம். உன்னை இழந்த நான் மீண்டும் ஒரு சகோதரனைப் பெற முடியுமா என சிங்கமுகன் வதைக்கப்பட்ட பின் சூரபன்மன் புலம்புவதாக மிக அழகாக கூறியுள்ளார்.

*முடிவுரை:* வில்லின் சிறப்பை கம்பர் பாடினார். வேலின் சிறப்பை கச்சியப்பர் பாடினார். இரண்டு காவியங்களும் தமிழ்த்தாயின் இரு கண்களாக திகழ்கின்றன. சூரனுக்கு சிவன் கொடுத்த வரம், சிவனின் சக்தியினால் அன்றி அவனை யாரும் வெல்ல முடியாது என்பது. அதனால் தான் சிவனே முருகனாகத் தோன்றி சூரபன்மனை வென்றார் என்பது தெள்ளத் தெளிவாக கூறப்பட்டுள்ளது. எனவே சிவனும் முருகனும் வேறல்லர்.





உ
சிவமயம்

# நக்கீரர்

**(முனைவர் தேவபூபதி நடராஜா)**

நக்கீரர் என்னும் பெயருடன் பலர் காலம் தோறும் தோன்றித் தமிழ்த்தாய்க்கு அரிய சேவைகள் புரிந்துள்ளனர். அவர்களில் நால்வர் குறிப்பிடப்படும் சிறப்பு வாய்ந்தவர்கள் எனலாம். அந்த நால்வர்:-

i) இன்று நமக்குக் கிடைத்துள்ள இலக்கியங்களில் மிகப் பழமை வாய்ந்தவை எனப் போற்றப்படும் சங்க இலக்கியங்கள் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியன. அவற்றுள் உள்ள பாடல்கள் சிலவற்றைப் பாடியவர் "மதுரைக் கணக்காயனார் மகன் நக்கீரனார்" என்றும் இவரது காலம் முதலாம் நூற்றாண்டு என்றும் அறிஞர்கள் கூறுவர். இவர் பாடியவை

| | | |
|---|---|---|
| எட்டுத்தொகையில்- | அகநானூறு | 16 பாடல்கள் |
| | புறநானூறு | 3 பாடல்கள் |
| | நற்றிணை | 7 பாடல்கள் |
| | குறுந்தொகை | 8 பாடல்கள் |

பத்துப்பாட்டில் -
1) திருமுருகாற்றுப்படை
2) நெடுநல்வாடை

மேலும் திருவள்ளுவ மாலையில் ஒரு வெண்பாவும் வேறு சில வெண்பாக்களும் கிடைத்துள்ளன.[1]

ii) இறையனார் அகப்பொருள் என்னும் நூலின் "களவியல்" பகுதிக்கு உரை எழுதியவர். மேற் குறிக்கப்பட்டுள்ள மதுரைக் கணக்காயனார் மகனே இவ்வுரையையும் எழுதியதாகச் சிலர் கூறினாலும் இதன் காலம் கி.பி. 640 – 670 என்பதால் இந்த நக்கீரர் வேறு என்றே கொள்ள இடமுண்டு. எனினும் இவர் தம் மகனாகிய கீரவி கொற்றனார் என்பவருக்கு அளித்த விளக்கம் காலம் காலமாகப் பயன்படுத்தப்பட்டுப் பின் எழுதப்பட்டது என்ற கருத்தும் வழக்கில் உள்ளது.[2]

iii) இலக்கண நூலாசிரியராகிய இவர் நக்கீரர் அடிநூல் போன்ற நூல்களை இயற்றியவர்.

iv) பதினொராம் திருமுறையில் நக்கீரதேவநாயனார் இயற்றியதாக உள்ள பத்துப் பிரபந்தங்களுள் திருமுருகாற்றுப்படை காலத்தால் முந்தியது. இது பத்துப் பாட்டின் முதற் பாடலாகும். மேலும் இதன் மொழியும் நடையும் சங்க காலப் பாடல்களை ஒத்தது. எனவே இவர் இயற்றியவையாகக் கொள்ளப் படுபவை

1. கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி
2. திரு ஈங்கோய்மலை எழுபது
3. திருவலஞ்சுழி மும்மணிக் கோவை
4. திரு எழு கூற்றிருக்கை



5. பெருந்தேவபாணி
6. கோபப் பிரசாதம்
7. கார் எட்டு
8. போற்றித் திருக்கலி வெண்பா
9. திருக் கண்ணப்பதேவர் திருமறம்

என்பன.

***சங்க காலத்து நக்கீரர்***

இவரைப் பற்றிய குறிப்புகள் அதிகம் கிடைக்கப் பெறவில்லை. எனினும் சிவபிரானுக்கும் இவருக்கும் இடையே ஏற்பட்ட வாக்குவாதம் பற்றியும் தமிழைப் பழித்த குயக்கொண்டான் என்பவன் இறக்கவும் பின் உயிர் பெறவும் பாடியது பற்றியும் சில பாடல்கள் மூலம் தெரிய வருகிறது.

கடைச்சங்கம் நிறுவிய பாண்டிய மன்னன் பெண்களின் கூந்தலிலுள்ள மணம் இயற்கையானதா செயற்கையானதா என அறிய விரும்பித் தன் சபையில் ஒரு பொற்கிழியைத் (முடிச்சு) தொங்க விட்டுச் சரியான பதில் கொடுப்பவருக்கு அக்கிழி பரிசாக வழங்கப்படும் எனவும் அறிவித்தான். தருமி எனும் ஏழைப் பிராமணன் அதனைப் பெற விரும்பித் திருவாலவாயில் எழுந்தருளி இருக்கும் சொக்கநாதரிடமே வேண்டிக்

கொங்கு தேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ.
பயிலியது கெழீய நட்பின், மயில் இயல்
செறி எயிற்று அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீ அறியும் பூவே.[3]

(பயிலியது கெழீய = பழக்கம் மிகுந்த)

என்னும் பாடலைப் பெற்றுச் சென்று அரசவையில் பாடிப் பொற்கிழியைப் பெற்றான். இதையறிந்த நக்கீரர் அஞ்சாமல் “பெண்கள் கூந்தலுக்கு இயற்கையான மணம் இல்லை. மலர்களையும் பிற நறுமணப் பொருள்களையும் பயன்படுத்துவதால் ஏற்பட்ட செயற்கை மணமே உள்ளது” என வாதாடினார். இறைவனே அச்சபைக்கு எழுந்தருளி மறுத்தான். புலவர் சிறிதும் பின்வாங்காமல் தாம் கூறுவதே சரி என உறுதியாகக் கூறிய பொழுது தனது நெற்றிக்கண்ணைத் திறந்தான் இறைவன். அப்பொழுதும் “நெற்றிக் கண்ணைத் திறந்தாலும் குற்றம் குற்றமே” எனத் துணிந்து வாதாடியதால் இறைவன் புலவரது குலத்தவர் சங்கு அறுக்கும் தொழில் செய்வதைச் சுட்டிக்காட்டினான். புலவரோ “சங்கறுப்பது எங்கள் குலம் சங்கரனார்க்கு ஏது குலம்?” என அங்கு வந்தது இறைவனேயானாலும் அஞ்சாமல் வினவினார்.

இது அவரது சொல்வளமையைக் குறிப்பது எனலாம். ஏனெனில் இக்கேள்வி இறைவன் குலமற்ற இழிந்தவன் என்பதை மட்டுமன்றி அதற்கெல்லாம் அப்பாற் பட்டவன், மேலானவன் எனவும் பொருள்படும். எனினும் இதனால் பொற்றாமரைக் குளத்தில் விழுந்து பின் இறைவனைப் போற்றிப்பாடிக் கரையேறினார். இந்நிகழ்வால் நக்கீரருடைய அளவில்லாத் தமிழ்ப் பற்றும் எதற்கும் அஞ்சாத நேர்மையும் புலப்படும். மேலும் “கீத மொழி கூட்டி வேத மொழி சூட்டு கீரர்” எனப் பிற்காலப் புலவராகிய அருணகிரிநாதர் இவரைப் போற்றியுள்ளார்.[4]

இவருடைய திருவுருவம் திருப்பரங்குன்றத்திலே ஸ்ரீ முத்துக்குமார சுவாமியின் பக்கத்திலே எழுந்தருளி இருக்கின்றது. திருவிழாக் காலங்களிலே அதற்குப் புறப்பாடு உள்ளது. மதுரை மேலைமாசி வீதியின் மேற்குப் பகுதியில் இவருக்குப் பெரியதாக ஒரு கோயிலும் உள்ளது என்றும் அது “சங்கத்தார் கோயில்” என வழங்குவதாகவும் கூறப்படுகிறது. பண்டைக் காலத்தில் ஈங்கோய் மலை எனும் சிவத்தலத்தில் ஓர் அரசன் நக்கீரர் உருவத்தைப் பிரதிட்டை செய்து





அதற்கான நிவந்தங்கள் (செலவுத் தொகை) அமைத்தான் எனவும் ஒரு சாசனம் (கல்வெட்டு அல்லது பத்திரம்) தெரிவிக்கின்றது.[5] இப்புலவரே பிரதிட்டை செய்ததாகக் கருதப்படும் சிவலிங்கப் பெருமான் திருக்காளத்தியில் நக்கீர நாதர் அல்லது நக்கீர லிங்கம் என்னும் நாமத்துடன் எழுந்தருளியுள்ளார்.

இவர் பாடிய பாடல்களுள் முருகனைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுவதாலும் திருமுருகாற்றுப்படை பாடியுள்ளதாலும் இவர் முருகன் பால் பெரும் அன்பு கொண்டவர் என்பது தெளிவு.

**சங்க இலக்கியப் பாடல்கள்**

**புறநானூறு**

பாண்டியன் நன்மாறனைப் புகழ்ந்து பாடும் போது சிவபிரான், பலதேவன், திருமால், முருகன் ஆகியவர்களின் பண்புகளை அவ்வரசன் ஒருங்கே பெற்றிருப்பதாகப் பாடுகின்றார். அதில்

. . . . .
மணிமயில் உயரிய மாறா வென்றிப்
பிணிமுக ஊர்தி ஒண் செய்யோன்
. . முருகொத்தீயே முன்னியது முடித்தலின் [6]

(அழகிய மயிலைக் கொடியாகவும் ஊர்தியாகவும் கொண்டவனும் ஒளிமிக்க சிவந்த நிறத்தை உடையவனாகிய முருகன். . . போல் நினைத்ததை ஒப்பேற்றுபவன்).

என அவ்வரசனைப் போற்றுகின்றார்.

**அகநானூறு**

நெடுந்தொகை எனவும் பெயர்கொண்ட இத்தொகுப்பில் மாலை நேரத்தில் வானம் சிவந்து இருக்க, அங்கு வெள்ளை நிறக் கொக்குகள் நிரையாகப் பறந்து செல்வதில் இவர் முருகன், தனது பரந்த, சிவப்பு மார்பில் வெள்ளை நிற மாலை அணிந்திருக்கும் அழகைக் காண்கிறார்.

நெடுவேள் மார்பின் ஆரம் போலச்
செவ்வாய் வானம் தீண்டி மீன் அருந்தும்
பைங்காற் கொக்கின் நிரை[7]

வேறொரு பாடலில்

மழைகால் நீங்கிய மாக விசும்பில்
குறுமுயல் மறுநிறங் கிளர மதிநிறைந்து
அறுமீன் நேரும் அகலிருள் நடுநாள்
மறுகு விளக்குறுத்து மாலை தூக்கிப்
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய விழவு [8]

(மழை பொழிவது முடிந்த தெளிவான வானில், முயல் வடிவான தனது மறுவின் நிறம் தெளிவாகத் தெரியும் பூரண சுந்திரன் ஆறு நட்சத்திரங்களின் கூட்டமாகிய கார்த்திகையைச் சேரும் இருள் நீங்கிய நல்ல நாளின் நடுஇரவில், வீதிகள் தோறும் விளக்குகளை வரிசையாக ஏற்றி, மாலைகளைத் தொங்க விட்டுப் பழைமையான ஊரில் பலரும் ஒன்று சேர விழாவைக் கொண்டாட) எனக் கார்த்திகை தீபத் திருவிழாவைக் குறிக்கின்றார். இங்கு முருகன் கூறப்படாவிட்டாலும், அறுமீன் (ஆறு நட்சத்திரங்கள்) எனும் சொல் அவனுக்குப் பாலூட்டியதாகப் போற்றப்படும் ஆறு நட்சத்திரங்களின் கூட்டமாகிய கார்த்திகை நட்சத்திரத்தைக் குறிக்கின்றது. முருகனுக்கும் இந்த நட்சத்திரத்திற்கும் உள்ள தொடர்பால் அவனுக்குக் கார்த்திகேயன் என்ற பெயரும் பண்டு தொட்டு



வழக்கில் உள்ளது. இவ்விழா எல்லாக் கோயில்களிலும் இந்துக்கள் வீடுகளிலும் கொண்டாடப் பட்டாலும், இது முருகனுக்குச் சிறப்பானது என்பது தெளிவு.

இவர் அரசர்களைப் பற்றியும் குறுநில மன்னர்கள் வள்ளல்களையும் அவர்களது வீரம், கொடை போன்ற பண்புகளையும் புகழ்ந்து பாடினாலும் மனித வாழ்வின் அடிப்படைத் தேவைகள் உணவும் உடையும். மற்றவையும் பெரும்பாலும் யாவருக்கும் ஒத்தே இருக்கும் என்கின்றார்.

'தெண்கடல் விளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா வொருவற்கும்
உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே
பிறவு மெல்லா மோரொக் கும்மே
செல்வத்துப் பயனே யீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே' [9]

"கடலால் சூழப்பட்ட உலகம் முழுவதையும் தான் ஒருவனேயாக ஆளும் அரசனுக்கும், நடு யாமத்திலும் உறங்காது வேட்டையாடும் ஒருவனுக்கும் அடிப்படைத் தேவை உண்பதற்கு நாழி (ஒரு படி அரிசி) உடுப்பதற்கு இரண்டே (துண்டுகள்). மற்றவை எல்லாம் கூட ஒத்தே இருக்கும். செல்வத்தின் பயன் ஈதலே. நாம் துய்ப்போம் என்று அறம் செய்யாமல் இருந்தால் பல நன்மைகள் (அறம் பொருள், இன்பம் வீடு ஆகிய பலவும்) தவறிப் போகும்"

எனவே தாமே வைத்து அனுபவிக்க வேண்டும் என எண்ணாமல் இல்லாதவர்களுக்கு உதவுவதே நமது செல்வத்தின் பயன் என அறிவுறுத்துகின்றார்.

**திருமுருகாற்றுப்படை**

ஆற்றுப்படை என்பது பண்டைத் தமிழ் இலக்கியங்களில் ஒருவகை. இதில் வறுமையுற்ற ஒருவர் ஒரு வள்ளலிடம் சென்று பல பொருட்களைக் கொடையாகப் பெற்றுத் திரும்புகையில் தமது முந்திய நிலையில் இருக்கும் ஒருவரைப் பார்த்து அந்த வள்ளலைப் பற்றியும் அவரிடம் போவதற்கான வழியையும் அவரது பண்பையும் கொடைத் திறனையும் எடுத்துக் கூறி, இவரும் அங்குச் சென்றால் பெறக்கூடிய சிறப்புக்களையும் எடுத்துக் கூறுவதாகும். இதில் அந்த வள்ளல் இருக்கும் இடம் பற்றிய விளக்கமும் இடம் பெறும்.

பொதுவாக ஆற்றுப்படை இலக்கியங்கள் யாருக்கு வழி கூறப்படுகிறதோ அவர் பெயரில் அமையும். உதாரணமாக ஒரு கூத்தனுக்குக் கூறினால் அது கூத்தராற்றுப்படை எனப்படும். ஆடல் மகளாகிய விறலிக்குக் கூறினால் அது விறலியாற்றுப்படை யாகும். இப்பாடலும் புலவராற்றுப்படை எனவும் வழங்கி வந்துள்ளது. ஆனால் திருமுருகாற்றுப்படை என்னும் பெயர் முருகப்பிரானின் திருவருளைப் பெற்ற ஒருவன் அதைத் தானும் பெற விரும்பும் ஒருவருக்கு வழி சொல்லிச் செவ்வேளிடம் அனுப்புவதைக் குறிக்கும்.

இதனை நக்கீரர் பாடுவதற்கு முருகனே அருளினான் என்பதனை

வளிவாய்மை சொற்ப்ரபந்தமுள கீரனுக் குகந்து
மலர்வாயி லக்கணங்கள் இயல்போதி
அடிமோனை சொற்கிணங்க "உலகமுவப்ப" என்று(ன்)
அருளால் அளிக்கு கந்தப் பெரியோனே [10]

என அருணகிரி நாதர் தெளிவுபடுத்துகிறார்.

இப்பாடலில் நக்கீரர் பெருமான் i) திருப்பரங்குன்றம் ii) திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்) iii) திருவாவினன்குடி (பழனி) iv) திருவேரகம் (சுவாமிமலை) v) குன்று தொறாடல் vi) பழமுதிர் சோலை ஆகிய முருகன் உறையும் பதிகளைத் தம்மூராம் மதுரை அருகே உள்ள பதியில் ஆரம்பித்துத் தம்மூரருகில் உள்ள பதியோடு முடித்துள்ளார். இதில் கூறப்பட்டுள்ள குன்று தொறாடல் என்பது சங்க இலக்கியங்களில் குறிஞ்சி நிலத் தெய்வமாகப் போற்றப்படும் முருகன், குறிப்பிட்ட இடங்களில் மட்டுமன்றி எல்லா மலைப் பகுதிகளிலும் விரும்பி உறைவான் என்பதையும் கடலோரத் திருச்செந்தூரிலும் உறைவதால் அவன் எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளே என்பதையும் விளக்குகிறது. இவ்வாற்றுப்படையில் வருகின்ற ஆறுபகுதிகளே அதாவது ஆற்றுப்படை வீடுகளே முருகனது "ஆறுபடை வீடுகள்" என்ற சிந்தனையின் அடிப்படை எனக் கொள்ளலாம்.

**பாடலின் ஆறு பகுதிகளிலும் கூறப்படும் செய்திகள்**

1. முதற் பகுதியில் முருகவேளின் திரு உருவச் சிறப்பு, அவன் அணிந்திருக்கும் மாலைகள், சூரர மகளிரின் செயல்கள், முருகன் சூரனைச் சங்கரித்த திறன், மதுரையின் பெருமை, திருப்பரங்குன்றத்தின் இயற்கை வளம் ஆகியன கூறப்பட்டுள்ளன.

2. இரண்டாவது பகுதியில் முருகப்பிரான் தனது அடியவர்களுக்கு அருள் புரிய எழுந்தருளும் யானையினது இயல்பு, அவனுடைய ஆறு திருமுகங்கள், பன்னிரு திருக்கரங்கள் ஆகியவற்றின் செயல்களும் அவன் திருச்சீரலைவாய் எனப்படும் திருச்செந்தூரில் எழுந்தருளும் சிறப்பும் சொல்லப்பட்டுள்ளன.

3. மூன்றாம் பகுதியில் முருகனை வழிபடும் முனிவர்கள், பார்ப்பனர் போன்றோர் தீ வளர்த்து வழிபடும் முறைகளும், பெருமானைத் தரிசிக்க வரும் தேவர்கள், மகளிர் ஆகியோரின் இயல்புகளும், திருமால், முக்கட் செல்வனாகிய சிவபிரான், இந்திரன், போன்றோரும் அவனைக் காணச் செல்லும் சிறப்புப் பேசப்படுகிறது.

4. நான்காவது பகுதியில் அந்தணர் இயல்பும் அவர்கள் முத்தீ வளர்த்து வழிபடும் முறைமையும் வருணிக்கப்படுகிறது.

5. ஐந்தாவது பகுதியில் பண்டைய குழுப் பாடல் / ஆடலாகிய குன்றக்குரவையால் அவனைப் பொதுமக்கள், குறிப்பாக மலைப் பகுதியில் வாழ்பவர்கள், போற்றி வழிபடும் முறைமை விளக்கப்படுகிறது.

6. ஆறாவது பகுதியில் முருகனது சேவற் கொடியை நிறுவி ஊர் தோறும் அவனுக்கு பக்தர்கள் எடுக்கும் விழாவில் மட்டுமன்றி அழகிய இடங்களிலும் பக்தர்கள் அவனை வழிபட்டு அழைக்கும் இடங்களிலும் எழுந்தருளி அருள் புரிவான் என்பது எடுத்துரைக்கப்படுகிறது.[11]

**முருகனது ஆறு முகங்களின் செயல்கள்**

1. பேரிருளாலே மறைக்கப்பட்டுள்ள உலகம் ஒளி பெறுவதற்காக ஒரு முகம் பல விதமான சுடர்களைத் தோற்றுவிக்கிறது. இங்குப் பேரிருள் என்பது தன்னைக் காட்டிக் கொள்ளாமலே உயிரைப் பீடித்திருக்கும் ஆணவ மலத்தைக் குறிக்கும். இது உயிரின் அறிவு, இச்சை, செயல் ஆகியவற்றையும் மறைத்து நிற்பது.

2. அன்பர்கள் போற்றி வழிபட அவர்களுக்கு இனிமை காட்டி மகிழ்ந்து வேண்டியவற்றை முடித்துக் கொடுப்பது.

3. மந்திர மரபு வழுவாது நடத்தப்படும் வேள்விகள் / யாகங்களுக்கு இடையூறு நேராதபடி நினைப்பது.



4. மெய்நூல்களாலும் கண்டு உணர்த்தப்பட முடியாத உண்மைகளைச் சான்றோருக்கு உணர்த்தும். எனவே இம்முகம் முழுமதியைப்போல் எல்லாத்திசைகளிலும் விளக்கம் தருவது.

5. போரில் அசுரர் முதலிய தீயவரையும் தீயசக்திகளையும் கோபம் கொண்டு அழித்துப் போர்க்கள வேள்வியை நடத்துவது.

6. குறவர் குலத்துப் பெண்ணாகிய வள்ளியுடன் மகிழ்ந்திருக்கும். இது உலகில் இன்பத்தையும் இல்லறத்தையும் வளர்ப்பது. எல்லா உயிர்களும் இன்புற்றிருக்கச் செய்வது.[12] இதனையே மாணிக்கவாசகரும்

> தென்பால் உகந்தாடும் தில்லைச் சிற்றம்பலவன்
> பெண்பால் உகந்தான்; பெரும்பித்தன் காணேடி?
> பெண்பால் உகந்திலனேல் பேதாய்! இருநிலத்தோர்
> விண்பால் யோகெய்தி வீடுவர் காண் சாழலோ [13]

எனவும் சிவஞான சித்தியார் எனும் சித்தாந்த சாத்திர நூலில்

> போகியாய் இருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்.
> யோகியா யோகமுத்தி உதவுத லதுவு மோரார் [14]

எனவும் விளக்கியுள்ளனர்.

**முருகனது பன்னிரு கைகளின் செயல்கள்**

முருகப் பெருமானின் பன்னிரு கரங்களின் செயல்களையும் புலவர் இணை – இணையாக விளக்குகின்றார்.

1. ஒரு கை வீட்டுலகம் செல்லும் துறவியருக்குப் பாதுகாவலாக உயர்த்தப் பட்டுள்ளது. மற்றது இடையிலே வைக்கப்பட்டுள்ளது.
2. ஒரு கை சிவந்த நிற ஆடை உடுத்தியுள்ள தொடையில் இருக்க மற்றது அங்குசம் எனும் படைக்கலத்தைச் செலுத்தும்.
3. ஒருகை வேலாகிய அவனது படைக்கலத்தைச் செலுத்த மற்றது கேடகத்தைப் பிடித்திருக்கும்.
4. ஒரு கை முனிவர்களுக்குத் தத்துவங்களைக் கூறிச் சொல்லுக்கு அப்பாற்பட்ட உண்மைகளை மோனமுத்திரை(சின்முத்திரை)யால் உணர்த்த அதன் இணைக்கை தாழ்ந்து தொங்குகிற அவனது மாலையோடு சேர்ந்து அழகுடன் விளங்கும்.
5. ஒரு கை அணிந்துள்ள தொடி என்னும் ஆபரணம் கீழே நழுவுமாறு உயர்த்தப் பட்டுக் களவேள்வி செய்யுமாறு சைகை காட்ட அதற்கு இணையான கை இனிய ஓசை உடைய மணியை ஒலிக்கும்.
6. ஒரு கை நீல வானில் இருந்து மழை பெய்விக்க மற்றது தெய்வ மகளிருக்கு மாலை அணிவிக்கும்.[15]

இவ்வாறே பின்னர் அவதரித்த குமரகுருபர அடிகளாரும் தமது கந்தர் கலிவெண்பாவில் முருகனது பன்னிரு கைகளின் செயல்களை அழகுற விளக்கியுள்ளார். எனினும் செல்வேளின் ஆறுமுகங்கள் பன்னிருகைகள் ஆகியவற்றின் செயல்களைத் தெளிவாகக் கூறிய முதல் முருகனடியார் நக்கீரர் பெருமானே.

திருச்சிற்றம்பலம்

## அடிக்குறிப்புகள்


1. தமிழ்க் கலைக் களஞ்சியம்: தொகுதி 6.
2. புறநானூறு. உ.வே.சா பதிப்பு, 1956 பக்கம் 100 பாடினோர் வரலாறு; பொ.வே. சோமசுந்தரனார் உரை. பக்கம் 5-8.
3. குறுந்தொகை 1.
4. திருப்புகழ். 1278
5. பத்துப்பாட்டு, பொ. வே. சோமசுந்தரனார் உரை பக்கம் 8.
6. புறநானூறு. 56:7-8, 14.
7. அகநானூறு. 120: 1-3
8. மேலது. 141:5-11
9. புறநானூறு. 189.
10. திருப்புகழ். 203.
11. திருமுருகாற்றுப்படை. 90-102.
12. மேலது. 104-117.
13. திருவாசகம்: திருச்சாழல் 9.
14. சிவஞான சித்தியார் 70.
15. திருமுருகாற்றுப்படை.






# மரபணுவை உருமாற்று முருகா!

- பாதாசன்

ஐங்கரனின் தம்பியவன் சங்கரனார் புதல்வனவன்
அம்பாளுக் கிளையமகன் முருகன்
சங்குசக் கரமுரியன் தசாவதாரம் கொண்டே
சகம்காக்கும் திருமாலின் மருகன்
எங்கெங்கொ சுற்றிவந்தும் அண்ணனிடம் மாம்பழத்தை
இழந்துவிட்ட திருச்சேவற் கொடியன்
இங்குவந்து செந்தூலில் தங்கிமுந்திப் பக்தர்களின்
இதயத்தில் வீற்றிருக்கும் பிரியன்

பத்துமலைக் கடுத்தபடி கோலாலம்பூர் மாநகரப்
பக்தர்களுக் கென்றுள்ள சேயன்
கத்துகடல் சூழ்நகராம் திருச்செந்தூர்க் காவலனாய்
காலமுற்றும் காத்தருளும் தாயன்
சத்தமிகு இரண்டரைகல் நீள் ஈப்போ சாலையிலே
ஸ்ரீதண்டாயுதபாணி என்றே
சித்திபுத்தி அருளோடு கருணைமழை பொழிந்து வரும்
செந்தில்வேல் ஞானவடி வேலன்

குன்றிருக்கும் இடமெல்லாம் குமரனுள்ள இடமென்று
கொண்டாடும் பூமியிதன்மீதே
குன்றில்லாத் தரையினிலும் நின்றாடு வானென்று
கூறுவதற் குரியபடி என்றும்
மொன்றுபுகழ்தோற்ற மாநகரம் இதிலே
நன்றுமகிழ் பக்தர்களுக் கருள்வழங்க முருகனுளான்
தண்டபாணி கோவில்குடி கொண்டே

திருச்செந்தூர் என்பதுதான் 'திரு' நீக்கி மலேசியத்தில்
செந்தூல்என் றாகிவிட்ட தாமோ?
திருமுருகன் ஆலயத்தைக் கொண்டதனால் செந்தூலும்
திருச் செந்தூல் பேர்பெற்ற தாமோ?
ஒருகாலம் மலேசியத்தில் பொருளளவில் ஓங்கிநின்ற
திருச்செல்வர் 'செட்டி மக்கள்' நினைவின்
வரலாற்றுச் சின்னமென ஸ்ரீதண்டாயுதபாணி
வடிவுற்றான் என்பதுவும் மெய்யோ?

இருளோடும் மருளோடும் இருக்கின்ற இந்நாட்டு
இந்தியருக் கருளைநீ கூட்டு.
திருவோடும் ஏற்காமல் என்றென்றும் திருவோடு
செழிப்பாக வாழவழி காட்டு
மறுவுற்ற நினைவோடும் செயலோடும் சொல்லோடும்
வாழ்வதையே மாற்றிநீ காட்டு
கருவோடு திருசேரத், செம்மொழியாம் தமிழ்சேர
மரபணுவை உருமாற்று முருகா!

# குமரகுருபரர் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்

(சித்தாந்த ஆர்வலர் டாக்டர் அமிர்தவல்லி கணேசன்)

வேதமுதல் கலைகளெல்லாம் பூவொன்றால் வந்தணைய
நாதனாம் முருகன் நலங்காட்ட அப் பூமுதலாய
ஓதரிய கந்தர் கலிவெண்பா பாடிய
போதனார் கழல்பாடிப் பூவல்லி கொய்யாமோ. (குமரகுருபரர் பூவல்லி)

**வரலாறு:**

கி.பி. பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். தாமிரபரணி நதியின் வடகரையில் ஸ்ரீ வைகுண்டம் என்ற ஊரில் சண்முகசிகாமணிக் கவிராயருக்கும் சிவகாமசுந்தரி அம்மையாருக்கும் மகவாகக் குமரகுருபரர் தோன்றினார். ஐந்து வயது வரை வாய்பேசாது இருந்தார். பெற்றோர்கள் அவரைத் திருச்செந்தூர் முருகன் சந்நதியில் விட்டுத் தாமும் தவங்கிடந்தனர். முருகன் திருவருளால் பேசும் ஆற்றல் பெற்றார். திருச்செந்தூர் முருகன் மீது **கந்தர் கலிவெண்பா** பாடினார். தம் ஊரில் உள்ள கைலாசநாதர் மீது **கைலைக்கலம்பகம்** பாடினார். சிவத்தலங்களுக்குச் சென்றார். மதுரையில் தரிசித்து **மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்** பாடினார். மீனாட்சியம்மை குழந்தையாக வந்து குமரகுருபரருக்கு முத்துமாலை அணிவித்து மறைந்தாள். பின்னர் **மதுரைக்கலம்பகம்** இயற்றினார். திருவாரூரில் **திருவாரூர் நான்மணிமாலை** பாடினார்.

ஞானவுபதேசம் பெற ஆவலுற்ற போது, வாக்கு தடைபடும் இடமே ஞானாசிரியர் அமைவார் என்று இறைவன் திருவருளால் உணர்ந்தார். தருமை ஆதீனம் 4-ஆம் பட்டம் ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் குருமூர்த்தி, "ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள" என்ற பாடலுக்கு அனுபவப்பொருள் கேட்டபொழுது குமரகுருபரர் வாக்கு தடைப்பட்டது. அவரையே குருவாக ஏற்றுக்கொண்டு தனக்கு துறவுநிலை அருள வேண்டினார், குரு காசியாத்திரை செய்துவரப் பணித்தார். காசிக்குச் சென்றுவர நெடுங்காலம் ஆகும் என்று சிதம்பரவாசம் செய்துவரக் கட்டளையிட்டார்.

சிதம்பரம் செல்லும் வழியில் வைத்தீசுவரன் கோயிலில் தங்கி **ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்** பாடினார். சிதம்பரம் சென்று நடராசப் பெருமானைத் தரிசித்து **சிதம்பர மும்மணிக்கோவை** இயற்றினார். பின்னர் சைவ அன்பர்கள் கேட்டுக்கொண்டதற்கு இணங்க **சிதம்பரச் செய்யுட் கோவை** பாடினார். **நீதிநெறிவிளக்கம்** என்ற நீதிநூல் இயற்றினார்.

தருமைக்கு வந்து ஞானாசிரியரை வணங்கிக் காஷாயம் பெற்றார். குமரகுருபரமுனிவர் என அழைக்கப் பெற்றார். தன் ஞானாசிரியர் மீது **பண்டார மும்மணிக்கோவை** பாடினார். குருவிடம் விடைபெற்றுக் காசிக்குச் சென்றார்.

ஷாஜகான் மகன் தாரஷுகோ காசிப்பகுதியை ஆண்டு கொண்டிருந்தான். குமரகுருபரரின் கல்வியறிவும், தவப்பண்பும் மன்னன் உள்ளத்தைக் கவர்ந்தது. மன்னனுடன் இந்துஸ்தானி மொழியில் பேச, கலைமகளைத் துதித்து **சகலகலாவல்லி** மாலை பாடினார். அரண்மனைக்கு சிங்கத்தின் மீதமர்ந்து சென்றார். கருடன் காட்டிய இடத்தை மன்னன் வழங்க, குமாரசாமி மடம் நிறுவினார். **காசித்துண்டி விநாயகர் பதிகம், காசிக்கலம்பகம்** பாடினார். மறைக்கப்பட்டிருந்த கேதாரலிங்கத்திற்கு கேதாரக் கட்டத்தில் கோயில் அமைத்தார். புராணசாலை ஏற்படுத்தி இரண்டு மொழிகளிலும்



பிரசங்கம் செய்தார். நேப்பாள நாட்டில் முகரங்கி என்னும் இடத்தில் வாகீசமுனிவர் என்ற தம்பிரானைக் கொண்டு ஒரு திருமடம் நிறுவி அங்கிருந்து உருத்திராக்கமணிகளைப் பெற்றார்.

மதுரை மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, மதுரை மீனாட்சியம்மை குறம், தில்லைச் சிவகாமியம்மை இரட்டை மணிமாலை என்ற மூன்றையும் சேர்த்து மொத்தம் பதினாறு நூல்கள் இயற்றியுள்ளார். இதில் கைலக்கலம்பம், காசி துண்டி விநாயகர் பதிகம் கிடைக்கவில்லை. கிடைத்திருக்கும் நூல்களின் பாடல் எண்ணிக்கை 800 ஆகும்.

காசியில் வைகாசி மாதம் கிருஷ்ணபக்ஷத் திருதியையிலே இறைவனடி சேர்ந்தார். இவரது காலம் கி.பி. 1624-1688 ஆகும். இவர் பிறவிக்கவிஞர், பிறவித்துறவி, மடாதிபதி, மடம் நிறுவியவர் ஆவார். காந்தியடிகள் நீதிநெறிவிளக்க நூலின் முதலடி நீரிற்குமிழி இளமை என்பதைக் தமிழில் தம் கைப்பட எழுதி மகிழ்ந்தார். "குமரகுருபரர் ஒரு மகா கவி" என்று புரட்சிக்கவி பாரதிதாசன் போற்றுவார்.

### குமரகுருபரர் இறைவனிடம் வேண்டுதல்

1) * ஆசுமுத னாற்கவியும் அட்டாவதானமுஞ்சீர்ப்
பேசுமியல் பல்காப்பியத் தொகையும் - ஓசை
எழுத்து முதலாம் ஐந்திலக்கணமும் தோய்ந்து
பழுத்த தமிழ்ப் புலமை பாலித்து (கந்தர் கலிவெண்பா 118,119)

* நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய்தர நாற்கவியும்
பாடும் பணியில் பணித்தருள்வாய் (701)

* பண்ணும் பரதமுங் கல்வியும் தீஞ்சொற்பனுபவலும் யான்
எண்ணும் பொழுது எளிதெய்த நல்காய் (705)

* பாட்டும் பொருளும் பொருளால் பொருந்தும் பயனும் என்பால்
கூட்டும் படி நின் கடைக்கண் நல்காய் (706)
* சொல் விற்பனமும் அவதானமும் கவி சொல்லவல்ல
நல் வித்தையும் தந்து அடிமை கொள்வாய் (707) - சகலகலாவல்லி மாலை.

2) உலகியல் பொருள்களைத் துறந்த குமரகுருபரர், கவிபாடும் திறமையைவேண்டுகிறார்.
வாடும் மலர் மாலையை விட வாடாத பாமாலையே சிறந்தது.
* ஒண்மலர் சொன்மலர்க் கொவ்வாது போலும் (338)

3) பாமாலை பாடுவது சரியைத் தொண்டு என்கிறார்.
* விரிக்குஞ் சரியையில் பாமாலை சேர்ந்தது (598)

### சிவானந்த மாமுனி

தருமை ஆதீனம் 10-ஆம் பட்டம் ஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள் கேதாரநாதர் மீது பதிகம் பாடினார். அதில் குமரகுருபரரை சிவானந்த மாமுனி என்று குறிப்பிடுகிறார்.

* தேசுபெறு கமலைவரு ஞானசம்பந்தனருள்
சேர் குமரகுருபரனெனும்
சிவானந்த மாமுனிக் கடையாளம் அருளியுன்
திருக்கோயில் கட்டுவித்தாய்.

சிவானந்த மாமுனி என்பது, பரிபூரணத்துக்குப் பிறகு குரு பரம்பரையால் குமரகுருபர சுவாமிகள் பெற்ற பெரும் சிறப்புப்பட்டம் எனில் மிகையாகாது.

## பிள்ளைத்தமிழ்

தமிழில் உள்ள சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்றாறு வகைப்படும். அவற்றுள் பிள்ளைத்தமிழும் ஒன்று. தமிழ் என்ற சொல்லொடு இணைத்துப் பேசப்படுவது பிள்ளைத்தமிழ் இலக்கியம் ஒன்றேயாம். இதன் தலைப்பே தமிழுக்கு ஏற்றம் தருவதாக உள்ளது. இதனைப் பிள்ளைக்கவி என வெண்பாப் பாட்டியலும், பிள்ளைப்பாட்டு எனப் பன்னிரு பாட்டியலும் கூறுகின்றன.

பிள்ளையாய் இருந்த கண்ணனைப் பெரியாழ்வார் பாடினார். 12-ஆம் நூற்றாண்டில் ஒட்டக்கூத்தர் குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ், 15-ஆம் நூற்றாண்டில் பகழிக்கூத்தர் திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ் பாடினார். 17-ஆம் நூற்றாண்டில் குமரகுருபரர் பெண், ஆண் என இரண்டு வகைப் பிள்ளைத்தமிழும் பாடினார். இவருடைய பிள்ளைத்தமிழ் இரண்டும் இலக்கண வரம்பும், மரபு நிலையும் கேடாதவாறு பாடப்பட்டுள்ளன. இலக்கியச் சிறப்புகள் அனைத்தையும் ஒரு சேரப் பெற்று விளங்குகின்றன.

காப்புப்பருவம், செங்கீரைப்பருவம், தாலப்பருவம், சப்பாணிப் பருவம், முத்தப்பருவம், வருகைப் பருவம், அம்புலிப்பருவம் என்ற முதல் ஏழு பருவங்களும் இருவகைப் பிள்ளைத்தமிழுக்கும் பொதுவானது. பெண்பாற் பிள்ளைத்தமிழில் அம்மானை, நீராடல், ஊசல் பருவம் என்றும், ஆண்பாற் பிள்ளைத்தமிழில் சிற்றில், சிறுபறை, சிறுதேர்ப் பருவம் என்றும் ஆக பத்துப் பருவங்கள் பாடுதல் மரபு.

## முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்

குமரமுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டில் ஆறாவது நூலாக அமைந்துள்ளது. இந்நூலுக்கு முத்தையன் பிள்ளைத்தமிழ், புள்ளிருக்கு வேளூர்ச் சேனாதிபதிப் பெருமாள் பிள்ளைத்தமிழ், புள்ளிருக்கு வேளூர்க் குமார தேவர் பிள்ளைக்கவி என்ற பெயர்கள் ஏட்டுப் பிரதிகளில் காணப்படுகிறது. 101 பாடல்கள் உள்ளன. வைத்தீசுவரன் கோயிலில் வீற்றிருக்கும் முருகன் முத்துக்குமாரசுவாமி மீது பாடப்பெற்றது இந்தப் பிள்ளைத்தமிழ்.

## விநாயகர் துதி

குமரனை, வேளூரில் வீற்றிருக்கும் முருகனைப் போற்றிப் பரவும் என் கொழி தமிழ்க்கவி தழைய விநாயகரை வணங்குகின்றார் (349).

## காப்புப்பருவம்

திருமால், வைத்தியநாதன், தையல்நாயகி, கற்பக விநாயகர், பிரமதேவர், தேவேந்திரன், திருமகள், கலைமகள், சப்த மாதர்கள், முப்பத்து முக்கோடி தேவர்கள் எல்லோரும் குழந்தை முருகனைக் காக்க வேண்டுகிறார்.

## தமிழன்பு

தமிழில் இவருக்கு இருந்த அன்பு அளவிடற்கரியது. கொழிதமிழ் (349), கொத்து முத்தமிழ் (350); மும்மைத்தமிழ் (390); தீஞ்சுவைக்கனியும் தண்டேனறையும் வடித்தெடுத்த சாரங் கனிந்தூற்றிருந்த பசுந்தமிழ் (393); தெளிதமிழின் வடித்திடு நவரசமே (439); தெள்ளுதமிழ் (448) என்றெல்லாம் தமிழின் சிறப்பைப் புலப்படுத்துகிறார்.

## புள்ளிருக்கு வேளூர் சிறப்பு

வைத்தீசுவரன் கோயிலுக்குப் பல பெயர்கள் உண்டு. கந்தபுரி, வைத்தியநாதபுரி, குருகூர், சடாயுபுரி, தினகரபுரி, பருதிபுரி, வேதபுரி, புள்ளூர், வேளூர் என்ற பெயர்களைக் குறிப்பிடுகின்றார். வைத்தீசுவரர் நம்முடைய "தீராத வினை தீர்த்த தம்பிரான்" ஆவார் (361,449). இத்தலத்தில் இராமர், இலக்குவன், எழுமுனிவர், சடாயு, சம்பாதி, சூரியன், வேதங்கள் பூசித்தலைப் பாடுகின்றார். சித்தாமிர்த தீர்த்தம் சிறப்பானது. திருக்கோயில் விபூதிக்குண்டத்து வெண்சாந்தெடுத்தும் அங்கசந்தானத் தீர்த்தத்தனின்று மண்ணெடுத்தும் உண்டோர் நோய் நீங்கிச் சுகம் பெறுவர்



(414). பேயினால் பீடிக்கப்பட்டுத் துன்பம் அடைந்தவர் இங்கு இறைவனை வழிபட்டு துன்பம் நீங்குவர் (416). காலைப் போதில் இளங்கதிரவனுக்கு எதிராகத் தன் முத்துக்களையிட்டு வணங்கக் கரும்போ, கமுகோ என்று கண்டவர் கூறும்படி வளர்கின்ற செந்நெல் வயல் (375) என்று வேளூரின் நிலவளத்தைக் கூறுகிறார். சூரியனும் சந்திரனும் புக இயலாதவாறு மதில் சுவர்கள் உயர்ந்துள்ளன. மாணிக்கம் இழைத்த மாடங்களும் முத்திழைத்த மாடங்களும் வெயிலையும் நிலவையும் ஒருங்கே வீசுவதாலும் இரவும் பகலும் தெரியாமல் மக்கள் மயங்குவர் (434) பகலில் மலரும் தாமரையும் இரவில் மலரும் குமுதமும் பகல் இரவு புலப்படுத்தின என்று வேளூரின் செல்வச் சிறப்பைப் பாடுகிறார்.

### செங்கீரைப்பருவம்

குழந்தை "ங்க், ங்க்" என்று பொருள் தெரியாத ஒலியை எழுப்பும் யருவம். கீர் என்றால் சொல். இயற்கையான ஆடல் என்றே பொருள் கொள்வர். முருகன் செங்கீரை ஆடும் போது ஆபரணங்களும், உடையும், திருமேனியும் ஆடுகின்றது.

* பைம்பொன் அசும்பிய தொந்தியொடும் சிறு பண்டி சரிந்தாடப்
பட்ட நுதல் பொலி பொட்டொடு வட்டச் சுட்டி பதிந்தாட (365)

* ஒரு தாளுந்தி எழுந்து இருகையும் ஒருங்கு பதிந்து நிமிர்ந்து
அருள்பொழி திருமுகம் அசைய அசைந்தினிது ஆடுக செங்கீரை (367)

### காலப்பருவம்

குழந்தையைத் துயிலச் செய்வதற்கு நாவை அசைத்தலும் பாடுதலும் தாலாட்டு எனப்படும். ஒளி உருவம் உடையவன். தேவ அதிபனுக்கு ஒப்பில்லாத தேவன். சேவற் கொடியை உடையவன், சேனாதிபதிப் பெருமாள் (378); உடல்களாகி அவற்றுள் அமைந்துள்ள உயிர்களுக்கு உயிராய் இருப்பவன். நீங்காத அருளுக்கு உற்ற துணையானவன் (379) என்றெல்லாம் முருகனைச் சொல்லித்தாலோ, தாலேலோ என்று பாடுகிறார்.

### சப்பாணிப்பருவம்

குழந்தையை இரண்டு கைகளையும் சேர்த்து சப்பாணி கொட்டும்படி கூறுதல். அகன்ற தாமரை மலர் போன்ற கைகள் இரண்டும் சிவந்து ஒளி ததும்பும்படி சப்பாணி கொட்டுவாயாக (383). திருமாலின் வைகுந்த பதம், பிரமாவின் பிரமபதம், இந்திரனின் கற்பகச்சோலை இவற்றை எல்லாம் முருகப்பெருமான் தன் அடியார்களுக்கு உரிமையாகத் தருகிறான். வேடர்கள் வள்ளிநாயகிக்குத் தந்த சிறு ஊர்களும், தினைப் புலமும் சீதனமாகக் கொண்டு குறிஞ்சி நிலத்தைக் காப்பவனே! சப்பாணி கொட்டியருளுக (384)

### முத்தப் பருவம்

குழந்தை முருகனைப் பார்த்து, கடவுள் தன்மையுடைய வேதம் முதலியவை மணம் வீசும் உன் கனிவாயில் உமையம்மையின் முலைப்பால் மணக்க ஒரு முத்தம் தருக (393) என்கிறார். முருகனின் அழகை சந்த விருத்தமாகப் பாடுகிறார். நின் உருவ அழகும், எழுதுதற்கு அரிய கோள்களும், வெட்சி மாலையும், மார்பில் குரவ மலர் மாலையும், இடையில் உள்ள மணியும், கச்சையும், நின்னால் செலுத்தப்படும் மயிலும் வேலும், அருள் ஒழுகும் முகத்தாமரையும், தாமரை மலர் போன்ற கண்களும் உடையவன் (399) என்று வருணிக்கிறார்.

### வருகைப் பருவம்

தளர்நடையிட்டு வரும் குழந்தையை வாவென்று அழைப்பதாகும். குமரகுருபரர் தன் கற்பனைத் திறத்துடன் முருகனின் சிறுவிளையாட்டை வருணிக்கிறார். முருகன், உமா தேவியின் வயிறு குளிரும்படி தவழ்ந்து ஏறி இறைவன் மார்பில் குரவைக்கூத்து ஆடி, அவர் உடுக்கையைச் சிறுபறை போலத் தட்டி முழக்குகின்றார். அக்கினியில் கங்கை நீரை ஊற்றி அவிக்கின்றார். பிறையை எடுத்துப் பாம்பின் வாயிலே செருகுகின்றார். திருமுடியில் அணிந்த அறுகம்புல்லை மானுக்கு

அளிக்கின்றார். அப்பிரானது செம்மேனி வெண்ணீறு தூளெழப் புழுதியாட்டு அயர்கின்றார். சடையில் உள்ள நீரில் முருகன் துளைந்து விழிகள் சிவக்க விளையாடுகிறார் (401).

குழந்தை குருதன் என்பதால் திடுதிடுமென ஓடிவரும் தன்மையது எனச் சந்தத்தை அமைத்துப் பாடி இருக்கிறார்.

* உலகு குளிர எமது மதியில் ஒழுகு மமுத கிரணமே
உருகு மடிய ரிதய நெகிழ வுணர்வி லெழுத லுதயமே
.............................. (408)

### அம்புலிப் பருவம்

நிலவைக் குழந்தையுடன் விளையாட அழைப்பது. இப்பருவம் பாடற்கு அரியது என்பர். **"பிள்ளைக் கவிக்கம்புலி புலியாம்"**. அம்புலி என்றால் நிலவு. அம்புலியை அழைக்கையில், அம்புலிக்கும் முருகனுக்கும் சாம, பேத, தான, தண்ட வகையால் முறையே ஒப்புக் கூறுதலும், வேற்றுமை கூறுதலும், விளையாட வந்தால் அம்புலிக்கு விளையும் நன்மை கூறுதலும், வராவிடின் நிகழும் துன்பம் கூறுதலும் மரபு. அம்புலிக்கும் முருகனுக்கும் உள்ள பேதத்தை (412)க் கூறுகிறார் அம்புலியே நீ சிவனுக்கு ஒரு கண்ணாக உள்ளாய் முருகன் அந்தக் கண்ணின் மணியாக உள்ளான். நீ கலைகள் நிறையவும் குறையவும் பெறுகிறாய். முருகன் கலைகள் எல்லாம் நிறைய விளங்குகின்றான். நீ எங்கும் இரவோன் என்று திரிகின்றாய். முருகன் அடியவர் எவர்க்கும் இரக்கும் செயலை ஒழித்தான். நீ முளைக்கும் பயிர்களை வளர்க்கின்றாய். இவன் எல்லா உயிர்களையும் வளர்ப்பவன். நீ அமுதத்தைத் தேவர்க்குக் கொடுத்தாய் முருகன் அறிவையும், வீடு பேற்றையும் தருபவன். உலகங்களைப் படைத்த முருகன் நின்னைவிட மிக்கவன் என்று கூறுவது ஒரு பொருளன்று.

### சிற்றில் பருவம்

சிறுவர், சிறுமியர் சிற்றில் கட்டி விளையாடும் போது. அதனைச் சிறுவர் காலால் அழித்துக் கெடுத்தலைக் கூறும் பருவம். முருகா, உன்னை உமாதேவி அலங்கரித்து. விளையாடும் பொருட்டுத் தெருவில் விட்டது. எம் சிற்றிலைக் கால்கொண்டு அழிப்பதற்காக அன்று (420). குறமகன் வள்ளி தந்த தேனும் தினை மாவும் உண்டதை சொன்னோம். நீ அவள் எச்சிலையும் உதட்டைச் சுவைத்ததையும் கூறவில்லையே. நீ சினம் கொண்டு, முருகா எங்கள் சிற்றிலை சிதைக்காதே (425)

### சிறுபறைப் பருவம்

குழந்தையை சிறுபறை கொட்டி விளையாட அழைத்தல், அழகிய விரலுடன் நகக்கண்களிலும் செங்குருதி ததும்பாமல், நின் செங்கை வருந்தாமல் முருகா (436) நீ சிறுபறை முழக்கியருள். நின் காவிரி வளம் பொருந்திய நாட்டில் கொடை முரசு. மணமுரசு, வெற்றி முரசு என மும்முரசும் (437) முழங்கும். நீ சிறுபறை முழக்குக.

### சிறுதேர்ப் பருவம்

குழந்தையை சிறிய தேரை உருட்டியருளுக எனக் கூறுதல். போர்க்களத்தில் சூரபதுமனின் இந்திரஞாலத் தேரை உருளாமல் நிற்கும்படி செய்தவனே (442) சிறுதேரை உருட்டியருளுக. முருகனின் மயிலின் செயலைக் கூறுகிறார். பசுமையான கண்களையுடைய இறகினால் உண்டாகும் காற்று ஊழிக்காலக் காற்றை உண்டாக்க, மலைகள் விரிந்த சிறகுகள் பெற்று எழுவன போல் வேகமாகச் செல்லும் மயிலை ஊர்தியாக உடையவன் (443). வேளூரில் வீற்றிருக்கும் தீராத வினை தீர்த்த தம்பிரானும் அவரது தழல் உருவத்தில் ஒரு பாதி குளிரும்படி ஒரு பக்கத்தில் நின்ற தையல்நாயகியும் தம்மிடத்தில் (449) வைத்து சீராட்டி விளையாடும் சேனாபதிக் கடவுள். அவன் திருமகள் விளங்க விளங்கும் கந்தபுரியில் வீற்றிருக்கும் இளங்குமரன்.



## முருகன் பெருமை

குமரகுருபரர் தம்மை இளமையிலே ஆட்கொண்ட முருகன் மீது தனியன்பு கொண்டவர். முருகனுக்காக இரண்டு நூல்கள் இயற்றினார். முருகனுடைய பெருமையைப் பல இடங்களிலும் எடுத்துரைக்கின்றார். உமையம்மைக்கு அரிய மருந்தாக இருந்த தெய்வத்தன்மை உடைய பிள்ளைக்கோலமே முதிர்ந்த கிழக்கோலமாய் வள்ளி முன் நின்று, பின் ஒப்பற்ற மணக்கோலமும் கொண்டவன். இறந்து மறுபடியும் பிறவி எடுக்கும் தெய்வங்களுக்குத் தலைவனாய் விளக்குபவன் (360).

1) முதற்கடவுளே என்று மூவராகிய முதன்மைக் கடவுளும் திருவடித்தொண்டு முருகனுக்குச் செய்வர் (360).

2) *மூலமெனக்குல நான்மறை ஓலிடு முழுமுதலே மூவா முக்கண் கனிகனியும் சுவையே தனி முத்திக் கொரு வித்தே (375)

   ..................... சங்கத்தமிழன் தலைமைப் புலவா.

3) உள்ளம் உருகுகின்ற அடியாரின் அறியாமை என்ற இருள் நீங்க ஒளிரும் மாணிக்க மணியே (377)

4) தோலாத முத்தமிழ் நாவா (378).

5) பெரிய உலகங்கள் நிலை நிறுத்துகின்ற ஒப்பில்லாத பெருமை உடையவன் (391)

6) பழமறையை வடித்துத் தெளித்த வார்த்தை ஒன்று மொழியும் பவளச் செங்கனிவாய் (392)

7) இயலும் நடையும் வடிவும் அழகும் எழுத அரியவன் (409)

8) விழியாக முன்னின்று தன்னருள் சுரந்து அவர்கள் வேண்டிய வரம் கொடுப்பான் மெய்கண்ட தெய்வம் இத்தெய்வமல்லால் புவியில் வேறில்லை என்றுணர்தி (415)

9) பிறவிக்கடலில் விழுந்து வருந்தும் என்னை மோட்சக் கரையில் சேர்ப்பவன் (418).

10) அசுரர்களில் குடுமி குலைந்தவர்களையும், ஆயுதம் கண்டு கண் இமைப்பவரையும், கால் பின் வாங்குபவர்களையும் கொல்லலாகாது என்று போர் நெறிப்படி முருகன் நடக்கிறான் அதனால் முருகன் அசுரர் மனைவியரின் தாலிக்கு வேலியாய் உள்ளான் (440).

11) அறிவுளறிவை யறியு மலருமறிய வரிய பிரமமே (408)

முருக பக்தியில் முழுக்க ஆழ்ந்த ஒருவரால் தான் இத்தகைய இலக்கியத்தைப் பாடமுடியும் என்ற எண்ணம் மனத்துள் எழுவது இயல்பே. பிள்ளைப் பருவத்தில் இருந்து இவர் பிள்ளைத்தமிழ் பாடினார்.

குமரகுருபரர் தாமிரபரணியாற்றின் கரையிலே ஸ்ரீ வைகுண்டத்தில் பிறந்து, அலைகடல் கரையில் திருச்செந்தூர் முருகன் அருள் பெற்று, வைகை ஆற்றின் கரையில் மதுரை மீனாட்சிடம் முத்துமாலை பெற்று, காவிரியாற்றின் கரையில் தருமையில் ஞான உபதேசம் பெற்று, கங்கையாற்றின் கரையில் காசியில் மடம் நிறுவி சைவத்தையும் தமிழையும் பரப்பினார். காசியில் இறக்க முத்தி என்பதற்கேற்ப காசியில் முத்தி அடைந்தார்.

குமரகுருபரர் பணி நாடு கடந்த, மொழி கடந்த அரும்பணி. “என் இருவினை மும்மலம் இவைகளை ஒழித்து, உன் பழைய அடியார் கூட்டத்தில் சேர்த்து, பேரின்பத்தை ஊட்டி, என் முன் வந்து, உன் தரிசனத்தைத் தந்து என்னை ஆட்கொண்டருள்” (கந். கலி 120-122) என குமரகுரபரர் முருகனிடம் வேண்டுவதையே நாமும் வேண்டுவோமாக.

# எந்த வேளையும் கந்தவேளையே வந்தித்து உய்ந்த அருளாளர்

(முனைவர் க. திலகவதி, கோலாலம்பூர்)

## 1. அறிமுகம்

ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளின் பெயரைக் கேட்டிராதவர்களும் ஷண்முக கவசத்தைத் தெரிந்து வைத்திருப்பர். ஷண்முக கவசத்தைப் பாடத் தெரியாதவர்களும் ஷண்முக கவசம் என்னும் பெயரைக் கேட்டிருப்பர்.

சூலமங்கலம் சகோதரிகள் கந்த சஷ்டி கவசத்தைப் பாடி வெளியிட்டபோது, அது அதிகமானோரைக் கவர்ந்தது. மிகப் பலர் கந்த சஷ்டி கவசத்தைப் பயபக்தியோடு பாடக் கற்றுக்கொண்டார்கள். ஆனால், கந்த சஷ்டி கவசத்தை இயற்றியவர் யார் என்று கேட்டால் பலருக்கு விடை தெரிந்திருக்காது. கந்த சஷ்டி கவசத்தை இயற்றியவர் ஸ்ரீ தேவராய சுவாமிகள் ஆவார்.

ஸ்ரீ தேவராய சுவாமிகளைவிட, பாம்பன் சுவாமிகளை ஒரு குறிப்பிட்ட குழுவினர் அறிந்திருக்க வாய்ப்புண்டு. பாம்பன் சுவாமிகள் தமக்குப் பின், தம் அடியார்கள் ஒன்று கூடித் தம் தொண்டைத் தொடருவதற்கென்று, திருவான்மியூரில் நிலம் வாங்கி, மகா தேஜோ மண்டலம் என்னும் சங்கத்தை நிறுவினார். தமிழ் நாட்டில் சுமார் மூன்று இடங்களில் பாம்பன் சுவாமிகளின் அடியார்களது அமைப்பு உள்ளது. மலேசியாவிலும் சுவாமிகளின் அடியார்கள் ஓர் இயக்கமாக இயங்கி வருகின்றனர்.

பாம்பன் சுவமிகளையும் அவர் பாடியருளிய ஷண்முக கவசத்தையும் அறிமுகப்படுத்தும் இடத்தில், தேவராய சுவாமிகளையும் அவர் பாடியருளிய கந்த சஷ்டி கவசத்தையும் ஏன் குறிப்பிட வேண்டும்? பாம்பன் சுவாமிகளுக்கும் கந்த சஷ்டி கவசத்துக்கும் தொடர்பு உண்டு. கந்த சஷ்டி கவசத்தை, ஒரு நாள் முப்பத்தாறுருக் கொண்டு, என அதில் குறிப்பிட்டுள்ளபடி, 36 தடவை பாராயணம் செய்து சிறந்த முருக பக்தர் ஆனவரே நம் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள்.

இந்தக் குறுகிய அறிமுகத்தோடு, பாம்பன் சுவாமிகளின் வைராக்கிய பக்தி நிறைந்த வாழ்க்கையையும் அவர் பாடியருளிய பாடல்களின் சிறப்புகளையும் சுருங்கக் காண்போம்.

## 2. இளமை வாழ்க்கையும் ஆறெழுத்து உபதேசம் பெற்றதும்

தமிழ் நாடு இராமேஸ்வரம் வட்டாரத்தில் உள்ள பாம்பன் என்னும் கிராமத்தில், சாத்தப்ப பிள்ளை - செங்கமலத்தம்மை தம்பதியரின் முதற் குழந்தையாகப் பிறந்தார் பாம்பன் சுவாமிகள். பெற்றோர் இவருக்கு இட்ட பெயர் அப்பாவு. பள்ளியில், படிப்பிலும் புறப்பாட நடவடிக்கைகளிலும் சிறந்து விளங்கினார். அப்பாவு 1848இல் பிறந்தார் என்று சிலர் எழுத, வேறு சிலர் 1850இல் பிறந்தார் என்று எழுதுவர். 1866இல், கிறிஸ்தவ பல்கலைக் கழகத்தில் சேர்ந்து படித்துக் கொண்டிருந்தபோது, ஒரு நாள் ஒரு துறவி சிவசிவ என்று சொல்லிக் கொண்டிருப்பதைப் பார்த்துத் தாமும் அவ்வாறே ஜபிக்கத் தொடங்கினார்.

இவ்வாறு மூன்று நாள்கள் உச்சரித்துக் கொண்டிருக்கையில், முருகனை பற்றிய நூல்களைப் பார்க்க எண்ணிக் கடைக்குச் சென்றார். அவர் கண்ணில் பட்ட கந்த சஷ்டி கவச நூலை வாங்கி



வந்து, மேலே கூறியவாறு பாராயணம் செய்த வண்ணம் இருந்தார். அதன் பயனாக, அவர் முருகனின் நாமத்தையே தொடர்ச்சியாக ஜபிக்க ஆரம்பித்தார்.

இவ்வாறிருக்கையில், ஒரு நாள் தன் தந்தையின் தென்னந்தோப்பைப் பார்த்து வரச் சென்றார். அப்போது பொழுது புலரும் நேரம். தாமும் முருகனைப் பாட வேண்டும் எனும் உணர்வு தோன்றியது. முருகனை வணங்கி, தமது மானசீகக் குருவாகிய அருணகிரி நாதரை நினைத்து, ஒரு பனையோலையை எடுத்து எழுத ஆரம்பித்தார். கங்கையைச் சடையிற் பரித்து....... என்று ஆரம்பித்து, ............... திருவருளை அடையும் கருணை நல்காய், அருமறை புகழ்ந்த திருமுருக சிவ சரவணத்து ஆதியே அமரர் கோவே என முடித்தார்.

அன்று முதல் உண்பதற்கு முன் ஒரு பாடல் பாடுவதென்று முடிவெடுத்து, நூறு பாடல்கள் பாடி முடித்தார். இறையருளின் தூண்டுதலினால்தான் அப்பாவு பாடல்களைப் பாடினார் என்பது பின்வரும் வரிகளில் தெற்றென வெளிப்படுகிறது:

> சொல் கவிதையது கங்கை யென் மொழியில்
> தொடங்கும் மங்கலம் உணர்ந்து பின் மகிழ்ந்தேன்

கங்கை எனும் மங்கலச் சொல்லில் தம்முடைய முதல் பாடல் தொடங்கியதை உணர்ந்து, பின்னர்த் தாம் மகிழ்ந்ததாகக் கூறுகிறார் சுவாமிகள். ஸ்ரீ பாம்பன் சுவாமிகளின் மற்றொரு நூலாகிய ஸ்ரீமத் குமாரசுவாமியத்தின் திருவருட் செயல் ஞாபகம் என்னும் பகுதியில் இக்கவிதை வரிகள் இடம்பெற்றுள்ளன.

பாம்பன் சுவாமிகள் என்று போற்றப்படும் அப்பாவு, தாம் எழுதிய நூறு பாடல்களில், ஒவ்வொரு பத்தாவது பாடலிலும் தம் மானசீகக் குருவான அருணகிரி நாதரைக் குறிப்பிடத் தவறவில்லை.

அப்பாவு அவர்களின் நூறு பாடல்களையும், ஆலய அர்ச்சகராகப் பணியாற்றிக் கொண்டிருந்த சேது மாதவ ஐயர் கண்டார். இளம் வயதில், சுவாமிகளுக்கு இருந்த தமிழ் ஆற்றலையும் முருக பக்தியையும் கண்டு வியந்தார். ஒரு நாள் அப்பாவு எனும் அந்த இளைஞனைத் தம் வீட்டுக்கு அழைத்துச் சென்று, விஜயதசமியாகிய அடுத்த நாளில் அதிகாலையிலேயே அக்கினித் தீர்த்தத்தில் இருவரும் நீராடிய பின், அப்பாவு காதில் ஆறெழுத்து மந்திரத்தை உபதேசித்தார். ஐயர் கூறியபடி, சுவாமிகள் வடமொழி கற்றார்; முருக நாம ஜபத்திலேயே தம் பொழுதைக் கழித்தார். ஆறெழுத்து மந்திர உபதேசம் பெற்ற செய்தியும் ஸ்ரீமத் குமாரசுவாமியம் எனும் நூலில் குறிக்கப்பட்டுள்ளது.

### 3. திருமணம்

முருக பக்தியில் ஆழ்ந்துபோய், துறவறத்தை நாடிய மனத்தோடு வாழ்ந்தார் அப்பாவு; இதைக் கண்ட பெற்றோரும் சேது மாதவ ஐயரும் மதுரையைச் சேர்ந்த காளிமுத்தம்மை எனும் பெண்மணியை அவருக்கு மணம்செய்து வைத்தனர். 1878இல் பாம்பன் சுவாமிகளுக்கு முருகையபிள்ளை, சிவஞானாம்பாள், குமரகுருதாச பிள்ளை எனப் பெயரிட மூன்று குழந்தைகள் பிறந்தனர்.

இல்லறத்தில் வாழ்ந்தாலும் பாம்பன் சுவாமிகள் முருகன் அருளை வேண்டியே தம் இல்லறத்தை நடத்தினார்; இடர்ப்பாடு ஏதும் நேர்ந்தபோது முருகனை வேண்டி, அவன் அருளாலேயே அவற்றிலிருந்து விடுபட்டார். இதற்கு எடுத்துக்காட்டாக சுவாமிகளின் வாழ்வில் பல நிகழ்ச்சிகள் நடந்துள்ளன. அவற்றுள் ஒன்றைக் காண்போம்.

சுவாமிகளின் மகள் சிவஞானாம்பாள் ஓராண்டு நிறையாத குழந்தையாய் இருந்தபோது, ஒரு நாள் இரவு பால் குடிக்காமல் அழுதுகொண்டே இருந்தாள். செய்வதறியாது காளிமுத்தம்மை சுவாமிகளிடம் விபூதி கேட்டார். தாம் யாருக்கும் விபூதி தருவதில்லை என்று சொல்லி இறைவனிடம்

கேட்கச் சொன்னார் சுவாமிகள். அம்மையாரும் இறைவனை வேண்டியபடியே குழந்தையின் அருகில் படுத்திருந்தார். அப்போது ஒரு துறவி வந்து குழந்தையின் உடல் முழுதும் விபூதியைப் பூசி, 'இனி அழாது' எனக் கூறிச் சென்றார். நடந்ததைக் கேட்டறிந்த சுவாமிகள் முருகனின் அருட்செயலே அது என்றுணர்ந்து மகிழ்ந்தார்.

**4. பழனிக்குச் செல்ல முருகன் விதித்த தடை**

தம் வாழ்வின் ஒவ்வோர் அடியையும் முருகன் காட்டிய அருள்நெறியிலேயே எடுத்துவைத்து வாழ்ந்துகொண்டிருந்த சுவாமிகளுக்குத் துறவற ஈடுபாடு நீறு பூத்த நெருப்பாக இருந்துகொண்டே இருந்தது.

எனவே, 1891இல் ஒரு நாள் துறவறம் மேற்கொண்டு பழனிக்குச் செல்ல எண்ணிய சுவாமிகள், தம் நண்பர் அங்கமுத்து பிள்ளையிடம் தாம் பழனிக்குச் செல்லப்போவதாகக் கூறினார்; 'இது முருகன் கட்டளையா?' என்று நண்பர் கேட்டபோது, 'ஆம்' என்று கூறினார்.

'ஏன் பொய் கூறினாய்?' என்று சினத்துடன் முருகன் நோக்க உடலும் உள்ளமும் நடுங்கிப்போனார் சுவாமிகள். ஆன்மிக லாபம் என்னும் உயரிய இலக்கை நோக்கிப் 'பொய்' சொன்னவரைத் தாம் அழைக்கும் வரை பழனிக்கு வரக்கூடாது என்று கூறிவிட்டார் முருகன். தம் வாழ்நாளின் இறுதி வரைக்கும் சுவாமிகள் பழனிக்குச் செல்லவே இல்லை.

இறைவனின் அடியார்கள் பூமிக்கு அனுப்பப்பட்ட நோக்கம் முற்றுப்பெறும் வரை, இறைவன் அவர்களைத் தம் அடியைச் சேர விட மாட்டான் என்னும் உண்மையைத் திருநாவுக்கரசர், மாணிக்கவாசகர் போன்ற அருளாளர்கள் வாழ்க்கை நமக்கு உணர்த்துவதை இங்கு நினைவுகூரத் தக்கது.

தாம் செய்த பிழைகளைப் பொறுத்துத் தம்மை ஆட்கொள்ள வேண்டும் என்னும் வேண்டுதலை முன்வைத்து சுவாமிகள் பாடியருளியது பிழை பொறுக்க முறையீடு என்னும் பாடல். இது பத்து செய்யுள்களைக் கொண்டது; நான்காவது செய்யுளில் தாம் கூறிய ஒரேயொரு பொய்யை எண்ணி நொந்து பாடியிருப்பதைக் காணலாம்:

கன்னலே இழுதே கற்கண்டே தேனே கனிந்த,முக் கனி,ரச மே,இன்
மன்,நய விளைவே அமுதமே ஒழியா மதுரமே சீனிச்,சக் கரையே
என்னுளத்(து) இயங்கும் இறையெனுங் குருவே எந்தையே திருத்துணை கிடைத்த
பின்னும்,நிற் கேற்காப் பிசிதனை நவின்றேன் பிழைபொறுத் தாள்வதுன் கடனே

(இழுது=நெய்; இன் மன் நய விளைவே=இனிமை தங்கிய நன்மை விளையும் பொருளே; பிசி=பொய்)

'உன்னுடைய திருவருள் கிடைத்தும், பொய் கூறிய அடியேனின் பிழை பொறுத்து அடியேனை ஆட்கொள்வது உன் கடனே' என்று உருகிப் பாடுகிறார். தம் உள்ளத்தில் விளங்கி நிற்கும் முருகனின் அனுபவம் தரும் இனிமையைச் சொல்லால் விளக்குவது கடினம் என்பதால், அவரறிந்த அனைத்து இனிய சுவைமிக்க பொருள்களின் பெயரையும் கொண்டே முருகனைப் பாடியுள்ளது பக்திச் சுவையும் சொற்சுவையும் கொண்டு விளங்குகிறது.

முருகனின் ஆணையினால் இல்லற வாழ்வைத் தொடர்ந்தாலும், தம் உணவு முறையில் நாவின் சுவையைத் துறந்தார். உப்பு, புளி ஆகியவற்றை நீக்கி உணவு உண்டார். அறுசுவையற்ற உணவையே உண்டார். பச்சைப்பயிறும் பச்சரிசியும் கலந்த உணவையே எப்போது உண்டார்; உச்சிப்பொழுது சிறிது தாண்டினாலும் அன்று உணவோ நீரோ உட்கொள்ள மாட்டார். இவ்வாறு 5, 6 நாள்கள் நீரும் உணவும் இன்றி இருந்துள்ளதும் உண்டு.



### 5. ஷண்முக கவசமும் பரிபூஜன பஞ்சாமிர்த வண்ணமும் பாடுதல்

துறவறம் மேற்கொண்டு பழனிக்குச் செல்ல எண்ணிய அதே 1891இல், கட்டுரையின் ஆரம்பத்தில் குறிப்பிடப்பட்ட, நம்மில் பலரால் பக்தி சிரத்தையோடு ஓதப்படும் ஷண்முக கவசத்தைப் பாடியருளினார். முருகன் தமிழ்க் கடவுள் என்பதற்கேற்ப, அகரம் முதலிய முப்பது தமிழ் எழுத்துகளில் முறையே தொடங்கும் முப்பது பத்திகளை ஷண்முக கவசத்தில் பாடியுள்ளார். இங்குக் கூறப்படும் தன்மையைத் தெளிவாகக் காண ஷண்முக கவசத்தின் 24, 25, 26 ஆகிய பத்திகளைக் காண்போம்:

ரஞ்சித மொழி தேவானை நாயகன், வள்ளி பங்கன்
செஞ்சய வேல் கிழக்கில் திறமுடன் காக்க, அங்கி
விஞ்சிடு திசையில் ஞானவீரன் வேல்காக்க, தெற்கில்
எஞ்சிடாக் கதிர் காமத்தோன் இகல் உடைக் கரவேல் காக்க

லகரமே போல் காளிங்கன் நல்லுடல் நெளிய நின்று
தகர மர்த்தனமே செய்த சங்கு,அரி மருகன் கைவேல்
நிகழ்எனை நிருதி திக்கில் நிலைபெறக் காக்க, மேற்கில்
இகல்அயில் காக்க, வாயுவினில் குகன் கதிர்வேல் காக்க

வடதிசை தன்னில் ஈசன் மகன் அருள் திருவேல் காக்க
விடையுடை ஈசன் திக்கில் வேத போதகன் வேல் காக்க
நடக்கையில், இருக்கும்ஞான்றும், நவில்கையில், நிமிர்கையில், கீழ்க்
கிடக்கையில், தூங்குஞான்றும் கிரிதுளைத்துள வேல் காக்க

(ரஞ்சிதம்=இனிமை/இன்பம்; அங்கி விஞ்சிடு திசை=அக்கினி மேலோங்கியுள்ள தென்கிழக்குத் திசை; இகல்=வலிமை; காளிங்கன்=காளிங்கன் என்ற பாம்பு; தகர=அழிய; மர்த்தனம்=பிசைதல்; அரி=திருமால்; நிருதி=தென்மேற்கு; வாயு=வடமேற்கு; ஈசன் திக்கு=வடகிழக்குத் திசை; போதகன்=ஆசிரியன்).

மேலேயுள்ள மூன்று பாடல்களும் முறையே ர, ல, வ ஆகிய எழுத்துகளில் தொடங்குவதைக் காணலாம். 'ஷண்முக கவசத்தை உள்ளமுருகி பயபக்தியோடும் நம்பிக்கையோடும் நாளொன்றுக்கு ஆறு முறை படிப்பவர்கள் எத்துன்பத்தினின்றும் விடுதலை பெறுவார்கள்; முடிவில் முத்தியும் அடைவார்கள். இரவில் வழி நடத்தல், வனத்தில் செல்லுதல், நோயால் வாடுதல், யாதானும் ஒரு துன்பத்தில் அகப்பட்டுக்கொள்ளுதல், நித்திரை செய்யப்போதல், மரண காலம் போன்ற எவ்விதச் சூழலிலும் இக்கவசம் மன ஒருமையோடு படிக்கப்படுமாயின் யாதொரு துன்பமும் இல்லை' என்பது சுவாமிகளின் கருத்து வெளிப்பாடு.

சுவாமிகள் கூறிய முறையில் கவச பாராயணம் செய்து நீதிமன்றத்தின் அநியாயத் தண்டனையிலிருந்து விடுதலை பெற்றது, பெரு வெப்பு நோயால் பாதிப்புற்று மருத்துவர்களால் கைவிடப்பட்ட ஐந்து வயது சிறுவன், நோயினின்றும் படிப்படியாகத் தேறி, நடக்கும் வலிமையற்ற கால்கள் தேறி நடக்க ஆரம்பித்தது என்பது போன்ற பல அதிசய நன்மைகளைப் பெற்றவர்கள் தென்னாட்டில் சான்றாக வாழ்ந்துள்ளனர்.

1891இல் சுவாமிகள் நமக்களித்த மற்றுமொரு அரும்பெரும் நூல், பரிபூஜன பஞ்சாமிர்த வண்ணம் என்பதாகும். இந்நூலின் சிறப்பு பற்றி திருப்புகழ் சதுரர் சே.த. இராமலிங்கம் பிள்ளை BA, BT என்பவர் சிறுநூற்றிரட்டும் குமரவேள் பதிற்றுப்பத்தாந்தாதியும் என்னும் நூலில், பரிபூஜன பஞ்சாமிர்த வண்ணம் பதிப்புரையில் பின்வருமாறு கூறுகிறார்: 'இது, செவ்வேட் பரமனாரது சிந்தைக்கினியதாய்ச் செவிக்கினியதாய், படிக்கும் இடத்திலெல்லாம் குகப்பிரான் காட்சியைக் கூட்ட வல்லதாய் உள்ளது என்று செந்திற் கந்தனே முத்தம்மை என்ற பக்திமிக்க முதியாட்கு

(முதியவருக்கு) உரைத்தருளிய சிறப்பினது. இந்நூலைப் பக்தி பிறங்கப் (சிறக்கப்) பாடுநர், குமாரபிரானைப் பால், தயிர், நெய், சர்க்கரை, தேன் ஆகியவற்றால் திருமுழுக்காட்டிய பலன் பெறுவதோடு தோகை மயில் வாகனனையும் ஓகையுடன் (உவகையுடன்) தரிசிப்பர் என்பது உறுதி.

சுவாமிகள் திருவனந்தபுரம் ந. சுப்பிரமணிய பிள்ளை எனும் பெயருடைய சிவநேயச் செல்வர் ஒருவரோடு பாம்பன் நகரில் சந்தித்துப் பேசிக் கொண்டிருக்கையில், சுவாமிகளைக் காணவந்த ஒருவர், தமக்குப் பாடமாயிருந்த சிற்றின்ப வண்ணமொன்றை இனிமையாகப் பாடினார். அதைக் கேட்ட சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், குமரப்பெருமான் மீது வண்ணம் பாடும்படி கேட்டதற்கிணங்க பஞ்சாமிர்த வண்ணத்தைப் பாடினார் சுவாமிகள்.

இவ்வண்ணத்தைப் பக்தி சிரத்தையோடு, இசைகெடாமல் பாடும் இடத்தில் தான் தோன்றுவேன் என பெருமானே முத்தம்மை என்னும் மூதாட்டிக்குக் கூறிய விவரம் பின்வரும் ஸ்ரீமத் குமாரசுவாமியம் என்னும் நூலில் உள்ள பாடலில் காணப்படுகிறது:

பரிவாளர்கள் அங்(கு)ஒதொரு பஞ்சாமிர்த வண்ணம்
இரியா,எனது உளநச்சினிதாம் என்று,ஒரு கிழமைப்
பெரியாள்முனம் வந்தோதிய செந்திற் பெருமானே
வரிமாமறை இறைவா! எனை மறவேல், எனைமறவேல்

(பரிவாளர்கள்=அன்புள்ளவர்கள்; இரியா எனது உளம் நச்சு இனிதாம்=நீங்காது என் உள்ளம் விரும்பும் இனிமையானதாம்; கிழமை=முதுமை; வரி=இசையுடன் கடிய)

## 6. காஞ்சிபுரத்து குமரகோட்டத்துக்கு அழைத்துச் சென்றான் குமரன்

சுவாமிகள் தல யாத்திரையும் மேற்கொண்டுள்ளார். ஒரு முறை திருஆலவாய், திருக்காளத்தி, திருத்தணிகை, திருவண்ணாமலை முதலிய தலங்களைத் தரிசித்துக்கொண்டு காஞ்சி மாநகருக்கு வந்தார். அங்குப் பத்து நாள்கள் தங்கிப் பல கோயில்களைச் சென்று கண்டு அங்கெல்லாம் வீற்றிருந்து அருள்புரியும் இறைவனை வணங்கினார். தன்னிடம் இருந்த பணம் குறைந்துவிட்டதால், தன் ஊருக்குப் புறப்பட்டார். அப்போது சுமார் 30 வயதுடைய ஒருவர் சுவாமிகள் எதிரே வந்து, 'குமரகோட்டத்தைத் தரிசித்தீர்களா?' என்று கேட்க, சுவாமிகள் 'இல்லை' என்றார்.

தாம் காட்டுவதாக அழைத்துச் சென்ற அம்மனிதர், சுவாமிகளைக் கொடி மரத்தருகில் விட்டுவிட்டு மறைந்தார். குமர கோட்ட அர்ச்சகராக விளங்கிய கச்சியப்ப சிவாச்சாரியாரால் கந்த புராணம் இயற்றப்பட்ட சிறப்புடையது இத்தலம். கோயில் பூஜையைக் கண்டு மனம் மகிழ்ந்தார்; இறைவனின் பேரருளை எண்ணி உள்ளமுருகிக் கண்ணீர் வடித்தார். தாம் செல்ல வேண்டிய புகைவண்டி தமக்குக் கிடைக்க வேண்டும் என்று இறைவனை வேண்டிக்கொண்டு புறப்பட்டார்.

ஏதோ கோளாற்றினால் தாமதப்பட்ட புகைவண்டி, சுவாமிகள் புகையிரத நிலையத்தை அடைந்த பின்தான் புறப்பட்டது. இறைவனின் பெருங்கருணையைப் போற்றுவதா? வேண்டிய நேரத்தில் எல்லாம் இறைவனின் உதவியைப் பெறும் பெரும்பேற்றைப் பெற்ற சுவாமிகளின் அடிமைத் திறத்தைப் போற்றுவதா?

## 7. பழனிமலை முருகனின் தரிசனம் பெற, பிரப்பன் வலசையில் ஆழ்ந்த நிட்டை

1894இல் பழனிமலை முருகனிடமிருந்து நேரே உபதேசம் பெற வேண்டும் என்னும் அளவிடற்கரிய ஆர்வம் உண்டாயிற்று. எனவே, அரசாங்க அதிகாரியின் அனுமதியோடு, பிரப்பன் வலசை மயானத்தில் மூன்றடி அகலம், மூன்றடி நீளம், மூன்றடி ஆழம் கொண்ட குழியைத் தோண்டச் செய்து, அதன் கூரைக்கு ஒரு பூட்டையும் இட்டு, அதனுள் 35 நாள்கள் நிட்டையில் இருந்தார்.



பாம்பு, பேய், ஆவி போன்றவற்றின் அச்சுறுத்தல்களை ஆறெழுத்து மந்திர ஜபம் மூலம் வென்றார். ஆறு தினங்களில் சுவாமிகளின் மனம் அடங்கியது; ஏழாம் நாள், சுவாமிகளை எழுந்திருக்குமாறு ஒரு குரல் கூறியது. பழனியாண்டித் தெய்வமே வந்தாலொழிய, சாவே வந்தாலும் தாம் எழப்போவதில்லை என்று சுவாமிகள் கூறினார்.

'உன் பெருமான்தான் வந்துள்ளேன்; கண்ணைத் திற' என்று அக்குரல் கூறவே, சுவாமிகள் கண் திறந்தார். ஒரு கையில் தண்டமும் மறு கையில் சின்முத்திரையும் கொண்டு தம் முன் காட்சியளித்த பழனியாண்டிப் பெருமானைக் கண்டு மனம் பூரித்தார் சுவாமிகள். இறைவனோடு இரண்டு முனிவர்களும் வந்திருந்தனர். பழனியாண்டிப் பெருமான் சுவாமிகளுக்குத் 'தகராலய ரகசியத்தை', அதாவது 'ஒருமொழி' உபதேசத்தை அருளினார்.

சுவாமிகள் தம் தியானத்தை மேலும் 28 நாள்கள் தொடர்ந்தார்; உணவு, தண்ணீர், உறக்கம் இல்லாமல், மொத்தத்தில் 35 நாள்கள் நிட்டையில் இருந்தார்.

35ஆவது நாள் சுவாமிகளிருந்த குழியை விட்டு வெளியே வருமாறு ஒரு குரல் கேட்டது. 'என் பெருமான் அழைத்தால்தான் நான் வருவேன்' என்று சுவாமிகள் கூற, 'நான்தான் வந்துள்ளேன்' எனப் பதில் கிடைத்தது. வெளியே வந்த சுவாமிகள், அன்று சித்திரா பௌர்ணமி என்றுணர்ந்தார்; மௌனமாகவே இருந்தார்; அவரது அன்பர்கள் திருவாய் மலர்ந்தருளுமாறு அவரை வேண்டியபோது, பேசா நிலை பெருஞ்சுகமாய் உள்ளது என்று கூறினார். மூன்றாம் நாள் பின்வரும் பாடலைப் பாடி, திருவாய் மலர்ந்தருளினார்:

எத்தனை யோ,தலம் சுற்றிவந் தேன்,மனம் எள்துணையும்
அத்தன் குமாரன் முருகனை நாட அடங்கவில்லை
பக்தர்கள் வாழ்பிரப் பன்வல சைச்,செம் பதிதனிலே
சத்திய மாகக்,கை கூடின தால்,இனித் தாழ்விலையே

(எள்துணையும்=சிறிய அளவுகூட)

**8. துறவறமும் சென்னை வாழ்வும்**

1895இல் சுவாமிகள் துறவறம் மேற்கொள்ள விரும்பி, பிரப்பன் வலசைக்குச் சென்றார். துறவறம் மேற்கொண்ட பிறகு சுவாமிகள், சிதம்பரத்துக்கு அருகிலுள்ள பின்னத்தூர், சென்னை ஆகிய இடங்களில் வாழ்ந்து வந்தார். சுவாமிகள் முதல் முறை சென்னைக்குச் சென்றபோது, மதுரையிலிருந்து இரயிலில் புறப்பட்டுச் சென்றார். அங்கு ஓர் அன்பர் அவரை அழைத்துச் சென்று, வைத்தியநாத முதலியார் தெருவிலுள்ள 41 என்னும் எண்ணுடைய இல்லத்தில் சேர்த்தார். அவ்வீட்டு அம்மையாரின் கனவில் முதல் நாள் சுவாமிகள் தோன்றி 'ஆகாரம் தருக' என்று கேட்டதாக அங்குள்ளவர்களிடம் கூறி, அதன்படி சுவாமிகளுக்கு உணவளித்து உபசரித்தார். எல்லாம் முருகன் செயலென வியந்து மகிழ்ந்த சுவாமிகள் அம்மையார் கேட்டுக் கொண்டதற்கிணங்க, அவருக்கு ஆறெழுத்தை உபதேசித்தார். அவ்வம்மையார் பின்பு சுவாமிகள் ஆசியோடு துறவறமும் மேற்கொண்டார்.

1896இல் சிதம்பரத்துக்குச் சென்றார். அங்கிருந்த பொழுது, தகராலய ரகசியம், பரிபூரணானந்தம், கந்தரொலியல் அந்தாதி, குகப்பிரம அருட்பத்து முதலிய நூல்களைப் படைத்தார்.

மீண்டும் சென்னையில் வந்திருந்த சமயத்தில், தம் அன்னையார் அறுமுகனடியைச் சேர்ந்தபோது, துறவி என்னும் முறையில் இறுதிக் கிரியைகளில் கலந்துகொள்ளவில்லை. பின்பு சுவாமிகளின் மூத்த புதல்வர் இறந்தபோதும் அவ்வாறே செய்தார். அவர்களுக்கு நற்கதி அளிக்குமாறு முருகனை வேண்டிக்கொண்டார்.

**9. காசி யத்திரையும் காவியுடை பெறுதலும்**

1902இல் காசிக்குச் சென்று இறைவன் தரிசனத்தை முடித்துக்கொண்டு, ஸ்ரீ குமரகுருபரர் நிறுவிய குமாரசுவாமி மடத்துக்கு வந்தார், அங்கிருந்தவர்கள் சிறந்த வரவேற்பை நல்கினர். உணவு உண்டு முடித்த பின்பு, தம் இடத்திற்கு வந்தபோது தம்முடைய மேல்துண்டைக் காணாமல் தேடினார். அப்போது காஷாயம் தரித்த முதியவர் ஒருவர் காஷாய ஆடையைக் கொணர்ந்து, சுவாமிகளின் இடுப்பில் ஒன்றும் தோளில் ஒன்றுமாக அணிவித்தார். அதுவும் குமரப் பெருமானின் அருளே என்று ஏற்றுக்கொண்டார்.

பிரப்பன் வலசையில் பழனியாண்டவரிடம் உபதேசம் பெற்றபின், பட்டினத்தார் போன்றும் பழனியாண்டவர் போன்றும் ஒரு வெள்ளைத் துண்டை மட்டும் அணிந்திருந்தார். தம் அன்பர்களின் வேண்டுகோளின்படி இரண்டு வெள்ளைத் துண்டுகளை ஆடையாகக் கொண்டு, அவ்வாறே ஆடையணிந்து வந்தார். காசியில் இரண்டு காவித் துண்டுகளை ஆடையாகப் பெற்றபின், அவ்வாறே அதன்பின் ஆடையணிந்தார். இந்தச் செய்திகளெல்லாம் காசி யாத்திரை என்னும் நூலில் இடம்பெற்றுள்ளன.

### 10. முதன்முதலில் அருணகிரிநாதருக்கு குருபூஜை செய்தவர் சுவாமிகளே

ஒவ்வோர் ஆண்டும் ஆனி மாதத்தில் இடம்பெறும் பௌர்ணமி (வியாச பௌர்ணமி) அன்று அருணகிரிநாதருக்குக் குருபூஜை செய்ய வேண்டும் என்று சுவாமிகள் கட்டளை இட்டவாறு, அவரது சீடர்கள் குருபூஜையை நடத்தி வந்தனர்.

மகா தேஜோ மண்டலம் என்னும் ஒரு திருச்சபையை அமைத்து, அண்ட சராசரம் அனைத்தையும் தம்முடைய அரும்பெரும் ஒளி வட்டத்துக்குள் கொண்டிருக்கும் குமாரக் கடவுள் ஒருவனையே வழிபடுபவர்கள் அனைவரும் இந்தச் சபைக்குரியோர் என்று அறிவித்தார். இந்த மண்டலம், சாதிமத பேதம், காலதேசம் ஆகிய அனைத்தையும் கடந்த திருச்சபையாகும்.

### 11. ஷண்முக கவச பாராயணத்தால் சீரான சுவாமிகளின் கால் முறிவு

1923இல் சென்னை மாநகர் தம்பு செட்டித் தெருவில் நடந்து கொண்டிருந்தபோது, குதிரை வண்டிச் சக்கரம் சுவாமிகளின் கணைக்காலில் ஏறிக் கால்முறிவு ஏற்பட்டது. சுவாமிகள் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார். சுமார் 73 வயதுடைய சுவாமிகளின் கால் குணமாகுமா என்னும் கேள்விக்குறியுடனேயே மருத்துவம் செய்தார்கள்.

இதை அறிந்த அன்பர்கள் மூவர் தத்தம் இல்லங்களிலே ஷண்முக கவச பாராயணம் செய்தார்கள். அவர்களுள், நெடுநேரமாக பாராயணம் செய்த திருவல்லிக்கேணி சுப்பிரமணிய தாசர் என்னும் சின்னசாமிப்பிள்ளை சோதிடர் கண் முன்பு சுவாமிகளின் நொந்த கால் தோன்றிற்று. எலும்பு முறிந்த இடத்தில் இறைவனுடைய இரண்டு வேல்களின் இலைபோன்ற பாகங்கள் ஒன்றுமாறு பூட்டப்பட்டும், அவற்றை வேறொரு வேல் தாங்கி நிற்பது போலவும் காட்சி தோன்றியது; அடியார் அதைக் கண்டு தொழுதார். எலும்பு கூடி குணமாகும் வரைக்கும் அவ்வண்ணமே கண்டு வந்தார்; கவச பாராயணத்தையும் விடாமல் உள்ளமுருக மேற்கொண்டு வந்தார்.

பதினோராம் நாள் இரவு இரண்டு மயில்கள் சுவாமிகளின் முன் தோன்றி நடனமாடிச் சென்றன. பின்னொரு நாள் இரவு தம் அருகில் ஒரு குழந்தை படுத்திருப்பதைக் கண்டார்; கணப்பொழுதில் அது மறைந்துவிட்டது.

'பதினைந்து நாள்களில் குணமாகி விடும்; அதுவரை எங்கும் செல்ல வேண்டாம்' என ஒரு திருவாக்கு கேட்டது. அதன்படி பதினைந்து நாள்களுக்குப் பின் பூரண குணம் அடைந்தார் சுவாமிகள்.



சுவாமிகளுக்கு முன் மயில்கள் தோன்றி ஆடிய காட்சி இன்றும் 'மயூர வாகன சேவை விழா' என்று கொண்டாடப்படுகிறது.

### 13. *சமாதி அடைதல்*

1929 இல், குறிப்பாக விபவ ஆண்டு வைகாசித் திங்கள் 2ஆம் நாள், சுவாமிகள் தம் சீடர் சின்னசாமிப்பிள்ளையை அழைத்து, 'இறைவன் திருவுளக் குறிப்பு ஒருவாறாகக் காணப்படுகிறது. திருவான்மியூரில் நிலம் பார்' என்று கூறி விபூதியைக் கொடுத்து, அதை அணிந்துகொண்டு விரைவில் சொன்ன வேலையை முடிக்குமாறு சொன்னார். மேலும், 'மயூர சேவை விழாவை' ஒவ்வொரு வைகாசி 15ஆம் நாளும் இரவு 2.00 மணிக்குத் தொடர்ந்து நடத்துமாறும் கூறினார்; இது டாக்டர் ம. இராமகிருஷ்ணன், இந்திய சித்தர் பரம்பரையில் பதினாறு பேர் எனும் தம் நூலில் சுவாமிகள் பற்றிய கட்டுரையில் குறிப்பிட்டுள்ள செய்தியாகும்.

30.5.1929 அன்று காலை 7.15 மணிக்கு அனைவரும் அறியச் சுவாசத்தை உள்ளிழுத்து உந்தியில் நிறுத்தினார்; மூச்சு அப்படியே அடங்கியது. 31.5.1929 அன்று, சுவமிகள் ஏற்கனவே திருவான்மியூரில் ஏற்படுத்தியிருந்த மகா தேஜோ மண்டலத்துப் புனித பூமியிலே, சுவாமிகள் சமாதி நிலையத்தில் அமர்ந்தருளினார்கள். சுவாமிகள் சமாதி நிலையத்தில் அமர்ந்த நேரம், வெள்ளிக்கிழமை காலை 8.15 மணியாகும்.

### 14. *சுவாமிகளின் வாழ்க்கை உணர்த்தும் உண்மைகள்*

ஏறத்தாழ எண்பது ஆண்டுகள் தமிழ் நாட்டில் வாழ்ந்து மறைந்த ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள், அக்காலச் சூழலுக்கும் அவருக்குப் பின் வரும் சூழலுக்கும் ஏற்ப மக்களுக்கு உண்மையை உணர்த்தும் வகையிலும், உண்மைநெறியைக் காட்டும் வகையிலும் வாழ்ந்தார் - பேசினார் - பாடினார். சுவாமிகள் அவ்வாறு செய்தார் என்று சொல்வதைவிட, சிவபெருமானாகிய முருகப்பெருமான் அவரை வாழ வைத்தார் - பேச வைத்தார் - பாட வைத்தார் என்று சொல்வதே சரி.

பாம்பனில் பிறந்து வளர்ந்ததால் ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் என்றும், குமரகுருவாம் முருகப்பெருமான் நாமத்தையே அன்புடன் உச்சரித்துக் கொண்டிருந்ததால் ஸ்ரீ குமரகுரு தாசர் என்றும் அழைக்கப்பட்ட சுவாமிகள், இம்மண்ணுலகத்தில் வந்து பிறந்து வாழ்ந்தது இறைவன் திருவுளமே என்றுதான் கூற வேண்டும். சுவாமிகள் மூலமாகச் சில நோக்கங்களை நிறைவேற்றவே, இறைவன் அவரை இப்பூவுலகில் பிறக்கச் செய்தான் என்று சொன்னால், அதில் தவறு இருக்க முடியாது.

### 14.1. *சிவனும் உமையும் கணபதியும் குமரனும் ஒரே பரம்பொருளின் வெளிப்பாடே*

முதலாவதாக சிவன், உமை, விநாயகர், முருகன் ஆகிய அனைவரும் ஒருவரே என்னும் உண்மையைத் தெளிவாகவும் அழுத்தமாகவும் வலியுறுத்திக் கூறினார். அனவரதபாராயண அஷ்டகம் என்னும் ஒரு சிறு நூலின் முதல் இரண்டு பாடல்களைப் பார்த்தால், இந்த உண்மை குன்றின் மேல் இட்ட விளக்காய்ப் புலப்படும்:

> மன்றெனும் பதியுறை மழ,இப முகவனும்
> நன்றெனும் பிரணவ அவனிளை ஞனும்,மறை
> தொன்றெனும் பொருளெனச் சுடர்சிவ னும்,உமையும்
> ஒன்றெனும் பெரியவர் உயர்பதம் பணிவேன்

இப்பாடலுக்குக் கொடுக்கப்படிருக்கும் பொருளை இங்குக் காண்பது நன்று. அப்பொருள்: "ஞானத் திருமன்று எனப்படும் பொன்னம்பலத்தில் எழுந்தருளித் திகழும் இளமை நலம் பொருந்திய யானை முகத்தை உடைய விநாயகப் பெருமானும்; எப்போதும் மங்கள நாதமாக உள்ள பிரணவத்தின் வடிவாக உள்ள விநாயகப் பெருமானின் இளவலான குகப்பெருமானும்;

வேதாகமங்களில் புகழ்ந்து கூறப்படுகின்ற 'முன்னைப் பழம் பொருளுக்கும் பழம்பொருளாகத் திகழும் சிவபெருமானும்; அவ்வாறே சிவத்தோடு ஒத்துப் பழம்பொருளாக விளங்கும் உமையும் (ஆகிய இந்நாற்பெரும் தெய்வமும்) உண்மையில் ஒரே பரம்பொருளே; வேறுபட்ட தெய்வங்கள் அல்ல என உணரும் ஞானப் பெரியோர்களின் உயர்ந்த பெருநிலையில் விளங்கும் திருவடிகளை நான் வணங்குவேன்".

இந்த நூலின் இரண்டாவது பாடல்:

> அள்ளுலை யாப்படை யறுமுக வனும்,மனம்
> துள்ளுலை(வு) ஓட்டு,தண் சுடரணி பரமனும்
> வள்ளுலை யாக்,கிரி மகளும், ஐங் கரனும்,என்
> உள்ளுலை யாப்,பொரு ளொன்றெனத் தொழுதேன்

'அறுமுகப் பெருமானும், சிவபெருமானும், உமையும், கணபதியும் என் உள்ளத்தில் எப்பொழுதும் அணையாமல் ஒளிவீசிக் கொண்டிருக்கும் ஒரே பரம்பொருளே எனக் கருதி வணங்குகிறேன்' என்று கூறுகிறார் இப்பாடலில். (அள் உலையா=கூர்மை சிறிதும் குறையாத; துள்ளு உலைவு=துள்ளி அலைபாய்வதையும் வருத்தம் அடைவதையும்; தண்சுடர்=குளிர் நிலவு; வள் உலையா=அழகு அல்லது அருள்வளம் குறையாத; உள்ளுலையா=உள்ளத்துள் எப்போதும் அணையாமல் ஒளிவீசிக் கொண்டிருக்கும்).

அரிய பெரிய உண்மையை வலியுற்றுத்தும் இப்பாடலின் பெயர் கவனித்தற்குரியது. அனவரத பாராயணம் என்றால் 'ஒவ்வொரு நாளும் ஓதுதல்' என்று பொருள். பாடலை ஒவ்வொரு நாளும் ஓதும்போது, அது உணர்த்தும் உண்மையையும் கூடவே நினைக்க வேண்டும் அல்லவா! இந்துப் பெருமக்கள் 'சிவன் வேறு; முருகன் வேறு' 'சக்தி வேறு; சிவம் வேறு' என்றெல்லாம் என்றுமே குழம்பிவிடக் கூடாது என்னும் சுவாமிகளின் உயரிய நோக்கம் இந்தப் பாடலின் தலைப்பு வழி வெளிப்படுகிறது.

### 14.2. இஷ்ட தெய்வ வழிபாட்டுக்கு வழிகாட்டிய சுவாமிகள்

நம் சமயத்தின் அடிநாதமாய் விளங்கும் இப்பேருண்மையை வலியுறுத்திய சுவாமிகள், ஒரு தெய்வ மூர்த்தத்தை இஷ்ட தெய்வமாகக் கொண்டு முனைப்பான பக்தியோடு செய்யப்படும் வழிபாடே முத்திக்கு வழிவகுக்கும் எனும் உண்மையை நன்கு உணர்ந்திருந்தார்.

குமரப் பெருமானைத் தம் இஷ்ட தெய்வமாகக் கொண்டிருந்த சுவாமிகள், எந்தத் தெய்வ வடிவைக் கண்டாலும், அதில் முருகனை எண்ணியே வணங்குவார். அதற்கேற்ப அவர் பாடல்களில் 'சிவசுப்பிரமணியன்', 'அறுமுகச் சிவன்', என ஷண்முக கவசம் 3ஆம், 28ஆம் பாடல்களிலும், 'சிவசரவணன்' என திருத்தொடையல் முதல் செய்யுளிலும் குமரனைக் குறிப்பிட்டுள்ளார். இதைப் போல் இன்னும் பல பாடல்களில் காணலாம்; 'குமார பரமேஸ்வரன்' என்று முருகனை அவர் குறிப்பிட்டுள்ளது நயமிக்கதாக உள்ளது. முருகப் பெருமானுக்கு உரிய பல மூர்த்தங்களில் சுவாமிகளை ஆட்கொண்டதாக விளங்குவது பழனியாண்டவரின் திருமூர்த்தமே.

திருமாலை வணங்கவும் சுவாமிகள் தயங்கியதில்லை. 1893இல் திருவனந்தபுரத்துக்குச் சென்று யாப்பிலக்கணத்தை மூன்றே வாரங்களில் கற்றுத் தேர்ந்தார். திருவனந்தபுரத்தில் சயனித்திருக்கும் அனந்த பத்மநாபனைக் குமாரக் கடவுளின் மாமனாகத் தரிசித்தார். அப்போது அவர் பின்வருமாறு பாடினார்:

> சீராரு நல்வி சய,ஆண்டு கன்னியந் திங்கள்,மதி
> ஏராரு முற்பக்க ஏகாதசியில் எழில்வளஞ் சேர்
> ஊராம் அனந்த சயனத்தில் என்னிறை யோன்,கடப்பந்
> தாரான் அம்மானது பள்ளிகண்டேன் நல்தருக்குறவே



(கன்னித் திங்கள்=புரட்டாசி மாதம்; ஏராரு முற்பக்க ஏகாதசி=நன்மைமிக்க வளர்பிறை பக்க ஏகாதசி திதி; அனந்த சயனம்=அனந்தன் என்னும் பாம்பின் மீது படுத்திருத்தல்; கடப்பந் தாரான்=கடப்ப மாலையை அணிந்தவன் / முருகன்; அம்மான்=மாமன்; நல்தருக்குறுதல்=நன்மகிழ்ச்சி அடைதல்).

'சீராரு நல்....' எனும் மேற்கண்ட பாடலில், திருமாலை குமரக்கடவுளின் மாமனாகத் தரிசித்து மனமகிழ்ந்ததாகக் குறிப்பிடுள்ளார் பாம்பன் சுவாமிகள்.

### 14.3. "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்பது உண்மையென்று உணர்த்தினார்

இன்றைய காலகட்டத்தில், நோய் தீராமல் இடர்ப்படும் நிலையிலும் தாங்கொணா துயரங்களினால் தவிக்கும் நிலையிலும், 'உடனடித் தீர்வு தரப்படும்' என்று கேள்விப்பட்டவுடன், சம்பந்தப்பட்ட இடத்தைத் தேடி ஓடுவது என்பது நாம் திரும்பும் திக்கெல்லாம் காணக்கூடிய காட்சியாக உள்ளது. இப்படிப்பட்ட முயற்சிகள் சில சமயத்தில் நன்மை பயக்கக்கூடும் என்றாலும் பெரும்பாலும் நமக்குப் பாதகமாகவே ஆகிவிடுவதையும் கண்டுதான் வருகிறோம்.

சுவாமிகள் எந்தப் பிரச்சினை வந்தாலும், குமரப் பெருமானையே நாடுவார்; மனமுருகிப் பாடுவார்; குமரனிடமே சரண் புகுவார். சுவாமிகளின் அசைக்க முடியாத நம்பிக்கைக்கு ஏற்ப, முருகனும் தானே முன்நின்றோ மற்றவர்களைக் கொண்டோ சுவாமிகளின் பிரச்சினையை உடனே தீர்த்து வைத்தான். ஷண்முக கவசத்தின் பயனை மேலே பார்த்தோம். சுவாமிகளுக்கோ அவர் குடும்பத்தினருக்கோ நோய் வந்தால், முருகன் மாற்றுருவில் வந்து அதைத் தீர்த்து வைத்தான். சுவாமிகளுக்குக் காலில் முள் தைத்தபோது, முருகன் ஒரு தச்சரின் கனவில் தோன்றி தன் அடியாராகிய இளைஞனுக்குப் பாதக் குறடு செய்துகொடுக்கச் சொல்லி மறைந்தான். சுவாமிகள் எதிர்நோக்கிய வழக்குகளில் எல்லாம் முருகன் அருளால் சுவாமிகளே வெற்றி பெற்றார்.

சுவாமிகள் உடலளவில் உலகத்தில் வாழ்ந்து செயல்பட்டுக் கொண்டிருந்தாலும், அவரது உயிர் முருகனின் திருவடிகளில் முழுமையாகச் சரணடைந்த நிலையில், முருக நாமத்தை உச்சரித்த வண்ணமாக, முருகன் நினைவிலேயே வாழ்ந்தார். 'கடவுளை நம்பினோர் கைவிடப்படுவதில்லை' என்பதற்கிணங்க, முருகப் பெருமான் சுவாமிகளை நிழல் போல் தொடர்ந்து அருள் புரிந்தான். தம்மை ஒருபோதும் கைவிடாத இறையருள், தம் அடியார்களையும் நிச்சயமாகக் கைவிடாது என்பது சுவாமிகளின் அசைக்க முடியாத நம்பிக்கையாகும்.

### 14.4. பாட்டின் பொருளுணர்ந்து மனமுருகிப் பாடினால் துன்பமனைத்தும் தீரும்

சுவாமிகள் சமாதி அடைந்து 83 ஆண்டுகள் ஆகின்றன. அவர் வாழ்க்கை வரலாறு பற்றி அறிந்தவர்கள் அதிகம் இல்லை; ஒவ்வொரு துன்பத்திலிருந்தும் இறையருளோடு விடுபட அவர் விட்டுச் சென்ற தெய்விகப் பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு நாளும் ஷண்முக கவசத்தை ஆறு தடவை மன ஒருமைப்பாட்டுடன், பயபக்தியுடன், முழுமையாக ஓதி வந்தால் எல்லாவித இடர்ப்பாடுகளும் நீங்கும் என்று மேலே கண்டோம். பகை கடிதல் என்னும் தலைப்பிலேயே பத்து செய்யுள்களைக் கொண்ட பாடல் உண்டு. முருகனைக் கூட்டி வருமாறு மயிலை வேண்டுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. இதில் உள்ள பத்தாவது பாடல் வருமாறு:

> கருணைபெய் கனமுகிலே, கடமுனி பணிமுதலே
> அருணையன் அரன்,எனவே, அகம்நினை எனதுளதிரே
> மருமலர் அணிபலவே, மருவிடும் களமயிலே
> குருபல அவிர்மயிலே, கொணர்தியுன் இறைவனையே

(கனமுகில்=நீர்த்துளி நிரம்பிக் கனமாக இருக்கும் மேகம்; கடமுனி=அகத்தியர்; அருணையன்=அருணகிரிநாதர்; அகம்நினை= மனத்தில் நினைத்தவாறு இருக்கும்; மரு=நறுமணம்; களம்=கழுத்து; குரு=பெருமை; அவிர்=ஒளிவீசும்).

பலவிதத் துன்பங்களும் அச்சுறுத்தல்களும் நிறைந்த இக்காலத்தில் துன்பமிலா நல்வாழ்வு வாழ்வதற்கு வழிகாட்டுபவை சுவாமிகளின் வாழ்க்கையும் அவரது நூல்களும்.

## 15. சுவாமிகளின் நூல்கள் பற்றி ஒரு கண்ணோட்டம்

நம்மைப் போல் இல்லற வாழ்க்கையில் வாழ்ந்தாலும், இறைச் சிந்தனையிலேயே தம் மனத்தைப் பதித்து வாழ்ந்து, அதன்வழி இறையருளுக்கு முழுமையாகப் பாத்திரமாகும் பேறு பெற்ற சுவாமிகளின் வாழ்க்கை நமக்கெல்லாம் நல்லுதாரணம். அவர் வழியில் நாம் வாழ்வதற்கு உதவும் வண்ணம் அவர் விட்டுச்சென்ற பாடல்களின் எண்ணிக்கை 6666 என்று கூறப்படுகிறது. பாடல்கள் ஆறு மண்டலங்களாக (காண்டங்களாக) வகுக்கப்பட்டுள்ளன.

எல்லா நூல்களின் பெயரையும் இங்குக் குறிப்பிடுவது கடினம். ஒரு சில நூல்களின் பெயரைக் காண்போம். பெரும்பாலும் எல்லா வகைப் பாக்களும் எல்லா வகைச் சந்தங்களும் சுவாமிகளின் பாடல்களில் இடம்பெற்றுள்ளன. சஸ்திர பந்தம், மயூர பந்தம், எனச் சித்திரக் கவிதைகளையும் படைத்துள்ளார். 'சஸ்திரம்' என்பதற்கு 'கைவிடாப் படை' எனும் பொருள் காணப்படுகிறது; இங்கு அது கந்தனின் கையிலிருக்கும் வேலைக் குறிக்கிறது.

இன்று நம் மக்களிடம் அதிகமாக அறிமுகமாகி உள்ள ஷண்முக கவசத்தை இக்கட்டுரையின் பல இடங்களில் கண்டு வந்துள்ளோம். கவசத்தின் இறுதிப் பாடலில், வழக்கம் போல் தன் குருவையும் முருகனையும் குறிப்பிட்டுள்ளார். இந்த இருவரையும் குறிப்பிட்டுள்ள முறை தனிச் சிறப்பு கொண்டுள்ளது. அருணகிரி நாதர் இறையனுவபத்தை முற்றாகப் பெற்ற மெய்யுணர்வு நிலையில் பாடப்பட்டது கந்தரனுபூதி என்பது ஆன்றோர் கூறும் அருணகிரியாரின் வரலாறு. நம் சுவாமிகளுக்கு முதன்முதலில் சேது மாதவ குருக்கள் செய்த ஞானோபதேசம் 'ஆறெழுத்து மந்திர' உபதேசம். இந்த இரண்டு நிகழ்வுகளும் ஞானநிலையை ஒட்டிய நிகழ்வுகள். தனிமையில் கூட்டந்தன்னில் சரவணபவனார் காக்க; நனியனு பூதிசொன்ன நாதர்கோன் காக்க என்பவை கடைசிப் பத்தியில் காணப்படும் அந்த இரண்டு அடிகள்.

பரிபூஜன பஞ்சாமிர்த வண்ணம் பற்றி ஏற்கனவே கண்டுள்ளோம். ஐந்து வெவ்வேறு சந்தங்களைக் கொண்ட பாடல்களை ஐந்து பிரிவுகளாகக் கொண்டு பாடியதால் இது இப்பெயர் பெற்றது. பொருளுணர்ந்து பாடுவதோடு, சந்தமிகு இப்பாடலை இசை கெடாமல் சிறப்பாகப் பாடுவது அவசியம் எனப்படுகிறது.

இந்த இரண்டு நூல்களைத் தவிர, இக்கட்டுரையில் ஏற்கனவே வேறு சில நூல்களும் குறிப்பிடப்பட்டு விட்டன . பிழை பொறுக்க முறையீடு, தகராலய ரகசியம், பரிபூரணானந்தம், கந்தரொலியல் அந்தாதி, குகப்பிரம அருட்பத்து, காசி யாத்திரை, அனவரத பாராயண அஷ்டகம், பகை கடிதல், ஸ்ரீமத் குமாரசுவாமியம் ஆகியவை அந்த நூல்களாகும். ஸ்ரீமத் குமாரசுவாமியம் முருகனின் பெருமைகளோடு தத்துவ உண்மைகளையும் விரிவாக எடுத்தோதும் சிறப்பினது என்பது அறிஞர் கூற்று.

இவற்றைத் தவிர, குறிப்பிடத்தக்க சில நூல்களில், சேந்தன் செந்தமிழ் என்பது ஒன்றாகும். சுவாமிகளுக்கு இருந்த தமிழ்ப் பற்றை உணர்த்தும் வகையில், இந்நூலில் உள்ள ஐம்பது பாடல்களும் வடமொழி அறவே இல்லாது தமிழிலேயே பாடப்பட்டுள்ளன. அட்டாட்ட விக்கிர லீலை என்பது இன்னொரு நூல். உயிர்களின்பால் வைத்த கருணையினால், சிவபெருமான் புரிந்தருளிய திருவிளையாடல் அறுபத்து நான்கு; அந்தத் திருவிளையாடல்களைப் புரிவதற்கு ஏற்ப, சிவமூர்த்தி அறுபத்து நான்கு விதத் திருமேனிகளைத் தாங்கி வந்தார். அந்த 64 திருவடிவங்களுக்குரிய நாமங்களைப் பட்டியலிட்டுப் பாடுகிறார் சுவாமிகள். முருகன் அறுமுகச் சிவனே யாதலால், இந்த நாமங்களை முருகன்மீது சாத்திப் பாடியுள்ளார். இதனை உள்ளுருக்கத்தோடு பாடுபவர்க்கு ரோக நாசம், பாப நாசம், சத்துரு நாசம், ஆயுள் விருத்தி, தைரிய விருத்தி, வீரிய விருத்தி, புத்திர விருத்தி ஆகியவை உண்டாவதோடு சர்வார்த்த சித்தியும் முத்தியும் வாய்க்கும் என்று கூறப்படுகிறது.



வேற்குழவி வேட்கை என்னும் பாடலைக் காலையும் மாலையும் வணங்கி, பக்தி சிறக்கப் பாடி வந்தால், புத்திர தோஷம் நீங்கிச் சந்ததி விருத்தி உண்டாகும் என்பது அறிந்தோர் கூற்று. முருகன் ஆகிய குழந்தையை அள்ளியணைக்க ஆவல் கொள்ளும் தாய்ப்பாசம் இந்தப் பாடலில் தோன்றிச் சுவையூட்டுகிறது. முதல் பாடல் வருமாறு:

பதினே ழொன்றும்,விழை செய்ய பாதம் ஓலிட,நன்
மதிபோல் மாமைமுக மண்ட லம்,ப குக்க,நகுங்
கதியே, வேற்குழவீ நின்னைக் காதலால் தழுவ
நிதியே வாராயோ கைகள் நீளு கின்றனவே

(பதினேழ் ஒன்று=பதினெட்டு [18 கணங்கள்]; விழை=விரும்பித் தொழுகின்ற; செய்ய பாதம் ஓலிட=சிவந்த திருவடிகள் ஒலிக்க; மாமை முக மண்டலம்=அழகிய முக வட்டம்; பகுக்க நகும் கதியே=ஈதலால் ஒளிவிடும் புகலிடமே)

சென்னை வைத்தியநாத முதலியார் தெருவிலுள்ள வீட்டின் மேன்மாடத்தில் தங்கியிருந்தபோது, ஏழு மாதங்கள் தனித்திருந்து முத்திப் பேறு விரும்பி, நிட்டை சாதித்து வரும்போது, குமரவேள் பதிற்றுப்பத்தாந்தாதி பாடினார் என்றும், நிட்டைக் காலத்தில் ஏற்பட்ட அனுபவங்களும் இதன்கண் காணப்படுகின்றன என்றும் அறிய முடிகிறது. இந்நூலில் காணப்படும் 40ஆம், 42ஆம் பாடல்களில் நிட்டையிலிருக்கும் மனத்தை ஒரே நிலையில் வைத்திருப்பது கடினமே என்னும் உண்மை வெளிப்படுவதைக் காணலாம்:

போந்துயர் தனக்கும் அஞ்சுகின் றேன்,இப்
புலாலுடல் நோய்க்கும்,அஞ் சினன்,மேல்
ஆந்துயர் தனக்கும் அஞ்சுகின் றேன்,இவ்
வருந்துய ராம்,பெருங் கடலை
நீந்(து)உயர் பதியின் நிட்டையில் நீதான்
நிறுத்தின்,உய் வேன்,சுடர் கிளர்வேல்
ஏந்(து)உயர் பரம குருமணி யே,என்
இதயபங் கயம்,வள ரொளியே

உழலும் மனம்,நன்(கு) ஓய்ந்திடுமா(று)
உன(து)ஒண் பாத அருளை,நினைந்(து)
அழலும் உறுமோ, திருவடிப்பே(று)
அணித்தோ சேய்த்தோ என,ஏங்கி
விழலும் உறுமோ இனியென்றே,
விம்மிச் சாம்பென் புந்தியுறு
தழலும் மடமும் ஒழிய,அருள்
தந்தால் வாழ்வேன் சடக்கரனே

(அணித்தோ சேய்த்தோ=அருகில் உள்ளதோ தூரத்தில் உள்ளதோ; சாம்பென்=சாம்பு என்=வாடும் என்னுடைய; புந்தி=மனம்; தழலும் மடமும்=நெருப்பு போன்ற வேதனையும் அறியாமையும்; சடக்கரம்=ஆறெழுத்து)

இறையருள் பெற்ற சுவாமிகள், இடையீடில்லாமல் தம் மனம் நிட்டை கூடி நிற்க வேண்டும் என்று கந்தப் பெருமானிடம் கேட்கிறார் என்றால், அவர் பணிவையும் உருக்கத்தையும் என்னென்பது!

சிவஞான தீபம் என்னும் நூல், சித்தாந்தம் பற்றிய பல ஐயப்பாடுகளைத் தெளிவிக்கும் சிறப்பு கொண்டதாகக் கூறப்படுகிறது. செவியறிவுறூஉ முற்றிலும் உரைநடையில் அமைந்தது; மூன்று தொகுதிகளைக் கொண்டது.

சுவாமிகளின் பாடல்கள், குமரகுருதாச சுவாமிகள் பாடல்கள், திருவலங்கல் திரட்டு, சிறுநூற்றிரட்டு, திருத்தல தரிசன காலங்களில் பாடிய பாடல்கள், பத்துப் பிரபந்தம் போன்ற நூல்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன.

**16. தன் மெய்யன்பர்களுக்கு அருள்புரிதல், என்றென்றும் உள்ள ஆண்டவன் இயல்பு**

அத்தியாச்சிரம சுத்தாத்துவைத வைதிக சைவ சித்தாந்த ஞானபானு பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் அவர்களின் வாழ்க்கை வரலாற்றை மேலோட்டமாகக் காணும்பொழுதே, கி.பி. 7ஆம், 8ஆம், 9ஆம் நூற்றாண்டுகளில் சீரிய சைவப்பணி ஆற்றிச் சிவனடி சேர்ந்த சிவனடியார்களின் வாழ்க்கை அவ்வப்போது நம் மனக்கண்ணில் நிழலாடுகிறது.

சம்பந்தப் பெருமானின் தேவையை உணர்ந்து, பொற்றாளம், முத்துப்பந்தர், சிவிகை (பல்லக்கு) ஆகியவற்றை அவ்வப்போது அனுப்பி வைத்தார் சிவபெருமான். பாம்பன் சுவாமிகள் காலில் முள் தைத்தபோது, அவர் கேட்காமலே, அவருக்குப் பாதக் குறடு செய்து கொடுக்குமாறு ஒரு தச்சனின் கனவில் கட்டளையிட்டார் அறுமுகச் சிவபெருமான்.

அப்பர் பெருமான் இறைவனை உருகிப் பாடி, திருநீறு பூசிச் சூலைநோயிலிருந்து விடுபட்டார். பாம்பன் சுவாமிகள் வயிற்றுப்போக்கால் மயங்கி விழ, அவர் மனைவியாரும் மயங்கி வீழ்ந்தார். முருகன் மாற்றுருவில் அவர்கள் வீட்டிற்கு வந்து, ஒரு தடியால் மனைவியைத் தட்டி எழுப்பி, சுவாமிகளின் உடலில் திருநீற்றைப் பூசுமாறு சொல்லிச் சுவாமிகளின் நோயைத் தீர்த்தார். சம்பந்தர் திருநீற்றுப் பதிகம் பாடி, திருநீற்றால் பாண்டிய மன்னனின் வெப்புநோயைத் தீர்த்ததும் இங்கு நினைவுகூரத் தக்கது.

சிவனடியார் காலத்தில் மட்டும்தான், அடியார் வேண்டுதலுக்கு இறைவன் செவிசாய்த்து அருள்புரிந்தான் என்னும் சொல்லுக்கு இடமில்லாமல், சுவாமிகளின் வாழ்க்கையில் சிவசுப்பிரமணியர், சுவாமிகள் நினைக்கும் முன்பே விரைந்து வந்து உதவினார்; சுவாமிகள் நினைத்த வண்ணமெல்லாம் அருள் புரிந்தார்.

பக்தி இயக்கக் காலத்தில் சிவனடியாருக்குச் சிவமூர்த்தமாக அருள் புரிந்த இறைவன், 'கலியுகத்துக் கண்கண்ட தெய்வம் கந்தப் பெருமான்' என்பதற்கேற்ப, பாம்பன் சுவாமிகளுக்கு சிவசரவணபவ மூர்த்தமாக நின்று அருள் புரிந்தான். 'யாதொரு தெய்வம் கொண்டீர், அத்தெய்வமாகி ஆங்கே மாதொருபாகனார்தாம் வருவர்' என்னும் சிவஞான சித்தியார் கூற்றுக்கொப்ப, சிவமூர்த்தம், சக்தி மூர்த்தம், கணபதி மூர்த்தம், கந்த மூர்த்தம் என எந்தத் திருவுருவத்தை நம் இஷ்ட தெய்வமாகக் கொண்டு வழிபட்டாலும், அங்கெல்லாம் நின்று அருள்புரிபவன் சிவனே என்பதை நினைவூட்டி வலியுறுத்தும் உயரிய நோக்கம் உடையது சுவாமிகளின் வாழ்க்கை.

**17. மரணமிலாப் பெருவாழ்வு பெற்றவர்கள் இறையருள் பெற்ற அருளாளர்கள்**

இறையருள் பெற்ற ஞானிகள் இவ்வுலகை விட்டு நீங்கினாலும் அவர் பெற்ற அருளாற்றல் இவ்வுலகில் நின்று நிலவி நமக்கெல்லாம் உதவும் என்று கேள்விப்பட்டுள்ளோம். இந்தக் கருத்தையும் உண்மை என்று உணர்த்துகிறது சுவாமிகள் இம்மண்ணுலகை நீத்த பின்பு நடைபெற்ற ஒரு நிகழ்ச்சி.

1929இல் சமாதியடையப்போகும் தருணத்தில் ஜோதிட சிகாமணி சுப்பிரமணியத்திடம், 'வழக்கப்படி எனது உடலை மேற்குமுகமாக வைக்க வேண்டாம்; கிழக்கே பார்த்தபடிதான் என் உடல் இருக்க வேண்டும்' என்று கூறியிருந்தார். ஆனால், சுவாமிகளின் திவ்ய உடலை மேற்குமுகமாகச் சமாதியில் வைத்து விட்டனர். 'செத்தும் சுவாமிக்குச் சக்தி உண்டா?' என அறியத் துடித்தது ஜோதிடரின் மனம்; சமாதியைத் திறந்தார். கொட்டிய உப்பு, விபூதி, கற்பூரம் மலர் எல்லாம் அப்படியே குவிந்திருக்க, சுவாமிகளின் திருமேனி கிழக்கு நோக்கித் திரும்பியிருந்தது. சலன புத்தி ஏற்பட்ட ஜோதிடர் அதற்கான தண்டனையைப் பெற்றார்.



தமிழ் நாட்டில் மூன்று இடங்களில் சுவாமிகளின் தேஜோ மயானந்தத் திருவருள் பூரணத்துவம் பெற்று விளங்குவதாகக் கூறப்படுகிறது. சுவாமிகள் முருகனைக் கண்ட பிரப்பன் வலசை, முதல் படைவீடான திருப்பரங்குன்றம், திருவான்மியூர் (பாம்பன்சுவாமி நகர்) ஆகியவையே அந்த மூன்று திவ்ய இடங்கள்.

## 18. அருளாளர்கள் காட்டிய வழியில் வாழ்ந்து குருவருளும் திருவருளும் பெறுவோம்

இறைவன் காலத்துக்குக் காலம் தம் அடியவரை நம்மிடையே அனுப்பி, இந்து சமயத்தின் நிலையான அடிப்படைக் கொள்கைகளை அவர்களின் திருவாக்கு வழியாகவும் வாழ்க்கைநெறி வழியாகவும் நினைவூட்டியும் தெளிவுபடுத்தியும் பேருதவி புரிந்து வருகிறான். அத்தகைய பெரும்பேற்றைக் கொண்டுள்ள நாம் இறைவனின் செய்தியை நன்குணர்ந்து, உண்மையான சமய வாழ்வு வாழ்வதே அவனுக்குச் செய்யும் நன்றிக் கடனாகும். இந்து சமய, குறிப்பாக சைவ சமயக் கொள்கைகளைத் தெளிவாக உணர்ந்து, எல்லா வகையிலும் சிறந்த இந்துக்களாக - சைவர்களாக வாழ்வதே பாம்பன் சுவாமிகள் முதலிய குருமார்களுக்கு நாம் செலுத்தும் வழிபாடு ஆகும்.

பொதியமலை மேவு குறுமுனிவன்,நின்று புதியமணம் வீசு முருகுபுனை தொண்டன்,
யதிகள் புகழ் துங்க அருணகிரி, சங்கம் எறிகடல் மருங்கு சமரபுரி அன்பன்
துதிசெய உகந்த சிரகிரியன் என்று சொலுமுனிகள் ஒன்று திரளுருவின் வந்து
குதிகொள் கலைமங்கை மகிழ்புலமை விஞ்சு குமரகுருதாச குருவை நினை வோமே
(கவியரசு கு. நடேச கவுண்டர்)

'அகத்தியர், நக்கீரர், அருணகிரிநாதர், திருப்போரூர் சிதம்பர சுவாமிகள், தாயுமான அடிகளார் ஆகிய ஐவரும் கூடி ஒரு வடிவம் கொண்டது போல் உள்ளவரும், கலைமகள் போற்றும் புலமை உடையவருமான பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகளைச் சிந்திப்போமாக' எனக் கூறுகிறது இப்பாடல்.

திருவளர் சுடர் உருவே, சிவைகரம் அமர் உருவே,
அருமறை புகழ் உருவே, அறவர்கள் தொழும் உருவே,
இருள்தபும் ஒளி உருவே, எனநினை எனது எதிரே
குருகுகள் முதல்மயிலே, கொணர்தி உன் இறைவனையே
(சுவாமிகளின் பகை கடிதல்:1)



# மொழிக்குத் துணை

**பேராசிரியர் டாக்டர் சுப. திண்ணப்பன்**
(சிங்கப்பூர் தேசிய பல்கலைக் கழகம், சிம் பல்கலைக் கழகம், சிங்கப்பூர்)

*விழிக்குத் துணை திருமென் மலர்ப் பாதங்கள், மெய்ம்மை குன்றா*
*மொழிக்குத் துணை முருகா எனும் நாமங்கள், முன்பு செய்த*
*பழிக்குத் துணை அவன் பன்னிரு தோளும் பயந்த தனி*
*வழிக்குத் துணை வடிவேலும் செங்கோடன் மயூரமுமே (71)*

என்னும் அருணகிரிநாதரின் கந்தலங்காரப் பாடலில் இடம்பெறும் **மொழிக்குத் துணைமுருகா எனும் நாமங்கள்** என்பது பற்றிச் சிறிது விளக்குவதே இந்தக் கட்டுரையின் நோக்கமாகும்.

மொழி என்றால் என்ன? மொழி என்பது கருத்துப் பரிமாற்றத்துக்கு உதவும் ஒரு கருவியே ஆகும். கருத்துப் பரிமாற்றம் என்பது ஒலி வடிவத்தாலும் வரி வடிவத்தாலும் நிகழ்கிறது. மனிதனுக்கு மட்டுமே மாபெரும் உடைமையாகத் திகழ்வது மொழியே மனிதனையும் மற்ற உயிரினத்தையும் வேறுபடுத்திக் காட்டுவதும் மொழியே. மொழி இல்லாவிட்டால் மனித நாகரீகமே இல்லை. நமது முன்னோர்கள் விட்டுச் சென்ற அறிவுக் கருவூலத்தை நாம் இன்று கண்டு துய்ப்பதற்கும், நாம் இன்று பெற்றுள்ள அறிவுச் செல்வத்தை நமது வழித்தோன்றல்களுக்கு வழங்குவதற்கும் மொழியே துணையாக உள்ளது. மக்கள் வாழ்வில் பிறந்து மக்களால் வளர்க்கப்பட்டு மக்களின் வாழ்வை நாகரீகமுடையதாக உயர்த்திவரும் அரிய கலையே மொழி.

இத்தகைய மொழிகளில் நம் தாய்மொழியாம் தமிழ் மொழி பழமைக்கும் பழமையாகவும் புதுமைக்கும் புதுமையாகவும் திகழும் சிறப்புடையது. இலக்கண இலக்கிய வளம் மிக்க ஒன்றாகவும் இலங்குகிறது. திராவிட மொழிக் குடும்பத்தில் தொன்மையான மொழி தமிழ், கன்னடமும் தெலுங்கும் கவின் மலையாளமும் கிளைத்தெழக் காரணமாக இருந்தும் சீரிளமைத் திறம் குன்றாத மொழி செம்மொழியாகிய நம் செந்தமிழ் மொழி. எனவே **மெய்ம்மை குன்றா மொழி** நம் மேன்மைத் தமிழே ஆகும்.

தமிழில் மொழி என்னும் சொல் பெயர்ச் சொல்லாகவும் வினைச் சொல்லாகவும் இருக்கும் இயல்பினது. பெயர்ச் சொல்லாக இருந்தால் பேசும் மொழியை (Language) குறிக்கும். வினைச் சொல்லாக இருந்தால் மொழிதல் - பேசுதல் (Speaking) என்னும் பொருள் தரும். எனவே மொழி என்பது பெயர், வினைப் பாகுபாடு தோன்றுவதற்கு முன்னே தோன்றிய பழமை வாய்ந்த சொல்லாகும். இத்தகைய மொழிக்குத் துணையாக முருகா எனும் நாமங்கள் இருப்பதைப் பார்ப்போம்.

மொழிக்கு அடிப்படை ஒலி. 'மொழி முதற் காரணமாம். அணுத்திரள் ஒலி எழுத்து' என்று நன்னூல் இலக்கணமும் கூறுகிறது. ஒலியே மொழியாகிறது. மண்ணே குடமாவது போல என்பது கருத்து. மொழியைப் பேச வேண்டுமானால் ஒருவர் வாயைத் திறக்க வேண்டும். வாயைத் திறந்தவுடன் வருவது அகர ஒலியே. எனவேதான் திருவள்ளுவர் கடவுள் உண்மையை 'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு' என்னும் முதற் குறள் வாயிலாகக் கூறுகிறார். உலகத்திலுள்ள எல்லா மொழிக்கும் அடிப்படை அகர ஒலியே. அருணகிரிப்பெருமான் திருப்புகழில் பழமுதிர்சோலையைப் பாடும்போது 'அகரமுமாகி அதிபனுமாகி' முருகன் இருப்பதைக் குறிப்பிடுகிறார். மொழிக்குத் துணையாக முருகன் இருப்பதை நாம் பொது நிலையில் உணர முடிகிறது.



ஒலிகளை உயிரொலிகள் என்றும் மெய்யொலிகள் என்றும் பாகுபடுத்திப் பார்ப்பது உலக மொழிகளுக்கெல்லாம் ஒரு பொதுமைப் பண்பாகும். அந்த அடிப்படையில் தமிழில் உயிரெழுத்துக்கள் 12 என்றும் மெய்யெழுத்துக்கள் 18 என்றும், ஆய்த எழுத்து ஒன்று என்றும் கூறுகிறோம். அந்த நோக்கில் முருகப் பெருமானின் 12 கைகளும் தமிழின் 12 உயிர் எழுத்துகளாகவும் 18 கண்களும் 18 மெய் எழுத்துகளாகவும், ஆய்தம் அவனது வேலாகவும் கருதப்படுகின்றன. இந்த வகையிலும் தமிழ் மொழியின் இயக்கத்துக்கு உறுதுணையாக முருகப் பெருமான் அமைகிறான் எனலாம்.

முருகா என்னும் சொல்லைப் பார்ப்போம். எழுத்துக்கள் தனித்தும் தொடர்ந்தும் பொருள் தரும்போது சொல்லாகிறது. எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே என்பது தொல்காப்பியம். முதலில் முருகா என்னும் சொல்லுக்கு அடிப்படையாக உள்ள முருகு என்னும் சொல்லமைப்பைப் பாருங்கள்.

ம்உ+ர்உ+க்உ இந்த ஆறு எழுத்துகளின் கூட்டமைப்பே முருகு என்பது முருகப் பெருமானின் ஆறு முகங்களையும் ஆறு படை வீடுகளையும் ஆறெழுத்து மந்திரங்களையும் இச்சொல்லமைப்பு ஆறு எழுத்துகளின் எண்ணிக்கை உணர்த்தவில்லையா?

மேலும் தமிழில் மெய்யெழுத்தை வல்லினம், மெல்லினம் இடையினம் எனப் பகுப்பர்.

க், ச், ட், த் ப், ற் - வல்லினம், ங். ஞ் ண், ந், ம், ன் - மெல்லினம், ய், ர், ல், வ், ழ், ள் - இடையினம், ம் - என்பது மெல்லினம், ர் என்பது இடையினம், க், என்பது வல்லினம். இம்மூன்றுடன் உ என்பது சேர முருகு என்பது உருவாகியுள்ளது. ஓம் என்னும் பிரணவ மந்திரம் அஉம் என்னும் மூன்றெழுத்தின் கூட்டமைப்பு என்றும் இதிலுள்ள உ காக்கும் தொழிலைக் காட்டுவது என்றும் கிருபானந்த வாரியார் கூறுவார்.

முருகு என்னும் சொல்லுக்குரிய பொருளைத் திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் "மணங்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி" என்னும் தொடர் வழி விளக்குகிறார். அதாவது மாறா மணம், இளமைத் தன்மை, என்றும் நிற்கும் இறைமை, அழியா அழகு என்பது முருகு என்பதன் பொருள் எனத் திரு. வி. கல்யாண சுந்தரனார் முருகன் அல்லது அழகு என்னும் நூலில் விளக்குகிறார். திவாகரம், பிங்கலந்தை, நாமதீப நிகண்டு முதலியவைகளைப் புரட்டினால் முருகு என்னும் சொல்லுக்கு அழகு, பூந்தட்டு, கள், தேன், எலுமிச்சை, எழுச்சி, அகில், முருகு என்னும் வாத்தியம் எனப் பல பொருள் கிடைக்கும். கண்ணுக்கு அழகாக, காதிற்கு நாதமாக, நாவிற்கு அமுதமாக, மூக்கிற்கு மணமாக, உடலுக்கு இனிய பரிசமாக, கருத்திற்கு விருந்தாக, உயிருக்கு உணர்வாக, இப்படி எல்லாமாக இருந்து துணைபுரிபவன் முருகன் என்று அறிஞர் கூறுவர்.

தமிழ் மொழியில் தேர்ந்த புலமை பெற்றோரைப் புலவர் என அழைத்துப் போற்றுவர். திருமுருகாற்றுப்படை முருகனைப் 'பலர் புகழ் நன்மொழிப் புலவர் ஏறே' என்று அழைக்கிறது. முருகப் பெருமான் புலவர் தலைவனாய்ச் சங்கமிருந்து தமிழாராய்ந்ததாக இறையனார் களவியல் உரை கூறுகிறது. மேலும் இறையனார் களவியலுக்கு உரை பகர்ந்தவன் முருகன் என்பதும் அந்நூல் கருத்து. திருமுருகாற்றுப் படையை புலவராற்றுப் படை என்றும் அழைப்பர். பத்துப்பாட்டிலுள்ள நூல்களைப் பட்டியலிடும் பழைய பாட்டு திருமுருகாற்றுப் படையை 'முருகு' என்றே பெயரிட்டு அழைக்கிறது.

தமிழ் மொழியின் தொன்மை இலக்கியங்கள் சங்க இலக்கியங்கள். சங்க இலக்கியங்கள் பத்துப் பாட்டும் எட்டுத் தொகையும் ஆகும். பத்துப் பாட்டின் முதற்பாட்டு திருமுருகாற்றுப் படை. இதனை இயற்றியவர் தமிழ்ச் சங்கத் தலைவர் நக்கீரர். முருகனிடத்தில் அடியார்களைச் சென்று அருள்பெற வழிகாட்டுவதே முருகாற்றுப்படை எட்டுத் தொகை நூலாகிய பரிபாடலில் முருகனைப் பற்றிப் பாடல்கள் உள்ளன. பரிபாடல் என்பது பண்ணுடன் பாடக்கூடிய இசைப்பாடலாகும்.

சங்க இலக்கியத்தின் பாடுபொருளை அகம், புறம் எனப்பாகுபடுத்துவர். அகம் என்பது காதலையும் புறம் என்பது போர், வீரம் கொடை முதலியவற்றையும் பற்றிப் பேசும். அகம் புறம் பாகுபாடு தமிழின் சிறப்பு என்பர். அக நூலாகிய நற்றிணையில் 'முருகொடு புணர்ந்த வள்ளி போல' என்னும்

தொடர் வருகின்றது. புறநூலாகிய புறநானூற்றில் 'முருகு ஒத்தியே முன்னியது முடித்தலின்' என்று கருதியதை நிறைவேற்றும் கந்தப் பெருமானின் இயல்பைப் பேசுகிறது. இவை அனைத்தும் முருகு என்னும் நாமம் தமிழ் இலக்கியத்துக்கு துணையாவதைக் காட்டும் சான்றுகளாகும்.

முருகன் என்னும் சொல் விளி வேற்றுமைப் பொருளில் அவனை அழைக்கும் நிலையில் முருகா என வரும் சோழன் - சோழா, பாண்டியன் - பாண்டியா என்பது போல இது அமையும். இது முருகா என்று மந்திரச் சொல்லாக மாறும்.

*அஞ்சு முகம் தோன்றில் ஆறுமுகம் தோன்றும்*
*வெஞ்சமரில் அஞ்சல் எனவேல் தோன்றும் - நெஞ்சில்*
*ஒருகால் நினைக்கின் இருகாலும் தோன்றும்*
*முருகா என்று ஓதுவார் முன்*

என்னும் திருமுருகாற்றுப் படையிலுள்ள வெண்பா வழி முருகா என்று காதவாகிக் கசிந்து ஓதுவார் பெறும் நன்மைகளை நாம் அறிய முடிகிறது. இது கருதியே அருணகிரிப் பெருமானும் தம் கந்கரனுபூதியில்

*முருகன் குமரன் குகன் என்று மொழிந்து*
*உருகும் செயல் தந்து உணர்வு என்று அருள்வாய்*

எனக்கேட்கிறார். கந்தரலங்காரத்தில் (76) 'நெஞ்சமே முருகா என்கிலை! தஞ்சம் ஏது நமக்கு' என்கிறார்.

முருகா முருகா என்று பலமுறை கூறி உருகினால் முருகன் அருள் கிடைக்கும் என்பதைத்தான் முருகா எனும் நாமங்கள் எனும் பன்மைச் சொல் உணர்த்துகிறது. மேலும் 'ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமில்லார்க்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ' என்னும் திருவாசகத் தொடருக்கு ஏற்ப முருகப் பெருமானுக்குரிய பல திருப்பெயர்களைச் சொல்லி உருகும் செயலையும் நாமங்கள் என்னும் பன்மைச் சொல் உணர்த்துவதாகக் கொள்ளலாம்.

முருகப் பெருமான் குருவாய் வந்து அருள்புரியும் தன்மையுடன் அருணகிரியார்க்கு அவன் குருவாய் வந்து 'சும்மா இரு' எனச் சொல்லிச் சென்றான். இச்செய்தியைச் சொல்லுமிடத்தில் அருணகிரிணார் முருகன் எனும் திருப்பெயரைச் குறிப்பிடுகிறார். இதற்குப் பின்வரும் கந்தரனுபூதிப் பாடல் சான்று

செம்மான் மகளைத் திருடும் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்
சும்மா இரு சொல் அற என்றலுமே
அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே.

நம்மை இறையருள் பெறக் கடைத்தேற்றும் நிலையிலும் அவன்-முருகன் துணையாயிருப்பதை இது சுட்டுகிறது.

மொழியைக் கடந்து நிற்பது மௌனம். அதாவது பேசா நிலை. அதற்கும் முருகா எனும் நாமம் துணையாவதைக் கீழ்வரும் கந்தரனுபூதிப் பாடலில் கூறுவதைக் காண்க.

தூசா மணியும் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினது அன்பு அருளால்
ஆசா நிகளம் துகளாயின, பின்
பேசா அனுபூதி பிறந்ததுவே.

எனவே மொழிக்கும், மொழி கடந்த நிலைக்கும் முருகா எனும் நாமங்களே துணை எனக் கொண்டு அவனைத் தொழுது அவன் அருள் பெற்றுய்வோமாக.



# பைந்தமிழ் பரவும் பகழிக்கூத்தர்

**முனைவர் தெ. ஞானசுந்தரம்,**
சென்னை 600 101

பதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்த சிறந்த கவிஞர்களில் ஒருவர் பகழிக்கூத்தர். இவர் சேதுபதிகள் ஆண்ட நிலப்பகுதியைச் சேர்ந்தவர். அவர்களின் பழைய தலைநகரம் புகலூர் என்றும் அவ்வூரில் உள்ள விநாயகருக்குப் பகழிக்கூத்தர் என்பது பெயர் என்றும் கூறுகின்றனர் அறிஞர் சிலர். இவர் சீவக சிந்தாமணிச் சுருக்கம், திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழ் என்னும் இரு நூல்களைப் படைத்துள்ளார்.

பகழிக்கூத்தர் பிறப்பால் வைணவர். "திருமாதுசேர்மார்பன் தேர்ப்பாகற்கு அன்பு, தருமால் பகழிக்கூத்தன்" என்று வரும் சிறப்புப் பாயிரப் பகுதியால் அறியலாம். அவர் தமக்கு உண்டான வயிற்று வலி தீருவதற்காகத் திருச்செந்தூர் முருகன் மீது பிள்ளைத் தமிழ் பாடினார் என்றும், அதன்பின் அவர் நோய் நீங்கியது என்றும் கூறுவர். அதற்குரிய அகச்சான்று எதுவும் நூலில் காணப்படவில்லை. ஆனால், திருச்செந்தூர் முருகன் அடியார்களின் குறையைத் தீர்ப்பவன் என்பதற்கு இலக்கியச் சான்று இருக்கிறது. பிறந்ததுமுதல் ஐந்தாண்டுவரை பேச முடியாமல் இருந்த குமரகுருபரர் செந்திலாண்டவன் திருவருளால் பேசும் ஆற்றல் பெற்றுக் கந்தர் கலிவெண்பா பாடினார் என்பது பலரும் அறிந்த செய்தி. அதுபோல இவருடைய குறையையும் முருகன் போக்கியிருக்கிறான் என்பது தெரிகிறது.

திருச்செந்தூர் குறித்து எழுந்துள்ள குறிப்பிடத்தக்க இலக்கியங்கள் ஆறு, ஒன்று, வென்றிமாலைக் கவிராயர் எழுதியுள்ள திருச்செந்தூர்ப் புராணம், இரண்டு, சாமிநாத தேசிகர் படைத்த கலம்பகம். மூன்று, குமரகுருபரர் பாடிய கந்தர் கலிவெண்பா, நான்கு, தண்டபாணி சுவாமிகள் அருளிய செந்திற்கோவை. ஐந்து அருணகிரிநாதர் திருச்செந்தூர்பற்றிப் பாடியுள்ள எண்பத்து நான்கு திருப்புகழ்கள். ஆறு பகழிக்கூத்தர் தந்த திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழ்.

முருகனைப் பற்றிய பிள்ளைத் தமிழ் நூல்களில் குமரகுருபரரின் முத்துக்குமரசாமி பிள்ளைத் தமிழை அடுத்துப் பெரிதும் போற்றப்படுவது பகழிக்கூத்தரின் பிள்ளைத் தமிழ். குமரகுருபரரைப் போலவே இவரும் தமிழின் மீது தணியாக்காதல் கொண்டவர் தம் பிள்ளைத்தமிழில் அங்காங்கே தமிழின் பெருமையை முருகன் பெருமையோடு குழைத்துக் கற்பார்க்கு விருந்து படைக்கிறார். அப்பகுதிகள் கற்பார்க்கு மிக்க இன்பம் பயப்பன எனலாம்.

நூலின் முதற் பாட்டாகச் சிறப்புப் பாயிரம் அமைந்துள்ளது. அந்த முதற் பாட்டின் முதல் அடியே தமிழ்பற்றியதாக அமைந்துள்ளது. திருச்செந்தூரில் தமிழ் வளர்ந்தது என்பதனைத் தெரிவிக்கும் வகையில்,

> செந்தமிழ்க்கு வாய்த்த திருச்செந்தில் பதி வாழும்
> கந்தனுக்குப் பிள்ளைக் கவி செய்தான்

என்று தொடங்குகிறது. அந்நகர் தமிழ் ஆராய்ச்சி நிகழும் இடமாக இருந்துள்ளது. அதனால்தான் 'சந்ததம் இயல்தேர் செந்தில்' (30) என்றும் 'செந்தமிழ் மணக்கும் திருச்செந்தில்' (96) என்றும் குறிக்கிறார்.

பிள்ளைத்தமிழின் முதற்பருவம் காப்புப் பருவம். அது பாடப்படும் தலைவனை காக்குமாறு ஏனைய தெய்வங்களை வேண்டும் பகுதி. அப்பகுதியில் கந்தனைக் காக்குமாறு சிவபெருமானை வேண்டுகிறார் பகழிக்கூத்தர். அப்பகுதியில் சிவபெருமானுக்கும் தமிழுக்கும் இருக்கும் தொடர்பினை அழகுறப் பாடியுள்ளார். சிவபெருமானே வடமொழியையும் தமிழையும் படைத்தான். அதனோடு அமையாமல் வடமொழியை வளப்படுத்துவதற்குப் பாணினியையும் தமிழை வளப்படுத்துவதற்கு அகத்தியரையும் பணித்தான் என்பது முன்னையோர் கருத்து. இச்சிறப்பினைத் தெரிவிக்கும் வகையில்,

மருவிய சகள வடிவினர்; அரிய
வடகலை தமிழ் வளம்பெறச் சேர்த்தவர்;
மதுரையில் இறைவர் இரசதப் பொதுவர்
மணமலி பதயுகங்களைப் போற்றுதும் (2)

என்று பாடுகிறார்.
செந்திற்பதியில் வாழும் முருகப்பெருமான் பொதியமலையிலும் இருக்கிறான். அதற்குத் தென்றல் வீசுகிறது என்பதுவா காரணம்? அங்குத் தமிழ் ஆராயப்படுகிறது என்பதுவே ஆகும்.

தென்றலுடன் தமிழ் தேர் தென் பொதியம் பயில்வாய்
தேன் ஆர் தார் மார்பா! (25)

என்று பாடி இயற்கைத் தென்றலோடு இனிய தமிழும் முருகன் விரும்புவது என்கிறார் பகழிக்கூத்தர். இப்படித் தமிழை விரும்புபவன் என்று சொல்வதோடு முருகனையே தமிழாகக் கண்டு கூத்தாடுகிறது பகழிக்கூத்தரின் தமிழ் உள்ளம்.

சரவணம் மருவும் தண்டமிழ் முருகா!
தாலோ தாலேலோ (26)

என்று தாலாட்டி மகிழ்கிறார்.

பண்டைக் காலத்தில் மூன்று தமிழ்ச்சங்கங்கள் இருந்தன. முதற்சங்கம் தென்மதுரையிலும் இடைச்சங்கம் கபாடபுரத்திலும் கடைச்சங்கம் மதுரையிலும் இருந்தன. தலைச்சங்கத்தில் திரிபுரம் எரித்த விரிசடைக்கடவுளும், குன்றம் எறிந்த குமரவேளும் புலவர்களாக வீற்றிருந்தனர் என்பது இறையனார் களவியலுரை போன்ற நூல்களில் காணப்படும் குறிப்பு. அதனை உளத்தில் கொண்டு முருகனை,

சங்கத் தமிழ்ப் புலவ! துங்கக் கொடைக் குமர!
சப்பாணி கொட்டி அருளே (36)

புலமை வித்தக! மயூர வாகன! வள்ளி
போக! (99)

என்று வேண்டுகிறார். அகத்திய முனிவருக்கு முருகப் பெருமானே தமிழ் அறிவுறுத்தினான் என்பர். அதனைப் பகழிக்கூத்தரும் தெரிவிக்கிறார்.

குறுமுனிக்கும் தமிழ் உரைக்கும்
குழவி முத்தம் தருகவே (48)

என்கிறார்.

செந்தில்நாதன் தமிழின் மீது பெருங்காதல் உடையவன். அவன் தேவர்கள் மகிழ வீதியுலாப் புறப்படுகிறான். அவனுக்கு முன்னே அரம்பையர்கள் அழகாக நடனம் ஆடுகிறார்கள்; இந்திரனும் முனிவர்களும் தங்கள் வழியடிமைத் திறத்தைப் புலப்படுத்திக்கொண்டு செல்கிறார்கள்; மக்கள்



'அரகர' என்று முழங்குகிறார்கள்; மறைகளும் ஒலிக்கின்றன; வேதம் வல்ல ஆதிசைவர்கள் அருச்சனை செய்கிறார்கள். இவற்றோடு தமிழ்ப்புலவர்கள் பிழையில்லாத தமிழ்ப் பாடல்களைப் பாடி இறை யன்பினால் மனம் உருகுகிறார்கள்.

வழுஅறு தமிழ்ப் பனுவல் முறை முறை உரைத்து வெகு
வர கவிஞர் உட்குழையவே (91)

என்று அவன் வீதியுலாவில் தமிழ் இடம்பெற்றுள்ளதனைக் காட்.டி முருகனுக்குத் தமிழ் கேட்பதில் மிக்க விருப்பம் என்பதனைப் புலப்படுத்தியுள்ளார்.

புலவர்களின் படைப்புகளைச் சீர்தூக்கி எது தரமானது என்று சொல்வதில் வல்லவனாக முருகன் திகழ்ந்துள்ளான். மதுரைச் சோமசுந்தரப் பெருமான் அருளிய பொருள் இலக்கண நூல் களவியல் என்பது. அதனால் அதற்கு இறையனார் களவியல் என்னும் பெயர் அமைந்தது. அந்நூல் அறுபது நூற்பாக்களைக் கொண்டது. அதற்குப் புலவர்கள் உரைகண்டார்கள். அவற்றுள் சிறந்தது எது என்பதனை வாய்ப்பேசாத ஐந்து வயது சிறுவனாகிய உப்பூரி குடிகிழான் மகன் உருத்திரசன்மனை அவையில் இருந்து கேட்கச் செய்து முடிவுசெய்தார்கள். அவன் நக்கீரர் உரையைக் கேட்டபோது மெய் சிலிர்த்துக் கண்ணீர் பெருக்கி அதுவே சிறந்த உரை என்பதனைப் புலப்படுத்தினான். இது களவியலுரை குறித்த வரலாறு. இவ்வுருத்திரசன்மனை முருகன் திருத்தோற்றம் என்று குறிக்கும் மரபு உள்ளது. அதனைக் கருத்தில் கொண்டு,

தொழுதும் துதித்தும் துயர் அகற்றிச்
சுரருக்கு இறையும் சுரரும் உடன்
சூழ்ந்த கடம்ப அடவியில் உறை
சொக்கக் கடவுள்தனை மூன்று

பொழுதும் பரவி, எழுத்து, சொல்
போலப் பொருளும் புகல்தி எனப்
புகலும் ஆறு அஞ்சு இரட்டி திணைப்
பொருள் சூத்திரத்தின் பொருள் மயங்காது

எழுதும் பனுவல் பரணன் முதல்
ஏழ் ஏழ் பெருமைக் கவிப் புலவர்
இதயம் களிக்க விருப்பமுடன்
இறையோன் பொருட்குப் பொருள் விரித்து,

முழுதும் பகர்ந்த கனி வாயால்
முருகா முத்தம் தருகவே!
மொழியும் சமயம் அனைத்தினுக்கும்
முதல்வா! முத்தம் தருகவே! (46)

என்று பாடுகிறார்.

கச்சியப்பசிவாச்சாரியார் போன்றோர் முருகனைத் தமிழின் வடிவமாகவும் திருஞானசம்பந்தரை முருகனின் அவதாரமாகவும் கருதிப் போற்றியுள்ளனர். பகழிக்கூத்தரும் திருஞானசம்பந்தரைத் திருமுருகனின் மறுஅவதாரமாகவே போற்றியுள்ளார். முருகனை வருக என்று அழைக்கும்போது 'கலை நெறி புகலி வளம் உற மருவு கவுணிய வருக! வருகவே!" (61) என்று அழைக்கின்றார். சிற்றில் இழைத்து விளையாடும் பெண்கள். "சீர்காழியில் தோன்றிச் சமணர்களைக் கழுவேறுமாறு செய்து அவர்கள் கட்டழித்த பெருமானே! எங்கள் சிற்றிலைக் சிதைக்காதே" (60) என்று வேண்டுவதாகப் பாடுகிறார்.

திருஞானசம்பந்தர், பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியாரும் அமைச்சர் குலச்சிறையாரும் வேண்ட மதுரைக்கு எழுந்தருளினார். அவர் தங்கியிருந்த மடத்துக்குச் சமணர் இட்ட தீயை மன்னனின் உடலில் புகுந்து வெப்புநோயாக மாறும்படி செய்தும், பின்பு அவனுடைய நோயையும் கூனையும் திருவருள் துணையால் போக்கியும் சமணர்களை அனல்புனல் வாதங்களில் வென்றுக் அவர்களைக் கழுவேறுமாறு செய்தார். அவர் அருளிய தேவார ஏடுகள் அனலில் வேகாமலும் புனலை எதிர்த்துச் சென்றும் அற்புதம் நிகழ்த்தின. இதனை,

பௌவம் எறி கடல்ஆடை உலகில்ஒரு கெடு மென்
பறவைக்கு நிறை புகுந்த
பார்த்திவன் பாவையும், இயல் புலச்சிறையும்,
பணித்தருள, மதுரை புக்குத்

தெவ்வர் இடு திருமடத்து எரி செழியன் உடல் உறச்
சென்று பற்றலும், எவர்க்கும்
தீராத வடைவைஅனல் வெப்பும் முதுகூனும்
திருத்தி, ஒரு வாது வென்று,

வெவ் அழலில் எழுதி இடும் ஏடும் பெருக்கு ஆற்று
விட்ட தமிழ் ஏடும் ஒக்க
வேகாமல் எதிரே குடக்கு ஏற, வெம்கழுவில்
வெய்ய சமண் மூகர் ஏறச்

சைவ நெறி ஈடேற வரு கவுணியக் குழவி
சப்பாணி கொட்டி அருளே!
சமரமுக! ரணவீர! பரசமய திமிர அரி
சப்பாணி கொட்டி அருளே! (33)

என்று விளக்கமாகப் பாடியுள்ளார்.

தமிழால் நிகழ்ந்த மற்றோர் அற்புதம் நக்கீரர் வாழ்க்கையில் நிகழ்ந்தது. நக்கீரர் திருப்பரங்குன்றத்தில் பொய்கைக்கரையில் அமர்ந்து தவம் செய்துகொண்டிருந்தார். அங்கிருந்த அரசமரத்திலிருந்து நீரில் பாதியும் நிலத்தில் பாதியுமாக ஓர் இலை விழுந்தது. நீரில் விழுந்த பகுதி மீனாகவும் நிலத்தில் விழுந்த பகுதி பறவையாகவும் மாறின. அதனைக் கண்டு மயங்கிய நக்கீரர் வழிபாட்டினை மறந்தார். அதனால் அவரை அக்குளத்தில் இருந்த அயக்கிரீவன் என்னும் பூதம் கற்குகையில் அடைத்தது. அங்கு அதற்கு முன்னர் வழிபாட்டில் பிழைத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று ஒன்பது பேர் சிறைப்பட்டிருந்தனர். ஆயிரம் பேர் சிறைப்பட்டவுடன் அனைவரையும் உண்ணுவதற்குத் திட்டமிட்டிருந்தது -அப்பூதம். அதனால் எல்லோரும் கலங்கினர், பழுத்த தமிழ்ப்புலவராகிய நக்கீரர் முருகன் அருள்வேண்டித் திருமுருகாற்றுப்படை என்னும் நூலினைப் பாடினார். முருகப் பெருமான் வேல் அக்குகையினைப் பொடிப்பொடி ஆக்கி அனைவரையும் மீட்டது. இதனை அருணகிரிநாதரும் தம் திருவகுப்பில் வேலின் சிறப்பினைப் பாடும்போது, பழுத்த முது தமிழ்ப்பலகை இருக்கும் ஒரு கவிப்புலவன் இசைக்கு உருகி வரைக்குகையை இடித்து வழிகாணும்" என்று போற்றியுள்ளார். பகழிக்கூத்தர் இந்த வரலாற்றை ஒரு பாட்டில் விளக்கமாகப் பாடியுள்ளார். அப்பாடல்:

ஏர்கொண்ட பொய்கைதனில் நிற்கும் ஒரு பேர் அரசின்
இலை கீழ் விழின் பறவையாம்;
இது நிற்க, நீர் விழின் கயலாம்; இது அன்றி ஓர்
இலை அங்கும் இங்குமாகப்



பார்கொண்ட பாதியும் பறவைதான் ஆக அப்
பாதியும் சேலதாகப்
பார்கொண்டு இழுக்க அது நீர்கொண்டு இருக்க இப்
படிகண்டது அதிசயம்என

நீர்கொண்ட வாவிதனில் நிற்கும் ஒரு பேழ்வாய்
நெடும் பூதமது கொண்டுபோய்
நீள்வரை எடுத்து அதன் கீழ்வைக்கும் அதுகண்டு
நீதிநூல் மங்காமலே

சீர்கொண்ட நக்கீரனைச் சிறை விடுத்தவா
செங்கீரை ஆடி அருளே
திரைஎறியும் அலைவாய் உகந்த வடிவேலனே
செங்கீரை ஆடி அருளே. (13)

பகழிக்கூத்தர் செந்தில்நகரையும், அந்நகரில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமானையும் தமிழின் வடிவமாகக் காண்கிறார். நாளும் இன்னிசையால் தமிழ் வளர்த்த ஞானசம்பந்தரையும், தமிழின் தகுதியினைச் சீர்தூக்கிப் புலப்படுத்திய உருத்திரசன்மனையும் முருகப்பெருமானாகக் காண்கிறார். தெய்வப் பாடல்கள் இறைவனைப் போல இடர்போக்கிக் காப்பன என்பதனைத் தெரிவிக்கிறார். இதனால் அவர் கண்களுக்கு ஆண்டவன் தமிழாகவும் தமிழைப் போற்றிய அருளாளர்கள் ஆண்டவனாகவும் தெரிகிறார்கள் என்பது தெளிவு. பைந்தமிழைப் போற்றுவதும் பரமனைப் போற்றுவதும் ஒன்றே என்பது பகழிக்கூத்தர் பகரும் உண்மை எனலாம்.

www.hindugodwallpaper.com





# திருப்போரூர் சிதம்பர தேவர் சுவாமிகள்

- கவிச்சுடர் காரைக்கிழார்



பழஞ்சுடுதா என்றந்தப் பாட்டியிடம் கேட்டாய்
இளஞ்சுவையாய் நெஞ்சில் இருந்தாய்! - குழந்தாய்!
திருச்செந்தூர் வாழும் திருவே! குமரா!
திருச்செந்தூல் தண்டா யுதா!

உலகமெங்கும் உவந்து போற்றும் ஒரு தனிக்கடவுள், கந்த வேள் முருகன்! கடம்பன், குகன், கதிர்வேலன், வள்ளிமணாளன், தெய்வயானை கணவன் என்பர் அறிஞர் பெருமக்கள்.

தரணிக்கும் தமிழுக்கும் தலைவனானவன் முருகன். சரணம் என்று வருவோர்க்குத் தரணும் என்று தளிர்க்கை ஏந்தி நிற்கும் தன்னிகரில்லாத் தணிகைத் தெய்வம் முருகன். அவன் பெருமைகளைப் புகழ்ந்து பாடாத புலவர் பெருமக்களே இல்லை எனலாம்.

தமிழ்த் தென்றல், திருவிக, முருகன் அல்லது அழகு என்று ஒரு நூல் எழுதியிருக்கிறார். அது ஓர் அழகுக் காவியம்.

தமிழ்க் கடவுள் முருகனின் திறம் வியந்து கூறப்படும் அற்புதப் பனுவல் அது!

குடும்ப உறவுகளுடன் தள்ளாடும் மொழிபேசித் தமிழ் கற்றுக் கொள்ளும் மழலையர்போல, மேடைப் பேச்சாளர்கள் மொழி கற்றுக்கொள்ள அரிச்சுவடியாய் விளங்கும் நூலே முருகன் அல்லது அழகு என்ற நூலாகும்.

ஏறுமயில் ஏறிவிளை யாடுமுகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுகம் ஒன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரைவ தைத்தமுகம் ஒன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே
ஆறுமுக மானபொருள் நீயருள வேண்டும்
ஆதியரு ணாசலம் அமர்ந்தபெரு மாளே

என்று ஆறுமுகப் பெருமானை அகம் உருகித் திருப்புகழ் பாடினார் அருணகிரியார். முத்தைத் தரு பத்தித் திருவெனும் அருணகிரியின் பாட்டுக்கு ஈடாக அடுத்தொரு பாட்டு வந்ததாகத் தெரியவில்லை.

நீரே முக்கண் முதல்வனும் ஆகுக; நெற்றிக்கண் திறப்பினும் குற்றம் குற்றமே என்று பாட்டின் பிழைக்காக வாதாடிய நக்கீர பெருமானும் கூட குன்றத்துக் குமரனைப் புகழ்ந்து பாடியுள்ளார். படை வீடு கண்ட பச்சைமயில் பாலகனை திருமுருகாற்றுப்படை என்ற நூலில் ஆறு படை வீடுகளையும் அழகுறப் பாடியுள்ளார் நக்கீரர்.

பாலகன் முருகனின் எல்லையில்லாப் புகழினைப் பாடிப் பரவிய ஆயிரமாயிரம் அடியார் பெருமக்களுள் ஒருவராகத் திகழ்ந்தவரே சிதம்பர தேவர். தமது இடைவிடாத் தேடலின் விடையாகக் குமரனைக் கண்டுபிடித்த கோமுனியே சிதம்பரதேவர்.



பாண்டிய நாட்டில் மதுரை மாநகரில் சங்கப் புலவர் மரபில் தோன்றிய மாமேதையே சிதம்பர சுவாமிகள் என்ற சிதம்பர தேவர். சுப்பிரமணிய பாரதியின் கவிமேதா விலாசத்தை இளமையிலேயே கண்டு அறிஞர்கள் பாராட்டியதைப் போன்று சிதம்பரதேவரின் சிறப்பியல்பினைக் கண்டு இளமையிலேயே அவரைக் கவிராயர் என்று பட்டமளித்துச் சிறப்பித்தனர். இலக்கியப் புலமையோடு தெய்வ பக்தியும் இவரிடம் மிகுந்திருந்தது. மதுரையின் மெய்த் தெய்வமாய் விளங்கும் மீனாட்சியம்மையைத் தம் உபாசனா மூர்த்தியாகக் கொண்டு பூஜித்து வந்தார்.

குமார தேவர் என்பவரைக் குருவாக ஏற்றுக்கொண்டு, வேதாந்தம், யோகாசனம் போன்றவற்றைப் பயின்றார். வீரசைவ ஆகம முறைப்படி குருவிடம் இருந்து தீட்சை பெற்று உபதேசமும் கிடைக்கப் பெற்றார். ஒருநாள் சிதம்பர தேவர் தியானத்தில் இருந்தபோது, ஒரு மயில் தோகை விரித்து ஆடக்கண்டார். அதன் விளக்கத்தைத் தம் குருவான குமர தேவரிடம் கேட்டபோது, உமது உபாசனா தேவியாகிய மதுரை அங்கயற் கண்ணி இதனை விளக்குவாள் என்று குரு கூறினார்.

மதுரை மீனாட்சியம்மனைத் தரிசித்து, 'மீனாட்சியம்மை கலிவெண்பா' என்னும் பாமாலையை அம்பிகைக்குச் சூட்டினார். 45 நாள் முடிவில் சிதம்பர தேவருக்குக் காட்சி தந்தாள் அன்னை. ''வடக்கே யுத்தபுரி (திருப்போரூர்) சென்று, அங்கே எம் புதல்வன் குமரனது ஆலயத்தைப் புதுப்பித்துப் பொலிவடையச் செய்வாயாக'' என்று அருள்பாலித்தாள். மீனாட்சியம்மையின் ஆணையை ஏற்று சிதம்பர தேவர், விருத்தாசலம் சென்றார்.

தம் குரு குமாரதேவர் யோக நிலையில் இருப்பது கண்டு, அவரை வலம் வந்து வணங்கினார். பின்னர் அங்கிருந்து புறப்பட்டு பொம்மையா பாளையத்தில் சிவஞான பாலய சுவாமிகளைத் தரிசித்தார். அவருடன் சில நாட்கள் தங்கிப் பேசி இன்புற்ற பின்னர் திருப்போரூரைச் சென்றடைந்தார்.

திருப்போரூரில் சிதம்பர தேவர் முதன் முதலில் தரிசித்தது வேம்படி விநாயகரை! தொட்ட காரியம் வெற்றிபெற விநாயகரின் துணை வேண்டுமன்றோ! அதனால் விநாயகரின் அனுக்கிரகத்தை முதலில் பெற்ற பிறகு, அன்னை மீனாட்சி குறிப்பிட்ட கந்தன் ஆலயத்தைத் தேடும் முயற்சியை மேற்கொண்டார். அப்போதெல்லாம் திருப்போரூரில் காணும் திசையெங்கும் பனங்காடாகவே இருந்தது.

அந்தக் காட்டில் கந்தனைத் தேடி அலைந்தபோது, பெண்பனை மரம் ஒன்றின் கீழே சுயம்புமூர்த்தியாக கந்தவேள் காட்சியளிப்பதைக் கண்டு பேரானந்தம் அடைந்தார் சிதம்பர தேவர். வேம்படி விநாயகர் கோயிலில் தங்கி, அங்குள்ள வள்ளையன் ஓடை என்னும் குளத்தில் தினமும் நீராடி, கந்தனை வழிபட்டு வந்தார் அவர். கந்தனுக்குக் கோயில் எழுப்பும் சந்தர்ப்பமும் ஒருநாள் அவரைத் தேடி வந்தது. அந்தக் காட்டில் வழிப்பறிக் கொள்ளையர்கள் சிலர் சிதம்பர தேவரிடமும் தங்கள் கைவரிசையைக் காட்ட முயன்றனர்.

முருகப் பெருமான் சும்மா இருப்பாரா? திருட வந்தவர்களுக்குப் பார்வை பறிபோனது. தவற்றை உணர்ந்து சிதம்பர தேவரின் காலில் விழுந்து கதறி அழுதனர் வழிப்பறித் திருடர்கள். திருடராய்ப் பார்த்து திருந்தாவிட்டால் திருட்டை ஒழிக்க முடியாது என்று இந்த நூற்றாண்டுக் கவிஞரான பட்டுக்கோட்டை கலியாண சுந்தரம் பாடியுள்ளார். ஆனால், இது பலநூறு ஆண்டுகளுக்கு முன்னமே சிதம்பரதேவரின் வாழ்க்கையில் நடந்துள்ளது.

''கொள்ளையடிப்பதை இன்றோடு விட்டு விடுங்கள். திருடிச் சேகரித்த பொருளை இங்கு அமையப் போகும் கந்தன் ஆலயத் திருப்பணிக்குக் காணிக்கையாக வழங்குங்கள். முருகன் உங்களுக்கு மீண்டும் பார்வையை வழங்குவார்'' என்று சுவாமிகள் சொன்னார்.

கொள்ளையர்களும் தாங்கள் அதுவரை கொள்ளையடித்த பொருட்களைக் கந்தனது திருவடியில் காணிக்கை ஆக்குவதாகச் சத்தியம் செய்து, அதனைக் கொடுத்தனர். என்ன ஆச்சரியம்! அக்கணமே அவர்களுக்குப் பார்வை திரும்பக் கிடைத்தது. முருகன் நிகழ்த்திய அற்புதத்தை அனுபவப்பூர்வமாகக் கண்ட கொள்கையர்கள், கோயில் எழுப்பும் திருப்பணியில் தங்களை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ள முன் வந்தனர்.

காட்டாற்று வெள்ளத்தை மடைமாற்றி, கழனியில் நல்ல விளைச்சல் வரச் செய்யும் காரியம் போல், கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்று வாழ்ந்து வந்த கொள்ளையர்களைச் சிறந்த பக்திமான்களாக மாற்றிச் சாதனை கண்டவர் சிதம்பர தேவர் சுவாமிகள்.

''உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு





ஓஅற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி
உறுநர்த் தாங்கி மதன்உடை நோன்தாள்
செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை
மறுஇல் கற்பின் வாள்நுதல் கணவன்''

என்று திருமுருகாற்றுப் படையில் திருப்பரங் குன்றத்து முருகனை நக்கீர சுவாமிகள் பாடிப் புகழ்ந்தது போல் சிதம்பர தேவர் சுவாமிகளும் ஒல்லும் வாயெல்லாம் உயர் தனிச் செவ்வேள் முருகனைப் பாடிப் பரவியுள்ளார். திருப்போரூர் முருகன் பிள்ளைத் தமிழ் எனும் தலைப்பில் சிதம்பர தேவர் பாடியுள்ள பாடல் பத்துப் பருவங்களிலும் பைந்தமிழ் மணக்கும் பக்குவத்தைப் படிப்போர் உணரலாம்.

கவிராயர் சிதம்பர தேவரின் சீரிய புலமைத் திறம் வியக்க திருப்போரூர் முருகன் பிள்ளைத் தமிழில் தாலப் பருவம் பகுதியில் ஒன்றைப் பாடி இன்புறலாமே!

**தாலப் பருவம்**

கறையின் றொளிரு மதிமுகத்துக்
கரும்பன் னாரும் ஆடவருங்
கலவித் தேறல் அயின்றயின்று
களித்துத் தருக்கி விளையாடும்

நிறையுஞ் சோமச் சிலைத்தகடு
நிரப்பிக் குலிசத் தூணிறுத்து
நிலைகொண் டரிய நவமணிகள்
நிகழும் மாழைத் தசும்புநிரைப்

பொறைகொண் டிலங்கும் பலமாடப்
புனிதக் கொடிகள் கற்பகப்பூம்
பொங்கர்க் குறுந்தாள் நறுமுகையிற்
புடைக்குந் தோறும் மடலவிழ்ந்து

தறையில் நறையில் பெருக்கூற்றுஞ்
சமர புரியாய் தாலேலோ
தமரக் கடலைக் கடைந்தமுதந்
தருவோன் மருகா தாலேலோ.

தெய்வப் புகழ்பெற்ற திருப்போரூர் திருத்தலத்தில், குறைகள் தீர்க்கக் கைகூப்பி வரும் பக்தர்களுக்கு இன்றும் காட்சியளிக்கும் கந்தப் பெருமானைக் காணலாம்.

முருகனுக்காகவே தமது வாழ்வை அர்ப்பணித்து, அருந்தமிழுக்கும் சேவையாற்றிய சிதம்பர சுவாமிகள், ஒருவைகாசி மாதம் விசாக நட்சத்திரத்தன்று தமது ஒடுக்க அறைக்குள் சமாதியுள் நின்று பரிபூரணத்தை அடைந்தார். அதேநேரம் இருக்கோயிலில் தமது உருவத்தைக் காட்டி, உச்சிமேல் குவித்த கைகளோடு மூலஸ்தானத்துக்குள் சென்று இறைவனோடு இரண்டறக் கலந்தார். சுவாமிகள் முக்தி அடைந்தது 1659 ஆம் ஆண்டு என்று தெரிய வருகிறது.

மதுரை மீனாட்சி அம்மை கலிவெண்பா, நெஞ்சு விடு தூது, திருப்போரூர்ச் சந்நிதிமுறை, பஞ்சாதிகார விளக்கம் ஆகிய நூல்களை சிதம்பர சுவாமிகள் இயற்றியுள்ளார்.

வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், கொலை மறுத்தல், அவிரோத உந்தியார், ஒழிவில் ஒடுக்கம், திருவாசகத்துள் ஒரு பாடல் ஆகியவை இவர் எழுதியுள்ள உரை நூல்கள் ஆகும். சுவாமிகளது விரிவான சரித்திரம் புரசை அஷ்டாவதானம்
சபாபதி முதலியார் என்பவரால் எழுதப்பட்டுள்ளது.

மதுரை மீனாட்சியம்மை வண்கலி வெண்பாச் சொற்றும்
சதிநட மயிலாய் அம்மை சாற்றிய வாறு போபிப்
பதிமிக ஓங்கப் பாரில் சந்நிதி முறையைத் தந்தும்
கதிபெறு வழியைக் காட்டும் சிதம்பர சாமி வாழி

(துளசிகை மணியார்)



# தண்ணீர்மலையான் பஞ்சரத்தினப் பாமாலை

பேராசிரியர் சொ. சொ. மீ. சுந்தரம்

முருகப் பெருமான் தமிழ்க்கடவுள். தமிழ் எழுத்துக்களின் வடிவம் முருகன். அவனைப் போற்றி வழிப்பட்டதமிழ்மக்கள் அவனுக்காக உலகின் பலபகுதிகளிலும் திருக்கோயில் கட்டினார்கள். முருகன் அவர்களுடைய மனக்கோயிலிலும் அவர்கள் கட்டிய திருக்கோயிலிலும் திருவடி வைத்துத் திருவருள் புரிந்தான். முருகனுக்கு உலகெங்கிலும் கோயில்கள் உள்ளன. இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், தென்னாப்பிரிக்கா, அமெரிக்கா, இங்கிலாந்து, ஆஸ்திரேலியா, வியட்நாம், பர்மா என்று பலநாடுகளுக்கும் கடல்கடந்து சென்று கலைக்கோயில் பெற்றவன் கந்தன். இதை "உலகெங்குமேவிய தேவாலயம் தொறும் பெருமாளே" என்று முன்பே பாடினார் அருணகிரியார். முருகனைப் பாடவே பிறந்து வந்தவர் அருணகிரியார். அவருக்குப் பெயர்வைத்தவனே முருகன்தான். "அருணகிரி நாதர்! எனும் அப்பனே போற்றி" என்பது திருப்புகழ். அருணகிரிநாதர் திருப்புகழ் பாடுவதற்குத் தகுந்தமொழி வேண்டும் என்றே தமிழைத்தந்தானாம் முருகன், இதை

அழகு தவழ்திருப் பழனிமலைக் குகன்
அலங்கல் அணிந்தருளே
அருண கிரிக்கெனத் தமிழை அளித்தவன்
அலங்கல் அணிந்தருளே.

என்று பாடினார் ஒரு கவிஞர் (இந்தக் கவிஞரை வெளியில் தேடிப் பார்க்காதீர்கள் இந்தக் கட்டுரையாசிரியர் தான் இப்படிப் பாடியவர்).

ஐயா அருணகிரி அப்பா உனைப்போல
மெய்யாக ஓர்சொல் விளம்பினர்யார்?

என்கிறார் தாயுமானார். இப்படிப் புகழ்பெற்ற அருணகிரிநாதர் பெயரைப் பெற்றவர் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த சுவாமி அருணகிரிநாதன் என்பவர். இவர் சென்னையில் ஸ்ரீ அகத்திய மகாரிஷி மரபு சாது நாராயண தேசிகர் மடாலயத்தின் தலைவரான ஸ்ரீ ஞானானந்த மணவாள தேசிகர் என்பவரின் சீடராவார். இவர் பினாங்கு மாநகர் தண்ணீர்மலையில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். முருகப்பெருமான் மேல் ஒரு பஞ்சரத்தினப் பாமாலை பாடினார். இதற்குச் சாற்றுக்கவி தந்தவர் இராமநாதபுரத்துக்கு அருகில் உள்ள பனைக்குளம் என்ற ஊரில் வாழ்ந்த தமிழாசிரியர் அப்துல் மஜீது அவர்கள். இந்தச் சாற்றுக்கவியில் சிவபெருமான் புகழ் முருகன் பெருமை, நூலாசிரியர் அருணகிரிநாதர் சிறப்பு எல்லாம் மிக அழகாகப் பாடப்பெற்றுள்ளன. அப்பர் பெருமான் பாடுவது போலச் சிவபிரான் புகழை அப்துல் மஜீது பாடுவது போற்றத்தக்கதல்வா? சமயம் கடந்த தமிழ் எல்லோரையும் இணைத்துவிட்ட பொற்காலம் அக்காலம். சந்திரன், மழு, மான், புலித்தோல், பாம்பு, திருநீறு, முக்கண் காதில் குழை, கழுத்தில் நஞ்சு, விரிந்த சடை தலைமேல் கங்கை, இடப்பாகத்தில் உமையாள் என்று எல்லாவற்றையும் இணைத்துப் பாடுகிறார் இந்த அப்துல் மஜீது. இந்தச் சாற்றுகவியில் இக்கவிஞர்

வெண்சுடரும் மழுமானும் புலித்தோலும் பொறியரவும் விளங்கு நீறும்
கண்மூன்றும் குழையணியும் கடுக்கையொடு விரிசடையும் கங்கை மேலும்
பண்ணுமையாள் இடப்பாகன் எதிர்மந்தி ரம்பகர்ந்த பரன் பினாங்குத்
தண்ணீர்மலை வாழ்முருக வேளின்மேல் அன்பர்சிலர் தமிழ்ப்பா வேண்ட

விஞ்சையெனும் கடல்புக்கு விழைவுண்டு முறைதழீஇ விதிநூல் என்னும்
அஞ்சமுதும் இலக்கியமும் அகப்பொருளும் ஆய்ந்துதெளிந்து அதனுக்கேற்ப
மஞ்செனவான் எதிர் நோக்காப் பொழிவதுபோல் பாவாணர் மதிக்கும் ஓர்நூல்
பஞ்சரத்னப் பாமாலை எனும் பெயர்தந் தமுதமெனப் பணித்திட் டானால்

என்று பாடுகிறார். இது போல மலேயா நக்கீரர் எனப் புகழ்பெற்ற
சித்த பால கெந்தக சிவம் என்பவர் இந்நூலை

கண்டார் களிக்கக் கவினார் பினாங்குநகர்
வண்டாடும் தண்ணீர் மலையான்மேல் - தொண்டரெலாம்
பாடி அருள்பெறவே பஞ்சரத்னப் பாமாலை
பாடிஇசை பெற்றுயர்ந்தான் பார்

என்று பாராட்டுகிறார். இந்நூல் பினாங்கு கணேச அச்சு எந்திரசாலையில் கலியுகாதி 5031 ஆம் ஆண்டு பிரமோ தூத ஆடி மாதம் பத்தாம் தேதி அச்சிடப்பெற்றுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

**நூல் அமைப்பு**

காப்புச் செய்யுட்களாக விநாயகர், மரபாசிரியர்கள், கலைமகள் திருமகள், திருமால், பரசிவை, பரசிவம், தண்ணீர் மலை முருகன் ஆகியோர்மீது பத்து வெண்பாக்கள் பாடப்பெற்றுள்ளன. (முருகன், அகத்தியர், நாராயண தேசிகர், மணவாள தேசிகர் ஆகியோர் குருபரம்பரையினர் ஆதலின் அவர்கள் மரபாசிரியர்களாகக் குறிக்கப்படுகிறார்கள்) இதையடுத்து

1) சென்னி முடி மின்னவொளிர் தண்ணீர்மலை முருகனிரு
செஞ்சரணம் செஞ்சில்நினைவாம் என்றும்
2) செங்கஞ்ச மலர்வாடை தங்கும் பினாங்குநகர்
திகழ்தண்ணி மலைமருகனே என்றும்
3) திருவாழ் பினாங்குநகர் பெருவாழ்வு பெறவந்து
திகழருவி மலை முருகனே என்றும்
4) தண்ணீர்மலைச் சிகரமதில் கண்டேனே என்றும்
5) தண்ணீர்மலை (நிமலா எனக்கு) அருளே என்றும்
6) தண்ணீர்மாமலை வேலவா சிவ சண்முகா அருள்தாருமே என்றும்

முடியக்கூடிய மகுடத்துடன் கூடிய விருத்தங்கள் ஒவ்வொரு மகுடத்துக்கும் ஐந்து ஐந்தாக முப்பது பாடல்கள் உள்ளன. இதைத்தொடர்ந்து ஐந்து கீர்த்தனைகள் உள்ளன. இறுதியில் முருகன் நாமாவளி, வாழ்த்து என்பவையோடு இச்சிறுநூல் நிறைவடைகிறது.

**சில நயமான பாடல் பகுதிகள்**

நூல் தொடங்குமுன் இறைவணக்கமாகச் சிலவெண்பாக்களை மிகவும் அழகாகப் பாடியுள்ளார் ஆசிரியர். பரசிவை வணக்கம் கூறும் போது

அம்மையப்பா என்றே அழுதபிள்ளைக்கு அன்று உவந்து
செம்மை முலைப் பால்கொடுத்த தேவியே - எம்மையும்நீ
காக்கக் கடனிலையோ காரணீயெ! உன்னடிமை
வாக்கிலுமப் பால்புகட்டு வாய்.

என்று பாடுகிறார். "எல்லாவற்றுக்கும் காரணமான தேவியே! திருஞானசம்பந்தப் பிள்ளைக்குத் தந்த ஞானப்பாலை எனக்கும் தா" என்று கேட்டு, அம்மையின் அருள்பெற்று இப்பாடல்களைப் பாடுகிறார். முருகனை வணங்கும் போது



வேலேந்தி நின்றகுக! மெய்ஞ்ஞானத் தேவே! நின்
காலேந்தும் அன்பர் கவிமாலை - மேலேந்தி
நின்றனையே! தண்ணிமலை நேய! எந்தன் பாத்தொடைநின்
குன்றனைய தோள் அதனில் கொள்.

என்று முருகனுடைய திருத்தோள்களுக்குச் செந்தமிழ் மாலை சூட்டுகிறார். விநாயகன், பிரமன், திருமால், சிவபிரான் என்றும் அவரவர் மனைவியர் என்றும் பலவேறு வடிவங்கள் எடுத்து வருபவன் பரம்பொருளான முருகனே என்பதையும் மனிதரும் தேவரும் ஆகி நிற்பவன் அவனே என்பதையும்

ஐங்கரனார் வேதன் அரி அரனும் அவ்வவர்கள்
மங்கையரு மாகிநரர் வானவராய் - எங்கெங்கும்
தானாகி நிற்குமொரு தத்துவமே தண்ணிமலைக்
கோனாகி நிற்கும் குகன்.

என்று குறிப்பிட்டுப் பாடிக்குகன் பெருமை பேசுகிறார்.

ஆன்மாக்களுக்கு நான்கு வகைத்தோற்றங்கள் உண்டு.

1) பறவைகள், ஊர்வன, நீர்வாழ்வன ஆகியவை முட்டையில் பிறப்பவை. இதை அண்டம் என்பர்.

2) புழு, பேன், விட்டில் ஆகியவை வியர்வையில் தோன்றுவன. இதைச் சுவேதசம் என்பர்.

3) தாவரங்கள் விதை, வேர் ஆகியவற்றில் தோன்றுவன. இதை உற்பிச்சம் என்பர்.

4) தேவர், மனிதர், நாற்கால் விலங்குகள் ஆகியவை கருப்பையில் தோன்றுவன இதைச் சராயுசம் என்பர்.

தேவர், மனிதர், நாற்கால் விலங்கு, பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாவரங்கள் என்று எழுவகைப் பிறப்புக்களை உடைய ஆன்மாக்கள் எண்பத்து நாலு லட்சம் யோனிகளில் (பிறப்பிடங்களில்) தோன்றுகின்றன. இப்படிப் பிறக்கும் ஆன்மாக்கள் விளைவறியாமல் செயல்பட்டு வேதனை அடைந்து நரக சொர்க்கங்களில் இருக்கின்றன. இவற்றை வாழ்விக்கத் தண்ணிர்மலை முருகன் சிவமாகி வருகின்றான். இளமங்கையர் நடமாடும் பினாங்கு நகர் ஓங்கவும், அங்கே தொழில் புரியும் நகரத்தார்களாகிய தனவணிகர் ஓங்கவும் திருவருள் புரியும் முருகன் திருவடிகளை நெஞ்சில் நினைப்போம் என்று பாடுகிறார் கவிஞர்.

நால்வகைய தாம்பிறப்பு, எழுதோற்றம், எண்பத்து
நான்கு நூ றாயிரமதாய்
நவில் தேவ மனிதரோடு பசுபட்சி முதலான
நானா விதங்களாகி
மேல்வகையது ஏதொன்று அறியாம லே கன்ம
வினைவயம தாகிநின்று
வெகுவேக வளியாலே சுழலுகாற் றாடிபோல்
மெலிவாகியே உழன்று
மால் வகைய தாகிமேல் நிரயசொர்க் காதிகளில்
வருபோக மதுவருந்தி
மதுவுண்ட வண்டென மயங்கி உழல் கின்ற எமை
வாழ்விக்க நின்ற சிவமே!
சேல்வகை மின்னார் சூழ் பினாங்குநகர் ஓங்கவரு
செந்தமிழர் வணிகர் ஓங்கச்





சென்னிமுடி மின்னவொளிர் தண்ணீமலை முருகன் இரு
செஞ்சரணம் நெஞ்சில் நினைவாம்.

என்ற பாட்டில் பினாங்குமாநகரின் முன்னேற்றத்திற்குக் காரணமாக இருப்பவர்கள் செந்தமிழ் வணிகர்களே என்பதைக் காட்டுவது போல "பினாங்கு நகர் ஓங்கவரு செந்தமிழர் வணிகர் ஓங்க" என்று பாடுவது நம் தமிழர் பெருமைக்கும் உழைப்புக்கும் சரித்திரச் சான்றாகத் திகழ்கிறது. முருகனிடம் என்ன கேட்கவேண்டும் என்பதை

ஐயநின் பெருமைகண்டு அணுகாத பேயர்பால்
அணுகா திருக்க வேண்டும்.
அழக! நின் அடிபரவும் அடியார்கள் நேயமதை
அகலா திருக்க வேண்டும்.
கையார மலர்தூவி முப்போதும் அர்ச்சித்துக்
கைகூப்பி நிற்க வேண்டும்.
காலார நின்கோயில் வலம்வந்து நின்புகழ்
கனிவோடு பாடவேண்டும்
மெய்யார நிற்பணிந்து உள்ளநெக் குருகியே
விழிநீர் பெருக்க வேண்டும்
வேலுமயில் வேலுமயில் வேலுமயில் என்றடிமை
மிகுகவிதை பாடவேண்டும்.
செய்யநற் கொடி வேலும் ஆடமயில் ஆடநீ
சேவைதந் தாள வேண்டும்.
செங்கஞ்ச மலர்வாடை தங்கும் பினாங்குநகர்
திகழ்தண்ணி மலைமுருகனே.

என்று ஆசிரியர் பாடும்பொழுது வேலும் மயிலும் வேலும் மயிலும் என்று வாயாரக் கூவத் தோன்றுகிறதல்லவா? இது மந்திரச் சொல்

ஆலும் வேலும் பல்லுக் குறுதி
நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி
பாலும் தேனும் உடலுக் குறுதி
வேலும் மயிலும் உயிருக் குறுதி

என்பது கிருபானந்த வாரியார் பொன்மொழி. மற்றொரு பக்தர், செந்தூரில்,

எழும்போதும் வேலும் மயிலும் என்பேன். எழுந்தே மகிழ்ந்து
தொழும் போதும் வேலும் மயிலும் என்பேன். தொழுதே உருகி
அழும் போதும் வேலும் மயிலும் என்பேன். அடியேன் உடலம்
விழும் போதும் வேலும் மயிலும் என்பேன். செந்தில் வேலவனே.

என்று பாடியதும் நம் நினைவில் தோன்றுகிறது.

மற்றொரு பாடலில் முருகனை வருக வருக என்று பக்தி யோடு அழைத்துப் பாடுகிறார் இந்த அருணகிரிநாதர். இது பக்திச் சுவை நனி சொட்டச்சொட்டப் பாடிய பாடலாக அமைகிறது. படித்தால் கண்ணீர் வரும். கந்தனும் வருவான்.

தலைவனே வருக என் சாமியே வருகமுத்
தையனே வருக வருக
சண்முகா வருக என் தந்தையே வருக உமை
தனயனே வருக அரசே.



அலைமோது செந்திலம் பதியனே வருக என்
ஆருயிர்த் துணைவ வருக
அருமறைகள் ஓலமிட்டு அறியாத சச்சிதா
னந்தமே வருக வருக
மலையார்ந்த பன்னிரு புயத்தனே வருக மால்
மருகனே வருக எங்கள்
வள்ளிதெய் வானை மணவாளனே வருகமயில்
வாகனா வருக வருக
சிலையார்ந்த வேற்படைச் செம்மலே வருக என்று
ஏங்குமடி யார்க்கருளுவாய்
செங்கஞ்ச மலர்வாடை தங்கும் பினாங்குநகர்
திகழ்தண்ணி மலை முருகனே




இறைவனைப் பாடும் பொழுது மனத்தில் நினைக்க வசதியாக அவன் திருமேனி அழகைப் பாடுவது கவிஞர்களின் பழக்கமாகும். அதன்படி முருகன் அழகைக் கேசாதி பாதமாகத் திருமுடியில் தொடங்கித் திருவடிவரை பாடுகிறார். இந்தப் புலவர் இது வடமொழியில் தியான சுலோகம் எனப்படும்.

செம்பொன்நவ ரத்ன மணி மகுடம்ஓளிர் சென்னியும்,
திகழுமதி வதன அழகும்,
தீராத வினையெலாம் தீர்த்தருள வல்லதோர்
செந்தா மரைக்கண் அழகும்,
தம்பிரானார்க்கு அரிய பிரணவப் பொருளதைச்
சாற்றுகனி வாயின் அழகும்,
சதுர்முகப் பிரமனைக் குட்டிய கரத்தினில்
தாங்குவடி வேலின் அழகும்,
வம்பவிழ் கடம்பமலர் மாலையணி மார்பில் ஒளிர்
மணிஉருத் ராக்க அழகும்,
வளமருவு சிற்றிடையின் வாமபா கத்தினில்
வைத்தவொரு கையின் அழகும்,
செம்பதும் பாதமலர் அழகினையும், நாயினேன்
சேவிக்க அருள்புரிகுவாய்
திருவாழ் பினாங்குநகர் பெருவாழ்வு பெறவந்து
திகழருவி மலைமுருகனே.

என்பது முருகன் வடிவழகை மொழியும் திருப்பாடல். இதுபோல, "இறைவா! கல்லும் கழுதையும் புல்லும் புழுவும் கூடப் பிறர்க்குப் பயன்படும். நான் எதற்கும் பயன்படாமல் போய்விட்டேனே" என்று வருந்துகிறார் புலவர்.

கல்லாய்ப் பிறக்கினும் ஐயநின் ஆலயம்
கட்டுதற்கு உதவி யாகும்.
கழுதை உரு வேற்கில்நின் ஆரா தனைக்குரிய
கற்பூரச் சுமை எடுக்கும்.
புல்லாய்ப் பிறக்கினும் பசுவினுக்கு உணவாகிப்
புனிதவெண் ணீறதாகும்.

புழுவாய்ப் பிறக்கினும் மயிலாதி பறவைகள்
புசிக்கு மோர் உணவுமாகும்.
அல்லாமல் புலியாய்ப் பிறக்கினும் இறந்தபின்
அருந்தவர்க்கு ஆசனமதாகும்





ஆனாலும் இப்பிறவி ஏற்றதால் ஓர் உயிற்கு
அணுவளவும் நன்மையுண்டோ?
செல்லாத காசுபோல் இன்னும் நான் உலகினில்
செனிக்காமல் அருள்செய் யரசே!
திருவாழ் பினாங்குநகர் பெருவாழ்வு பெறவந்து
திகழ் அருவி மலை முருகனே.

செல்லாக்காசாக நான் ஆகிவிட்டேனே என்று வருந்தும் கவிஞர், இந்தத் தீவினையை மாற்றுபவன் தண்ணீர்மலை முருகன் என்பதை உணர்ந்து

சொல்லாதிச் சொற்சுவையாய்ச் சொற்பொருளாய்ச் சொற்பயனாய்
எல்லாமாய் அல்லவுமாய் எங்குநிறை பூரணனாய்ப்
பொல்லாத பிறவிமயல் போக்கவந்த புண்ணியனைச்
சொல்லார்ந்த தண்ணீர்மலைச் சிகரமதில் கண்டேனே.

என்று பாடுகிறார். முருகா என அழைத்துத் தமிழ் பாடினால் அவன் வருவான் என்பதை உணர்ந்தவராதலின், சிவகுருவான முருகனைத் தமிழ் உருவாய்க் கண்டு, உனையறிவார் உனை அடைவார் என்கிறார்.

முருகா என மொழிவார் பவம் முழுதும் பொடிப்பொடிசெய்
அருமாமறை முடிவே! உனை அறிவார் உனையடைவார்.
குருமாமுனிக் குருவே சிவ குருவே தமிழ் உருவே
திருவாருநல் தண்ணீர்மலைத் தேவேஎனக் கருளே.

என்று பாடுகிறார். மண்ணினில் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும் அண்ணலார்தமை வணங்குவதும் அவர்திருவிழாக் காண்பதும், அடியார்களை வணங்குவதுமே என்று திருஞானசம்பந்தர் பாடுவதை மனத்தில் கொண்டு

மண்ணினில் பிறந்தார் பெறும்பயன் மாமறை முடி வாம்குகன்
தண்ணருள் பெறும் மாதவர் மொழி தான் கடைப்பிடித்துய்வது என்று
எண்ணில் ஆகமம் ஓதியும் சிறிது ஏழையேன் அறிந்து ஆற்றிலேன்.
தண்ணிமாமலை வேலவா! சிவ சண்முகா! அருள்தாருமே

என்று முருகன் அடிபணிந்து அருள் வேண்டுகிறார். அப்பரடிகள் சிவபெருமான்மேல் திருவங்க மாலை பாடியது போல இவர் தண்ணீர் மலை முருகன் மேல் திருவங்க மாலை பாடுகிறார்.

தலையே! நீ வணங்காய் தண்ணீர் மாமலை வேலவனைத்
தலையாய வரம் தந்தருள் செய்வானைத் (தலையே)

கண்காள்! காண்மின்களோ! கலிகால வரதன் தன்னை
மண்கால், தீ, புனல், வான் கதிர் ஆனானைக் (கண்காள்)

செவிகாள்! கேண்மின்களோ! தெய்வ யானை மணாளன் தமிழ்க்
கவிமாலை புனை கந்தப்பனின் புகழ் (செவிகாள்)

மூக்கே! நீ முரலாய் முரு கார்மலர் வாடை என்றும்
தேக்கா ஆனந்தச் சேய்மலர்த் தாளினை (மூக்கே)

வாயே! வாழ்த்துகவே! குற வள்ளி மணாளன் தன்னை
பேயோ டாடிய பிஞ்ஞகன் பாலனை (வாயே)



நெஞ்சே! நீநினையாய்! நெற்றிக் கண்ணில் உதித்தவனைச்
செஞ்சே வல்கொடிச் செல்வனை எப்போதும் (நெஞ்சே)

கைகாள்! கூப்பித்தொழீர்! கதிசேர்க்கும் தலைவன் தன்னை
வைதார்க்கும் பெரு வாழ்வருள் செய்தானைக் (கைகாள்)

கால்காள்! சூழ்மின்களே! காலை மாலை எப்போதும் சென்று
வேலேந்தும் மயில் வீரன் திருக்கோயில் (கால்காள்)

இப்படித் தண்ணீர்மலை யாண்டவனைத் தமிழால் பாடி மகிழும் கவிஞர் அவன்மீது சில கீர்த்தனைகளும் பாடுகிறார். அதன்பிறகு

தண்ணீமலைக் கரசானவனே
தாசரைக் காத்திடும் சண்முகனே
பினாங்கு நகர்க் கிறையானவனே
பேரானந்தம் அருள்குகனே

என்று நாமாவளியும் பாடி நூலை நிறைவு செய்கிறார். இறுதியில் வாழ்த்துப் பாடும்பொழுது மகாத்மா காந்தியையும் பாரதவீரர்களையும் இணைத்து

மன்னுயிர் எல்லாம் வாழ்க! மறைநெறி வழாது வாழ்க!
பன்னருங் காந்தி வாழ்க! பாரத வீரர் வாழ்க!
பொன்னி வாழ் பினாங்கு வாழ்க! புவியெலாம் ஓங்கி வாழ்க!
இன்னமுதான வேலன் இணையடி வாழ்க மாதோ

என்று பாடி நிறைவு செய்கிறார். கவிபாடும் ஆற்றலும் கந்தனைத்தேடும் நெஞ்சமும் கொண்ட இந்த நூலாசிரியர், சுவாமி அருணகிரிநாதர் என்ற பெயரைப் பெற்றதால், அதற்கேற்ப முருகன் திருப்புகழ் பாடுவது அறிந்து இன்புறத்தக்கது சுமார் எண்பதாண்டுகளுக்கு முன் பாடப்பெற்ற இந்நூலை, மீண்டும் அச்சிட்டுத் தண்ணீர் மலையான் திருவடிகளில் அணிவிப்பது நம் தலையாய கடமையாகும். முருகனும் தமிழும் பிரிக்க முடியாதவை. முருகனால் தமிழுக்கு அழகு, தமிழால் முருகனுக்கு அழகு. இதை உணர்ந்து பாடிப் பரப்புவது நமக்கு அழகும் பெருமையும் ஆகும்.







# வேலுண்டு வினையில்லை

***திருமதி புலவர் சுசீலா கிருஷ்ணப்பன்***, கிள்ளான்

"வேலுண்டு வினையில்லை"
"மயிலுண்டு பயமில்லை"
"குகனுண்டு குறைவில்லை"

என்பது ஆன்றோர் வாக்கு.

தனக்குத்தானே மகனாகிய தத்துவன்; தனக்குத்தானே அருங்குருவாகி; தனக்குதானே அருட்தத்துவம் கேட்ட எல்லாம் வல்ல எம்பெருமானாகிய சிவபெருமான் உலகை உய்வித்தற் பொருட்டு, கருணைகூர் முகங்கள் ஆறும், கரங்கள் பன்னிரண்டும் கொண்டு உதிக்க வைத்த அவதாரம் முருகக் கடவுள்.

குழந்தைகளுக்குப் பாலகனாக; இளையவர்களுக்குக் குமரனாக; பெரியோர்களுக்கு ஆறுமுகனாக; வீரர்களுக்குத் தேவசேனாதிபதியாக; இல்லத்தாருக்கு வள்ளி, தெய்வானை மணவாளராக ஞானிகளுக்கு, ஞான பண்டிதனாக; துறவிகளுக்கு ஆண்டியாக; பக்தர்களுக்குத் தண்டாயுதபாணியாக அவரவருக்கு ஏற்ற நிலையில் அருள்புரியும் முருகனை வேலனாக வழிபடுவதோடு; வேலை மட்டுமே வைத்து வேல் இருக்கும் இடத்தில் முருகன் அருள்கிட்டும் என வழிபாடும் நடத்தப்படுவது நாம் அறிந்ததே.

"வேலும் மயிலும் துணை" எனப் பிரிக்காமல் ஓதுவது தமிழர்களின் பண்பாடு. மயிலேறும் பெருமானை "மயில் வாகனன்: என்றும் "மயிலவன்" என்றும்; சேவலை கொடியாகக் கொண்டதனால் "சேவற்கொடியோன்" என்றும், வேல் ஏந்தியதால் 'வேலவன்'; வேலன்; வேற்படையான் என்றும் போற்றப்படுகின்றான். மனமாகிய குகைக்குள்ளும் இருக்கின்றதால் 'குகன்' ஆகிறான். இதை உணர்ந்தால் நமக்கு என்றும் குறைவில்லை.

முருகனின் திருஅவதாரத்தின் முதற்காரணம் அசுரசங்காரம். இரண்டாவது காரணம் உயிர்கள் அடையும் உய்வு. இந்த இரண்டிற்குமே காரணமாகவும், கருவியாகவும் இருந்ததும்; இருப்பதும் முருகனின் திருக்கைவேல், "வேல்; வேல்" என்று சொல்லும் பொழுதே 'வீரம்' எழுகிறது. "வெல்" என்ற அடிப்படையே அதற்கு வித்தாகிறது. மாமரமாகி, கடலின் அடியில் நின்ற சூரபதுமனை; முருகனால் ஏவி விடப்பட்ட வேல் சீற்றத்துடன் சென்று மாமரத்தை இருகூறாகப் பிளந்ததும், அவை இருகூறாகி சேவலும், மயிலும் ஆயின என்று கந்தபுராணம் வரலாறு கூறுகின்றது. ஒரு பாதியான 'நான்' என்ற அகங்காரமும், மற்றொரு பாதியான எனது என்ற மமகாரமும் அடக்கப்பட்டதே 'சூரசம்காரம்' ஆகும். தன்னை அடைந்தோருக்கு அபயம் கொடுக்கும் முருகன் சேவலைக் கொடியாக; மயிலை வாகனமாகக் கொண்டு அருள்புரிந்து தன்னேரிலாத் தத்துவத் தலைவனாகிறான். தனக்கு உதவிய வேலை மார்பில் அரவணைத்து அன்பு காட்டும் பண்பு; செய்நன்றி மறவாச்சிந்தையும் செயலும் கடவுள் அவதாரத்திற்கும் உண்டு; மக்களும் இதைப் பின்பற்றவேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துவதாக அமைகின்றது. அதனால்தான் வேலை மட்டும் கூடத்தனியாக வைத்து வழிபடலாம். ஆனால் முருகனிடத்தில் வேல் இல்லாமல் வழிபடக்கூடாது என்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

கந்தபுராணம், கந்தனின் கருணையையும்; வேலின் வெற்றி மகத்துவத்தையும்; பற்பல இடங்களில் விவரித்து வரலாற்றைக் கூறுவதோடு தத்துவங்களை உணர்த்தும் அருள்நூலாக மிளிர்கின்றது. மாயைக்கும், காசிப முனிவருக்கும் பிறந்த ஆண்மக்கள் சூரபதுமன், சிங்கமுகன், தாரகன் மூவரும் தவம் புரிந்ததில் கடுந்தவம் புரிந்ததன் பயனாக சூரபதுமன் ஆயிரத்தெட்டு அண்டங்களையும்



நூற்றெட்டு சதுர்யுகங்கள் ஆள அழியா அதே உடலுடன் இருக்கும் சாகா வரம்பெற்று விடுகிறான். ஆணவமே உருவான சூரபதுமன் மேலும் கர்வமுற்று தற்போதம் தலைக்கேற எல்லா உயிர்களுக்கும் இன்னல் கொடுத்துவர, தேவர்கள் இறைவனிடம் சரண் அடைய, அசுரர்களை அழிக்க; உயிர்களைக் காக்க; இறைவனின் நெற்றிக்கண்ணின் தீப்பொறிகளின் சக்தி ஆறாவதான அதோமுகமும் கொண்டு 'சிவ பால உருவில் ஆறு குழந்தைகளாகத் தோன்ற; அதை அக்கினியும் வாயுவும் கங்கையிலிருந்து எடுத்து, சரவணப் பொய்கையில் விட அவர்களைக் கார்த்திகைப் பெண்கள் எடுத்து வளர்க்க; அன்னையினால் ஒன்று சேர்க்கப்பட்டு கந்தன் ஆனான்.

பல நாமக்காரனாகிய முருகனுக்குப் பல படைக்கருவிகளும் வேலும் கொடுத்து, சிவமெருமான் முருகனுக்கு வேலினால் செய்ய வேண்டிய வேலைகள் பற்றி விளக்கிச் சொல்லியதாகவும் கந்தபுராணம் கூறுகின்றது. போர்புரியச் சென்ற வேலவனுக்கு வேல் கொடுக்கப்பட்டது என்பது வெளிப் படையான கருத்து. சாத்திரக் கருத்துப்படி ஆணவம், கன்மம், மாயா மலங்களான மூன்றும் சூரபதுமன், சிங்கமுகன் தாரகன் என்ற மூவரையும் குறிப்பதாகிறது. சித்தாந்தக் கருத்துப்படி ஆணவம் என்றுமே அழியாது. ஆனால் நீங்காத ஆணவம் அடங்கும். மற்ற இரண்டில் தாரகன் மாயாமலம். அதனால்தான் போரின் போது மாயமலையாகிய கிரௌஞ்ச மலைக்குள் அவுணர்களாகிய அசுரர்களோடு ஒளிந்து கொள்கிறான். போர் புரிய வருபவர்களை, மாயையினால் வென்று விடலாம் என்ற இறுமாப்பும் கொள்கிறான். அகத்தியரைப் போகவிடாது வழிமறித்து மலையாகி நின்ற கிரெஞ்சனையும், தாரகனையும், ஒளிந்திருந்த அசுரர்களையும் முருகனது வேல் சென்று அழித்தது. அப்பொழுது வேல் மதிசூடும் தூயவன் விழி அழல் போல ஒளிப் பிழம்பாய் தகதகத்தது என்கின்றது புராணம். "சிறந்திடு மாய வெற்பைத் திருக்கைவேல் பொடித்தகாலை; பிறந்திடுகின்ற தீயைத் தீயெனப்பேசலாமோ? எனக் கச்சியப்பர் கேட்கிறார்.

விருப்பு, வெறுப்புகளுக்கு இடம் கொடுக்கும் பாசத் தொடர்பினால் மெய்யுணர்வு வழி எது என்று தெரிந்தும் அதில் செல்லவிடாது; தடைப்படுத்தும், இரண்டாவதான கன்மமலம். இதையே சிங்க முகனின் தன்மையாக, புராண வரலாற்றில் அறிகிறோம். மெய்வழி செல்லநினைக்கும் சிங்க முகன், சூரபதுமனிடம் போரிட வேண்டாமென்றும், வானவரை விடுதலை செய்யும்படியும், 'முருகன் முழுமுதற் கடவுள்' அவர் கோபத்திற்கு ஆளாகக் கூடாது என்று கூறினாலும் இறுதியில் தந்தை நிகர் தமையனை மீற முடியாமல், பின்னும் இங்கு இருந்திடல் பிழையதாகும்' எனப் போர்க் கோலம் பூண்டு செல்கிறான். இறைவனின் தன்மையை உணர்ந்தவன். ஆதலால் அவனைக் கொல்ல வேலைவிடுக்காமல், குலிசைப் படைக்கருவியான தண்டத்தைக் குமரன் விடுக்க, அது அவன் உயிரைக் கொல்கின்றது. மாயையும் கன்மமும் நீங்கிவிடுவது போல ஆணவம் நீங்குவதில்லை. அதனால்தான் போரில் தன்னைப் பாலகன் என்று என்னி நகைத்த சூரபதுமனிடம், "காட்டும் உபகாரம்", காணும் உபகாரம்" என இரண்டு உதவிகளைச் செய்து தன் முழுமுதற் பேருருவத்தைக் காட்டுகின்றான் முருகன். பாலன் பயப்படுவான் என்று 'சக்கரவாளம்' என்ற பெரிய பாம்புருவங்கொண்டு விழுங்க வந்தபோது இந்திரனை மயிலாக்கி அதன்மீது அமர்ந்து, முழுமுதல் உருவம் காட்டியபோது, "மாலயன் தனக்கும் ஏவன வானவர் தமக்கும், யார்க்கும் மூலகாரணமாய் நின்ற மூர்த்தியன்றோ" என்று காணும் உபகாரத்தால் உணர்ந்து சூழுதல் வேண்டும் தாள்கள்; தொழுதிடல் வேண்டும் அங்கை; தாழுதல் வேண்டும் தலை; துதித்திடல் வேண்டும் தாலு; ஆலுதல் வேண்டும். தீமை அகன்று நான் இவற்கு ஆளாகி வாழுதல் வேண்டும்" என்று பக்தியுணர்வு வந்து சிறிது நேரம்மெய் மறந்தாலும், மயிலைப் பார்த்துப் பயந்து தலையை தொங்கப் போட்டாலும், பக்தியுணர்வில் நிலைத்துவிடாது இருக்க அகங்காரம், மானம் என்ற பெயரில் மாறி தடுத்தது. மீண்டும் சண்டையிடவே எய்யும் சூரபதுமன் கோபம் அதிகமாகி மாமரமாகி கடலுக்கு அடியில் நின்றான். சூரபதுமனுக்கு அருள நினைத்த முருகன் "இங்கிவன் ஆகம் போழ்ந்து ஏகுதி இமைப்பின்' என்று சொல்ல வேல் சீற்றத்துடன், அகலக் கடலில், ஆழமாகச்சென்று, மாமரத்தை இரண்டாகப் பிளந்து இரண்டு கூறாக்கி விட்டு விண்ணுக்கு மேல் நோக்கிச் சீற்றத்துடன் வந்த வேலை சீற்றம் தணியதேவர்கள் மலர்தூவி வாழ்த்தினர். தீவடிவாகி இருந்த வேல் சீற்றம் தணிவதற்காக கங்கையில் குளித்து சீற்றம் தணிந்து அருள் பெற்ற வடிவாகி முருகனிடத்து வந்து சேர்ந்தது என்கிறது புராணம்.

இருகூறாகியது சூரபதுமனின் உடல். ஒரு உடலில் இரண்டுயிர் பொருந்தப் பெற்ற சிறப்பும், இரண்டு பெயர் சேர்ந்திருக்கும் சிறப்பும் உடையவன் சூரபதுமன். "ஒரு பேருருவின் இருபேர்

யாக்கை பெற்றவன்" ஆதலால் உடல் இருகூறாகியதும் இரண்டு உயிர்களும் தனித்தனியாக சேவலும் மயிலுமாகி முருகன் முன்வந்து நிற்க, தன்னை அடைந்தோருக்குத்தண்ணருள் தரும் முருகன் சேவலைக் கொடியாகவும்; மயிலை வாகனமாகவும் கொண்டார். 'சேவற்கொடியோன்'; 'மயிலோன்' என்றும் போற்றப்படுகின்றார். வேலால் முருகனுக்கு இப்பெருமை. அதனால்தான் 'வேலே விளங்குகையான்' என அநுபூதி கூறுகிறது. வேலின் வீரம் சங்கத்து இலக்கியங்களிலும் போற்றப்படுகிறது. 'நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே என இறைவனிடமே வாதிட்ட நக்கீரர் சங்க காலத்துப் புலவர். இவர் ஒரு நாள் திருப்பரங்குன்றத்துக்குளக்கரையில் சிவபூசை செய்து கொண்டு இருந்த பொழுது பக்கத்து மரத்திலிருந்து விழுந்த பழுப்பு இலை ஒன்று, பாதி மீனாகி நீரிலும், பாதி பறவையாகி நிலத்திலும் போக இங்கும் அங்கும் ஒன்றையொன்று இழுத்துக் கொண்டிருக்கும் புதுமைக் காட்சியில் அவர் கவனம் சென்றதால் சிவபூசைக்குப் பங்கம் வந்தது என்று குற்றம் சாட்டி 'கற்கிமுகி' என்ற பூதம் குகையில் அவரைக் கொண்டு போய் அடைத்தது. ஏற்கனவே அக்குகையில் தொளாயிரத்து தொண்ணூற்று ஒன்பது பேரை அடைந்திருந்த பூதம் இவரையும் சேர்த்து ஆயிரம் ஆனவுடன் அனைவரையும் உண்ணவேண்டும் என்ற எண்ணத்தை நிறைவேற்றக்காத்திருந்தது. அங்கு இருந்தவர்கள் நக்கீரரை வைது, உன்னால் இன்று எங்களுக்கு முடிவுநாள் ஆகப் போகிறது என்று கலங்கினர். இதனால் முருகனை நினைந்து, அருள்தரவேண்டி நக்கீரர் பாடல்களைப்பாடி வேண்டுகின்றார். அதற்குச் செவிசாய்த்த முருகன் வேலை அனுப்ப, வேல் துள்ளி ஓடிவந்து, குகையைப் பிளந்து பொடியாக்கி பூதத்தைத் தாக்கிக் கொல்ல, ஆயிரம் பேரும் காப்பாற்றப்பட்டனர்.

நக்கீரரால் அங்கு பாடப்பெற்ற பாடல்கள் வழிப்படுத்தும் நோக்கில் பாடப்பெற்றது. திருமுருகாற்றுப்படை சிறந்த அருள் நூலாக விளங்குகின்றது. இதனுடன் இறைவனுக்கும், காப்பாற்றிய வேலுக்கும் நன்றி செலுத்தி தனிப்பத்து வெண்பாப் பாடல்கள் தந்துள்ளார். வழிபாட்டுப் பாடல்களாக இன்றும் எல்லோராலும் சொல்லப்படும் தோத்திரப்பாடவ்களாகவும் உள்ளன.

"குன்றம் எறிந்ததுவும் குன்றப் போர் செய்ததுவும்
அன்றங்கு அமரர் இடர் தீர்த்ததுவும் - இன்றென்னைக்
கைவிடா நின்றதும் கற்பொதும்பிற்காத்ததுவும்
மெய்விடா வீரன் கை வேல்"

என்று வேலைப் புகழ்வதோடு,

"அஞ்சுமுகந் தோன்றில் ஆறுமுகந்தோறும்
வெஞ்சமரில் அஞ்சலேன வேல்தோன்றும் நெஞ்சில்
ஒருகால் நினைக்கில் இருகாலுந் தோன்றும்
முருகா! என்று ஓதுவார் முன்"

என்று நெஞ்சம் நெகிழ்ந்து கூறும் அவர்

"வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல் - வாரிக்
குளித்த வேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை"-என்று

வேலின் நன்மைச் செயலுக்கு நன்றி சொல்லி மகிழ்கின்றார். இப்படிப் புராணம்; சங்க இலக்கியங்கள் மூலம் அறியப்படுகின்ற வேலின்மகத்துவம் பற்றிப் பிற்காலத்திலும், இப்பொழுதும் கூட மகான்களாலும், பெரியோர்களாலும் போற்றப்பட்டுள்ளது. போற்றப்படுகின்றது என்பது உண்மையே. அருணகிரிநாதர் தம் திருப்புகழில் முருகனை மட்டுமில்லாமல் வேலையும், மயிலையும், சேவலையும் பற்றி வேல்விருத்தம், மயில்விருத்தம், சேவல் விருத்தம் என்று தனித்தனியாகவும், வேல் வகுப்பு, மயில் வகுப்பு என்றும் பாடல்கள் பாடியுள்ளார். மேலும் கந்தர் அலங்காரம், கந்தர் அந்தாதி, கந்தர் அநுபூதி என்ற நூல்களிலும் கந்தனைப் பாடுவதோடு, வேல், மயில், சேவல் பற்றியும் பாடியுள்ளார். "நாத, விந்து கலாதி நமோ என துதிக்கும் அருணகிரியார் நாதம் ஆகிய சேவலையும், விந்துவாகிய மயிலையும் ஞானம் ஆகிய வேலையும் உடைய முருகனை; 'ஆடும்பரிவேல் அனி சேவலெனப் பாடும் பணியே பணியாய் அருள்வாய்' என்று அநுபூதி பெற்று கந்தர் அநுபூதியில் முதற்பாட்டிலேயே பெற்ற வரத்தைத் தெரிவிக்கின்றார். ஊமையாயிருந்து,



திருச்செந்தூர் முருகன் அருளால் பேசும் அருள்பெற்ற குமர குருபரர் 'அச்சம் அகற்றும் அயில்வேல்' என்று கந்தர் கலிவெண்பா பாடுகிறார். இப்பொழுதும் கூட பழனிப் பாத யாத்திரை இரவு பகலாக நடந்து செல்லுபவர்கள் பயமின்றிச் செல்ல, வேலும், காவடியும் தூக்குபவர்கள் முன் செல்ல, நடப்பவர்கள் பின்னால் நடந்து செல்வதைத் தமிழ் நாட்டில் இப்பொழுதும் கண்கூடாகக் காண்கிறோம்.

'வழிக்குத் துணை வடிவேலும்; செங்கோடன் மயூரமுமே' என்று கந்தர் அலங்காரமும் ஒப்புக் கொள்கிறது. அருணிகிரிநாதரை, ஞானகுருவாக ஏற்ற பாம்பன் சுவாமிகள் ஆகிய குமரகுருதாச சுவாமிகள் தன்னுடைய கவசங்களில் வேலைக் குறிப்பிட்டுப் போற்றுகின்றார். சண்முகக் கவசத்தில், பூதப் பிரேத பைசாசங்களால் உண்டாகும் துன்பங்கள் அண்டாத படி 'அயில் வேல்' காக்கட்டும் என்று குறிப்பிட்டிருப்பார். 'அயில்வேல்' என்பது கூர்மையான வேல். ஞானக்கூர்மைமுன் அவைகளின் கைவரிசை பலிக்காது. இந்த நம்பிக்கையை புதுமைக்கவிஞன் பாரதியும், "வெற்றி வடிவேலவன்; அவனுடைய வீரத்தினைப் புகழ்வோம் சுற்றி நில்லாதே பகையே; துள்ளி வருகுது வேல் என்று பாடினார். மனிதர்களுக்கு வரும் நோய்கள் பற்றி பாம்பன் சுவாமிகள் ஒரு பட்டியலே சொல்லி, இந்த நோய்கள் வந்து வருத்தா வண்ணம் வேல் வந்து வாழ்விக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்கிறார். நவக்கிரகக் கோள் வருத்தாவண்ணம் வேல் காக்கட்டும்; அதோடு எல்லினும் கரிய மேனி எமபடர் வரினும் என்னை ஒல்லையில் தாரகாரி ஓம் ஐம் ஹ்ரீம் வேல் காக்க என்று மந்திர சொரூபமான வேலை மந்திரம் கூறி வேண்டுகிறார். மண்ணில், மரத்தில், நீரில், நெருப்பில் ஊர்தியில், விண்ணில் என்று எல்லா இடங்களிலும் துன்பம் வராதபடி வெல் காக்கட்டும் என்கின்றார். அவருடைய அருள்மிகுந்த கவசங்களைத் தினமும் படித்தால் வேலின் அருள் உண்மையாகக்கிடைக்கும் என்பது உறுதி. இவ்வளவு பெருமைகளுக்கும் உரிய வேல் தனிச்சிறப்பும் உடையது. இது மற்ற படைக்கருவிகளைப் போல் உடம்பை அழிக்கவும், காக்கவும் மட்டும் பயன்படாமல் உயிரினுள் கலந்து, உயிரை ஆட்டிப் படைக்கும் பெரும் பகையாகிய அஞ்ஞானத்தை அழிக்கவும் செய்யும் ஆதலால் இதற்குத் 'தனி' என்ற அடைமொழிச் சிறப்புக் கொடுத்து முருகன் தனிவேல்; சாடும் தனிவேல் என்றெல்லாம் போற்றப் படுகிறது. வேல் ஞான மயமானது. ஞானம் என்பது அறிவு. அறிவு மூன்று தன்மைகள் பொருந்தியது. 'ஆழம்', அகலம்', 'கூர்மை' உடையதாக அறிவு இருக்க வேண்டும். 'எதனையும் மேலோட்டமாக என்பதில்லாமல் ஆழமாக அறியும், ஆற்றல்; 'பரந்த தன்மை உடையதான அகலமான அறிவு, 'கூர்ந்து அறியும் நுண்மை அறிவு' இது மூன்றும் உடையதே பேரறிவு. எப்போதும் இந்த மூன்றும் இருக்கும் "இறைவனின் பேரறிவு". அதனால்தான் மணிவாசகர் "ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே", என்று திருவாசகத்தில் போற்றுகின்றார். வேலின் வடிவம் அதையே பிரதிபலிக்கின்றது. வேலின் அடிப்பகுதி ஆழ்ந்தும், இடைப்பகுதி அகன்றும், நுனிப்பகுதி கூர்மையாகவும் இருக்கிறது. அதனால் வேல் 'ஞானசக்தி' என்று போற்றப்படுகிறது. இறைவனைப் போல மறக்கருணை காட்டியும்; அறக்கருணை புரிந்தும், அருள் உருவாக இருப்பதனால் வேலே 'கடவுள்' என்று போற்றப்படுகிறது. வடிவேலும், முருகனாகிய செவ்வேளும் ஒன்றே என்பதால் "தோகைமேல் உலவும் கந்தன் சுடர் கரத்திருக்கும் வெற்றி வாகையே சுமக்கும் வேலை வணங்குவது எமக்கு வேலை" என்று சைவ எல்லப்ப நாவலர் 'செவ்வந்திப் புராணத்தில்' கூறுகிறார். அப்படிப்பட்ட வேல் முருகன் மார்பின்மீது சாற்றி வைக்கப்படுவதே சரியான முறை என்திறார்கள் பெரியோர்கள். 'விளங்கும் கை வேலோனே' என்று போற்றினாலும் கை கர்மேந்திரியம். அவயங்களைக் கொண்டு ஞானத்தைப்பெற முடியாது.

வேல் ஞானத்தின் வடிவம். மனப்பூர்வமாகத் தான் பெறமுடியும். எனவே வேல் மார்பில் சாற்றிவைக்கப்படுவதால், இறைவனின் மனப்பூர்வமாக ஞானத்தைப் பெறமுடியும். இறைவனின் திருக்கை அருளை குறிப்பதாகும். சூரபதுமனின் அஞ்ஞானமும் அகங்காரமும் அடங்கத்தான் சக்தி முருகன் கையில் ஆற்றலை வேலுக்குக் கொடுத்து கொடுக்கின்றாள். மகா மந்திரங்களை அதில் செலுத்தி, ஆற்றலைக் கொடுத்து முருகனிடம் கொடுத்ததால் சக்தி வேலாகிறது. அதுகொண்டு சூரசம்காரம் நடைபெறுகிறது. உலகனைத்தும் நாயகியால் செயற்படுத்தப்படுகிறது என்பது சாத்திரக் கருத்து. அதனால் மந்திர உருவேற்றி வாழ்த்தி தாய் சக்தி வேலாகக் கொடுக்கிறார். சிவபெருமானின் நெற்றிக் கண்ணிற்கு ஒப்பாக, அழிக்கும் போது அக்கினிப் பிழம்பாகவும் கருணைகாட்டும் போது அருளுருவாகவும் செயற்படுகின்ற வேலை, அசுரத்தன்மைகளையும் மாயா காரியங்களையும் நீக்கும். "தனிச்சுடர் வேல் நல்கியே மதலை கைக் கொடுத்தான்" என்று புராணம் சிவனால் முதலில் கொடுக்கப்பட்டு, சக்தியால் ஆற்றல் கொடுக்கப்பட்டதைத் தெரிவிக்கின்றது. சம்கார ஆயுதமாகவும் இரட்சிக்கும் ஆயுதமாகவும், மறக்கருணை, அறக்கருணையை

வெளிப்படுத்தும் வேல், உலக வாழ்வில் துன்பத்தை நீக்கும் வேலாக; பயத்தைப் போக்கும் வேலாக; பசிநீக்கும் வேலாக; எம பயம் அகற்றும் வேலாக; வழித்துணையாகும் வேலாக; இன்பம் தரவல்ல வேலாக; ஒப்பற்ற பெருமை மிகுந்த வேலாக இருப்பதால் 'வேலுண்டு வினையில்லை' என்று நம்பிக்கையுடன் வேல் வழிபாட்டை விடாது நாம் மேற்கொள்ள வேண்டும். உடலுக்கும், இந்த உடல்வாழும் உலகத்திற்கும் பெரும்பயன் தரக் கூடியது என்பது உண்மைதான். ஆதலால் 'வேலுண்டு வினையில்லை' என்று தோத்திரமாகச் சொல்லலாம். அது போதுமா? 'வேலுண்டு வினையில்லை' என்பதில் மாற்று பொருளும் அமைந்துள்ளது. அந்த மறைபொருள் என்ன? நாம் இந்த உலகில் உள்ள வாழ்க்கை வாழ்வதற்கு மட்டும் இலட்சியம் கொள்கிறோம். ஆனால் உடலுக்குள் உள்ள உயிருக்கும் இலட்சியம் உண்டு என்பதனை மறந்து உழல்கிறோம். உயிருக்கு உள்ள இலட்சியத்தைத்தான் நாவுக்கரசர் குறிக்கோள் இல்லாது கெட்டேன்' என்கின்றார். உலகத்து உயிர்களின் தன்மையை தன்மீது ஏற்றிச் சொல்வது பெரியவர்களின் பெருந்தன்மை. உடலுக்குள் உள்ள உயிர் தனக்கு மாயாமலம், கன்ம மலம் இரண்டும் நீங்க வேண்டும்; அஞ்ஞானம் நீங்கி ஞானம் பெறவேண்டும்; ஆணவமலம் அடங்கவேண்டும்; ஞான வடிவாய் பேரறிவில் ஒடுங்க வேண்டும்; பெருங்கருணை காட்டும் சிவபெருமான் அடி சேர வேண்டும் என்று விரும்புகிறது. இதுவே உயிரின் உன்னதக் குறிக்கோள். "செல்வர் சிவபுரத்தில் உள்ளார் சிவனடிக்கீழ்" என்பதே "உயிரின் குறிக்கொள்" என்று மணிவாசகரின் திருவாசகமும் உணர்த்துகிறது. உயிர் விரும்பும் குறிக்கோளை நிறைவேற்ற உடலும், உள்ளமும் இணங்கி ஒத்துழைத்து சரியை, கிரிணை யோக வழிபாடுகளைக் கடைப்பிடித்துவர 'யான்' 'எனது' என்ற பற்றுக்கள் குறையும்; மலங்கள் நீங்கும் அஞ்ஞானம் அகலும்; ஞானம் கிடைக்கும். 'ஞானம் பெறுதலே' இம்மைக்கும் மறுமைக்கும் அவசியம் ஆதலால் ஞானசக்தி ஆகிய 'வேல்வழிபாடு' சிறந்ததாகிறது. ஏனென்றால் வேலை உடைய முருகனும், முழுமுதற்கடவுளான சிவனும் வேறு பட்டவர்கள் அல்ல என்று சிவனே உமையிடம் சொல்வதாக

"நமது சக்தி அறுமுகன் அவனும் யாமும் பேதக மன்றால்
நம் போற் பிரிவிலன்; யாண்டு நின்றான்
எதமில் குழவி போல்வான்; யாவையும் உணர்ந்தான்
சீரும் போதமும் அழிவில் வீடும் போற்றினர்க்கு அருள வல்லான்"

எனச்சிவன் சொல்வதாகக் கந்த புராணம் பேருண்மையைக் கூறுவதால்; ஞானபண்டிதனாகிய முருக வழிபாடும்; ஞானம் தரும் வேல்வழிபாடும் மிகச் சிறந்தது ஆகிறது. இம்மைப்பயனும்; மறுமைப்பயனும் ஒருங்கு சேரக்கிடைக்கும் உயர்ந்த வழிபாடும் இது. ஆதலால் தோத்திரமாகவும்; சாத்திரமாகவும் 'வேலுண்டு வினையில்லை' என்று போற்றலாம். ஏனென்றால்

மூவிருமுகங்கள் போற்றி! முகம் பொழி கருணை போற்றி!
ஏவருந்துதிக்க நின்ற ஈராறு தோள் போற்றி! காஞ்சி
மாவடி வைகும் செவ்வேள் மலரடி போற்றி! அன்னான்
சேவலும் மயிலும் போற்றி! திருக்கைவேல் போற்றி! போற்றி!

என்று எல்லாவற்றிற்கும் ஒரு போற்றி சொன்ன கச்சியப்பர் "திருக்கை வேலுக்கு" இரண்டு போற்றிகள் சொல்லிப் போற்றுகின்றாரே ஏன்? 'அஞ்ஞானம் அகற்றி' 'ஆணவம் அடக்கி' என்ற இருவீரச் செயல்கள் செய்து முடிப்பது 'வெற்றிவேல்' என்பதனால் 'இரண்டு போற்றிகள்' சொல்லி மகிழ்ச்சி அடைகிறார். நம்மையும் மகிழ்ச்சியுறச் செய்கின்றார். வாழும் போதும் வேல் வழிபாட்டினால் வினைத்துன்பமின்றி இறைவனடி சேரலாம் என்பதை வாழும் பொழுதே உணர்ந்து பேரானந்தம் பெற வழி வகுக்கும் 'வேலனையும், வேலினையும்'

"ஆறிருந் தடந்தோள் வாழ்க! அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறு செய் தனிவேல் வாழ்க! குக்குடம் வாழ்க! செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க! யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க! வாழ்க-சீர் அடியாரெல்லாம்!"

வாழ்க! என வாழ்த்தி! வணங்கி! வாழ்வோம்! வெல்வோம்!

"வேலும், மயிலும் துணை!"
இன்பமே சூழ்க!



# தண்டாயுதத்தானைக் கொண்டாடு மனமே



ஆலோலம் பாடுகிற வள்ளியம்மை கழுத்தில்
அணியாரம் இட்ட பெருமான்
ஆகாயம் பூமியிடை நீராவிபோல் வடிவில்
ஆதாரமான பெருமான்

மேலாளர் கீழாளர் பேதங்கள் இல்லாது
மெய்யாள வந்த பெருமான்
மின்னாகி இடியாகி மழையாகிக் காற்றாகி
விளைவாக நின்ற பெருமான்

கோலாலம்பூரில் வளர்கோன் தண்டபாணி - இவன்
கோவில் கொண்டாடு மனமே
கூற்றேதும் வாராது கொடுநோயும் சேராது
குறையாத வாழ்வு மிகுமே



ஓ மென்ற சிறுமுட்டை உள்வீடு அவன்வீடு
உன்வீடும் அந்த இடமே
ஓசைக்கு மணியுண்டு பூசைக்கு மணமுண்டு
உன்வாழ்வு கந்தன் வசமே

நாமென்ற ஆங்காரம் நமதென்ற ஏக்காளம்
நடவாது வேலனிடமே
நடக்கட்டும் பார்ப்போ மென்றிருக்கட்டும் உன்உள்ளம்
நலம்யாவும் வீடுவருமே

கோமன்னன் வாழ்கின்ற கோலாலம்பூர் செந்தூர்
கொடிகட்டி ஆளவிடுமே
கொண்டாடு கொண்டாடு தண்டாயுதத் தானைக்
குறையாத செல்வமிகுமே

*- கவியரசு கண்ணதாசன்*

# கோலாலம்பூரில் ஒரு திருச்செந்தூர்

"கோயில் கலை மாமணி" "ஒன்பது நகரக் கோயில்கள் ஆய்வாளர்"
டாக்டர் வ. தேனப்பன், M.A., Ph.D., C.J., C.I.A., P.G.D.H.E., D.G.T.,
முன்னாள் தமிழ்ப் பேராசிரியர், ஸ்ரீசேவுகன் அண்ணாமலை கல்லூரி, தேவகோட்டை.

**தோரண வாயில் :**

கோலாகலமான அழகிய ஊர் கோலாலம்பூர். அந்தக் கோலாகலத்திற்கான காரணம் எது என்பதை அவ்வூர்ப் பெயரை ஆராய்ந்து பார்த்தாலே தெரிந்துவிடும். ஒரு கோல்தான், கோலாகலத்தை அள்ளி அள்ளித் தருகிறது.

கோல் + ஆல் + அம் + ஊர் என்ற தூய தமிழ்ச் சொற்களின் சேர்க்கையே, கோலாலம்பூர் என ஆகியுள்ளது. ஒரு கோலால் அழகினைப் பெற்ற ஊர் என்பது இதன் பொருள் ஆகும். அது, எந்தக் கோல் என்பதை விரிவாகக் கீழே காண்போம்.

**மலேசிய ஊர்களுக்கான தமிழ்ப்பெயர்கள் :**

"கடாரம் கொண்டான்" என்ற ராஜராஜ சோழனின் மெய்க்கீர்த்திக் கல்வெட்டுப் பெயரிலிருந்து, அவனுடைய ஆட்சி, மலேசியாவரை பரவியிருந்ததை அறிகின்றோம். அவ்வாறு பத்தாம் நூற்றாண்டிலிருந்தே தமிழும் சைவமும் தழைத்து வளர்ந்த பகுதி மலேசியா என்பதற்கான கல்வெட்டுச் சான்றுகள் கடா பகுதியில் முன்பு காணப்பட்டது என்பார்கள். அதற்கான ஒரு சிலசான்றுகளைக் காண்போம்.

மூன்று ஆறுகள் சேருமிடத்தை மூவாறு என்று முன்பு அழைத்தனர். தற்போது மூவார் என மருவி வழங்குகிறது. கடாரம், கடா எனச் சுருக்கமாக அழைக்கப்படுகிறது. இதே போலக் கிள்ளான், சாவி, சித்தி ஆவான், சுங்குரும்பை, வாலாப்பூர் ஆகிய ஊர்ப் பெயர்களும் தூய தமிழ்ச் சொற்களே ஆகும். இவை போலக் கோலாலம்பூர் செந்தூல் கோயிலின் பெயரையும் நாம் ஆராய்ந்து பார்த்தால், பஞ்சாமிர்தம் போல இந்த ஆய்வு இனிப்பதை உணர முடியும்.

**கோல் என்பதன் பொருள் :**

ஒரு கோலால் அழகினைப் பெற்ற ஊர் கோலாலம்பூர் என்பதை முன்னர் பார்த்தோம். அந்தக் கோல், எந்தக் கோல் என்பதையும், கோல் என்பதற்கான பல விளக்கங்களையும் கீழே காண்போம்.

கோல் என்பதன் அடிச்சொல் கோ. கோ.



என்றால் அரசன். அரசாட்சி செய்பவர்கள் அதற்கு அடையாளமாகக் கோணாத - வளையாத - நேரான - நேர்மையான - தர்மம் தவறாத - துன்பத்திலிருந்து காத்து, இன்பத்தை வழங்குவதான - செங்கோலைக் கையில் ஏந்தி இருப்பார்கள்.

கோல் என்பது தண்டு என்னும் ஆயுதத்தையும், செங்கோலையும் குறிக்கும். செங்கோல் கொண்டு முன்பு மன்னர்கள் ஆட்சி செய்தனர். தண்டாயுதம் கொண்டு முருகன் அருளாட்சி செய்கின்றார்.

அரசாட்சியின்போதும், மலேசியாவின் தலைநகரம் கோலாலம்பூர் தற்போதைய மக்கள் ஆட்சியிலும் தலைநகரமாக விளங்குவது கோலாலம்பூர்.

அரசாட்சிக்குச் செங்கோல் தலைமை முத்திரையாக அமைவதுபோல, ஆன்மீகத்திற்குச் செந்தூல் கோன் தண்டாயுதபாணியின் தண்டாயுதம் உயர்முத்திரை பதித்து வருகிறது. இக்கோலால் அழகினைப் பெறுவதே கோலாலம்பூரின் தனிச்சிறப்பாகும்.

மெய் உணர்தல்:

"எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும், அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு"

என்று மெய் உணர்தல் அதிகாரத்தில் திருவள்ளுவர் வலியுறுத்தியுள்ளார். சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார் செல்வர் ஆவார்கள் எனக் கட்டியம் கூறியுள்ளார் மாணிக்கவாசகர்,

எனவே இக்கோயிலில் உள் மூலவரின் பெயரையும், இக்கோயில் அமைந்துள்ள இடத்தின் பெயரையும் பொருள் உணர்ந்து ஆராய்ந்து மெய்ப் பொருளைக் காண்போம்.

**தண்டாயுதபாணியா? தெண்டாயுதபாணியா?**

முருகனின் பெயர் தண்டாயுதபாணியா? அல்லது தெண்டாயுதபாணியா என்பதை முதலில் தெளிவுபடுத்திக் கொள்ளவேண்டும்.

வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்பது பழமொழி. அவ்வாறு ஒரு மரக்கிளையைக் கைத்தடியாகக் கொண்டு, மலை ஏறுவதற்கும் கட்டுமரப் படகுகளைச் செலுத்துவதற்கும் பயன்படுத்தினர். முருகன் மிகமிக எளிமையான வாழ்க்கையில் பேரின்பம் காண்பவர். ஒரு மரக்குச்சியை மந்திரக் கோலாகக் கொண்டு நம்மை இன்ப மலையில் ஏறச் செய்கின்றார். துன்பக் கடலிலிருந்து நம்மைக் கரையேற்றுகின்றார்.

**நகரத்தார் கண்ட மெய்ப்பொருள்:**

திரைகடல் ஓடித் திரவியம் சேர்த்தவர்கள் நகரத்தார்கள். அலைகடலில் கட்டுமரம், பாய்மரக்கப்பல் மூலமாக வெளி நாடுகளுக்குக் "கொண்டு விற்கச்" சென்றவர்கள், செட்டி கப்பலுக்குச் செந்தூரான் துணை, என்ற முழக்கத்தோடு கடல் கடந்து பயணம்- சென்றனர்.

"திசை ஆயிரத்து ஐந்நூற்றுவர்" என்னும் மாத்தூர்க்கோயில் தலபுராணச் செய்தியும், "ஏழகப் பெருந்தெரு" என்னும் வைரவன்கோயில் தலபுராணச் செய்தியும் இரு கல்வெட்டுகளுக்குச் சமமானவை.

மன்னர் பின்னோரான நகரத்தார்கள், ஏழுவிதமான படைகளை வைத்திருந்தனர். விற்பயிற்சி, குதிரை ஏற்றம் போன்ற போர்ப் பயிற்சிகளும் பெற்றிருந்தனர். அதனாலேயே மகார்நோன்பு அம்புபோடுதல், கிலிக்கி எடுப்பு, தீப்பிழம்போடு இழை ஏடுத்துக் கொள்ளுதல் எனும் பிள்ளையார் நோன்பு வழிபாடு போன்ற விழாக்களை இன்றும் சடங்குகளாகச் செய்து வருகின்றனர். மாப்பிள்ளை

அழைப்பின்போது குதிரை ஏறி வருகின்றனர். பிள்ளையார் நோன்பு என்பது சிவபெருமானின் இளைய பிள்ளையாரான முருகனைச் செந்தீயாக உணரும் முருக வழிபாடே என்பார் டாக்டர் தமிழண்ணல். நகரத்தார்கள் வாழ்வுப்பாதைக்கு வழித்துணையாகக் கையாண்ட ஆயுதம் தண்டாயுதமாகும்.

கட்டுமரங்கள், பாய்மரப்படகுகள் மூலமாக அவர்கள் துணிச்சலாக இரவு பகலாகக் கடற்பயணம் மேற்கொண்டுள்ளனர். நடுக்கடலில் அலைகள் ஆர்ப்பரித்து எழும் போதும் அவர்கள் பயப்படாமலிருக்கக் கலங்காத கண்ட விநாயகரை வழிபட்டனர். இவ்வாறு திசைக்கு ஆயிரம் பேர், ஐநூறு பேர் என்ற கணக்கில் சென்றதாலேயே அவர்கள், திசை ஆயிரத்து ஐந்நூற்றுவர் என்ற பட்டப் பெயரைப் பெற்றனர். அவ்வாறு அவர்கள் கடல்பயணம் மேற்கொள்ளும் போதும் தண்டம் என்னும் ஆயுதத்தைக் கொண்டு சென்றுள்ளனர். அத்தண்டு, மலை, மேடு ஆகிய பகுதிகளில் ஏறுவதற்கும் பயன்பட்டுள்ளது. தரை தட்டிய கட்டு மரங்களைக் கடலுக்குள் செலுத்தவும் பயன்பட்டுள்ளது.

வைத்தீஸ்வரன் கோயிலுக்கும், சமயபுரம் மாரியம்மன் கோவிலுக்கும் இப்போது பாதயாத்திரை செல்பவர்கள், வேப்பிலையைக் கைத்தடியின் உச்சியில் வைத்துக் கட்டுவதுபோல, முருகனின் வேல் போன்ற இலைவடிவ இரும்புப்பூணையோ, வெள்ளிப் பூணையோ, உலக்கைப் பூணைபோல இணைத்திருப்பார்கள். கொடிய விலங்குகளிடமிருந்து தம்மைக் காத்துக் கொள்ள அவ்வேல்வடிவப் பூண், ஆயுதமாக அமைந்து காப்பாற்றியுள்ளது. இவ்வாறு தண்டும் ஆயுதமும் சேர்ந்தமையால் அது தண்டாயுதமாயிற்று.

வேல் என்பதன் வேர்ச் சொல் வெல் என்பதாகும். வெல்வதற்காக உருவாக்கப்பட்ட ஆயுதமே வேலாயுதம் ஆனது. வேலாயுதம் என்பதில் வேல்பகுதி அதிக வேலைப்பாட்டுடனும் தண்டுப்பகுதி மெல்லிதாகவும் இருக்கும். தண்டாயுதம் என்பதில் தண்டுப் பகுதி அதிக நீளமாகவும், வேல் பகுதி சிறிதாகவும் இருக்கும்.

சங்க காலத்தில் "வேல் கோட்டம்" என்றே முருகன் கோயில் அழைக்கப்பட்டது. கடவுளரின் திரு. உருவங்களை வழிபடுவது பிற்கால வழிபாடாகும். கடவுளரின் ஆயுதங்களை வைத்து வழிபடுவதே மிகப்பழங்கால வழிபாடாகும். இவ்வாறே வேல்கோட்டம், வஜ்ஜிரக்கோட்டம், அமரர் தருக்கோட்டம் (கற்பகமரக் கோட்டம்), வெள்ளையானைக் கோட்டம் ஆகியன இருந்தமைக்குச் சிலப்பதிகாரமும், மணிமேகலையும் சாட்சி கூறுகின்றன.

வேல் வழிபாடே மிகப் பழமையானது என்பதை ஆதிச்ச நல்லூர் அகழ்வாய்வு புலப்படுத்துகிறது. கி.மு. நாலாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட நாகரீகச் சான்றுகளாக இரும்பினால் செய்யப்பட்ட வேல்களும், பித்தளையால் செய்யப்பட்ட சேவல் உருவங்களும் கிடைத்துள்ளன.

சிங்கப்பூர் ஸ்ரீதண்டாயுதபாணி திருக்கோயில் கருவறையில் இன்றைக்கும் பழமையான வேல்மட்டுமே உள்ளது. அதன்மேல் முருகன் வடிவம் தங்க அங்கியாகச் சார்த்தப் பெற்றுள்ளது.

வேலுக்குப் பூசை இடுவதும், வேலுக்கு அபிடேக ஆராதனைகள் செய்வதும் இன்றும் வழக்கத்தில் காணப்படுகிறது. பழனிக்குப் பாதயாத்திரை செல்லும்போது, அருளடியார் வேல் ஏந்தி முதலில் செல்வதை இங்கு ஒப்புநோக்க வேண்டும்.

கோலாலம்பூரில் அதிவிமரிசையாக நடைபெறும் பங்குனி உத்திரத் திருவிழாவின்போது அருளடியார் கோயிலிலிருந்து வேல் ஏந்தியே கிட்டங்கிவரை பாதயாத்திரையாகப் பெரும் திரளான மக்கள் வெள்ளத்துடன் செல்வதை இங்கு ஒப்புநோக்கும் போதும், கிட்டங்கியில் வேலுக்கு அபிடேக ஆராதனைகள் ராஜ உபசாரமாக நடைபெறுவதைக் காணும்போதும், கோலாலம்பூர் திருக்கோயிலிலும் முன்பு கருவறையில் வேல்மட்டுமே வழிபாட்டில் இருந்து, பிற்காலத்தில் தண்டாயுதபாணியின் திருஉருவத்தை பிரதிஷ்டை செய்திருக்கலாம் என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கின்றது.

இவ்வாறு தண்டை ஆயுதமாகக் கொண்ட முருகனைத தண்டாயுதபாணி என்று அழைப்பதே முறையானது. தெண்டாயுதபாணி எனச் சிலர் எழுதுவது சரியன்று. தெண்டம் என்பதன் பொருள்,



வீண் விரையம் என்றாகும். எனவே தண்டாயுதபாணி என்ற பெயரே சரியானது. முறையானது; மந்திரத்தன்மையோடு மகத்துவம் தருவது என உணரலாம்.

**செந்தூலா? செந்தூரா?**

கோலாலம்பூரில் ஸ்ரீ தண்டாயுதபாணி திருக்கோயில் அமைந்துள்ள இடத்தைச் செந்தூல் என அழைக்கின்றனர். செந்தூல் என்னும் சொல் தமிழ்ச் சொல்லும் அன்று; மலேசிய மொழிச் சொல்லும் அன்று. எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே என்பது தொல்காப்பிய மரபு. பொருள் இல்லாமல் ஒரு சொல் இருக்க முடியாது. வேறு சொல்லின் திரிபாகவே மருவி வழங்குகிறது. இச்சொல். இதன் உண்மைப் பெயரைக் கண்டு ஆராய்வது, பரமானந்தமாக அமையும்.

முருகனின் முதற் பெயர்:

*மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்*
*சொல்லிய முறையால் சொல்லவும் படுமே!*

எனத் தொல்காப்பியம், அகத்திணையில் முதல்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகியவற்றைத் தொகுத்துக் கூறுகிறது.

மலையும் மலைச்சார்ந்த இடமும் குறிஞ்சி நிலம் எனப்படும். அதற்குரிய தெய்வம் சேயோன் எனப்படும் முருகன் ஆவார். மலேசிய நாட்டை மலைய நாடு என்பர். இது குறிஞ்சி நிலமாகவே திகழ்கிறது. இதற்குரிய தெய்வமான சேயோனே, செந்தூல் தண்டாயுதபாணியாக விளங்குகிறார்.

**சேயோன் பெயர் விளக்கம்:**

சேயோன் என்ற சொல்லுக்கு மூன்று பொருள் உண்டு. சேய் என்றால் குழந்தை, குழந்தை வடிவானவன் பாலதண்டாயுதபாணி.

சேய்மை என்றால், எட்டாத தொலைவில் இருப்பவன் என்று பொருள். நமக்கு எட்டாத தொலைவில் நம்மைக் கடந்து இருந்தாலும், நமது உள்ளக் கோயிலுக்குள் உவந்து இருப்பதாலேயே, கட+உள் என்னும் அடிப்படையில், கடவுளாகத் திகழ்கின்றார்.

சேயோன் என்றால் சிவந்த வண்ணம் உடையவன் என்றும் ஒரு பொருள் உண்டு. சிவப்பு நிறம் உடையவர் சிவபெருமான். அவர் சூரர்களை அழிக்கவே செவ்வேளான முருகனைப் படைத்தார். சூரபதுமனைப் போரில் வென்றதால், அவ்வூர் செந்தூர் ஆயிற்று.

சங்க இலக்கியங்களான அகநானூறு, புறநானூறு, நற்றிணை, பரிபாடல், கலித்தொகை, மதுரைக்காஞ்சி, குறிஞ்சிப்பாட்டு, திருமுருகாற்றுப்படை ஆகிய நூல்கள் செவ்வேளையும் செந்தூரையும் பற்றிக் கூறுகின்றன. சிலப்பதிகாரமும் கந்தபுராணமும் செந்தூரைப் போற்றி பாராட்டுகின்றன.

பெரிய புராணத்தில் சிறுத்தொண்டர் போர்புரிந்த இடம் இரத்தத்தால் சிவந்தமையினால் அப்போர்க்களத்தைத் திருசெங்காட்டங்குடி என்பார் சேக்கிழார். அதுபோலச் சூரனைச் சம்காரம் செய்தமையினால் சிவந்த ஊரைச் செந்தூர் என்றார் நக்கீரர். மரியாதைக்குரிய திரு என்னும் அடைமொழி சேர்ந்ததால் செந்தூர், திருச்செந்தூர் என அழைக்கப்படுகிறது.

**செந்தூர்ப் பெருமை:**





முருகனுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளைத் தொகுத்துக் காணும்போது, முதலிடம் பெறுவது திருச்செந்தூரேயாகும். அதன்பிறகே அவர் திருப்பரங்குன்றத்தில் தெய்வானையை மணந்தார்.

திருப்பரங்குன்றக் குகையிலிருந்த நக்கீரரை வேல்கொண்டு முருகன் காத்ததனால், அவ்வூரைப் பற்றி முதலில் பாடிவிட்டுப் பிறகு நினைவோடை உத்தியாகத் (Flash Back Technique) திருச்செந்தூரைப் பற்றிப் பாடியுள்ளார். எனினும் அறுபடை வீடுகளுள் முதலிடம் பெறுவது திருச்செந்தூரேயாகும். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் போன்ற ஆராய்ச்சியாளர்களின் முடிவும் இதுவேயாகும்.

படைவீடு என்றால் போர்க்கருவிகள் குவிக்கப்பட்டுப் போர் வீரர்கள் தங்கும் பாசறையையே குறிக்கும். இதனால் படைவீடு என்ற பெயர் திருச்செந்தூருக்கே பொருந்தும் என்பார் பேரறிவாளர் க. வெள்ளைவாரணனார்.

பக்தர்களைக் காப்பாற்றுவதற்காக முருகன் படைவீடு அமைத்துப் போர்புரிந்து வெற்றி வாகை சூடிய இடம் செந்தூர் என்பது தெளிவாகப்புரிகிறது. வாழ்க்கையில் தொடர்ந்து வெற்றியைப் பெற, நினைத்ததை முடித்துத்தரும் செந்தூரானை வழிபடுவதற்காக நகரத்தார்கள் கோயில் அமைத்த இடத்திற்குச் "செந்தூர்" என்றே பெயரிட்டிருக்க வேண்டும். அதுவே மருவிச் செந்தூல் என ஆகியிருக்க வேண்டும்.

**முடிவுரை :**

"செட்டி கப்பலுக்குச் செந்தூரான் துணை!" எனக் கட்டியம் கூறி மலேசியாவுக்கு வந்த நகரத்தார்கள், செந்தூர் எனவே பெயரிட்டிருப்பார்கள். அங்கு முதன்முதலில் தண்டாயுதத்தை வைத்து வழிபட்டமையினால், தண்டாயுதபாணி என்று போற்றியுள்ளனர். இவ்வாறு தண்டாயுதம் என்ற ஒரு மந்திரக் கோலால் மகத்துவத்தைப் பெருக்குவதாலேயே இவ்வூர் கோலாலம்பூர் என ஆயிற்று என்பது தெளிவு.



# பாடும் பணி

ஆசிரியர் இரா மாது

26, மலையப்ப நகர், மல்லியம்பத்து அஞ்சல், திருச்சி 620102, தமிழ்நாடு, இந்தியா

உலகம், உயிர், இறை இவை மூன்றும் மெய்ப் பொருளாம். சிற்றறிவு, சில்வாழ்நாள், பல்பிணியோடு உழலும் உலக உயிர்கள் பேரறிவும் பேராற்றலும் பெற்ற இறையாம் மெய்ப்பொருளை அடைய முயலும் முயற்சியில் வெற்றி பெறுவதே பேரின்பப் பெருநிலை ஆகும்.

பெறுதற்கரிய மனிதப் பிறவியைப் பெற்றிருக்கின்றோம். இந்த உடலோடு கூடிய இப்பிறவியை வைத்து, இனிப் பிறவாமை என்னும் நிலையை அடைதல் வேண்டும். இதனைவிட தாழ்ந்த பிறவி ஒன்று இனி நமக்கு வாய்க்குமானால் இப்பிறவியில் நாம் வாழ்ந்த வாழ்க்கை இழிந்த வாழ்க்கையாகும். இதேபோல் மனிதப் பிறவியே வாய்க்குமானால் வாழ்க்கையில் சிறிதளவு ஏதோ நன்மைத் தருமாறு வாழ்ந்திருக்கிறோம் என்பது பொருளாகும். இனிப் பிறவாமை என்ற நிலை எய்துமானால் அதுவே வையத்துள் நாம் வாழ்வாங்கு வாழ்ந்த பயனள்ள வாழ்க்கையாகும். அத்தகுபயனுள்ள வாழ்க்கையை நீர்க்குமிழியாகிய இந்த உடம்பை வைத்துத்தான் அடைய முடியும். அது எப்படி சாத்தியமாகும்? அதாவது பெற்ற உடம்பால் உடம்பைப் போக்கி, இனி உடலைப் பெறாத நிலை ஏற்படுமானால் அதுவே உயர்ந்த வாழ்க்கை. அந்த உயர்ந்த வாழ்க்கையைப் பெறுவது எங்ஙனம்? பொதுவில் ஆடுகின்ற அரசனின்; இருதாளினை உள்ளத்தில் வைத்தால் உயர்ந்த உன்னத அந்த வாழ்க்கையை எளிதாகப் பெற்று விடலாம்.

> "உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம்
> உடம்பினுள் உத்தமனைக் காண்"

என்பதே ஔவையாரின் வாய்மொழியாகும்.

> "ஊன டைந்த உடம்பின் பிறவியே
> தான டைந்த உறுதியைச் சாருமால்
> தேன டைந்த மலர்ப்பொழில் தில்லையுள்
> மாந டஞ்செய் வரதர்பொற் றாள்தொழ"

என்று சேக்கிழார் பெருமானும் இதனைப் பெரியபுராணத்துள் உணர்த்திச் சென்றார்.

ஆனால்; முன்னோர் மொழிப்பொருளையெல்லாம் பின்பற்றாது விடுத்து வாழ்க்கையில் வாழத்தெரியாது தடுமாறி நிற்கின்றவர்களை நெறிப்படுத்துவதற்காகத் தோன்றியவைதான் சமயங்கள். இதில்,

> சிவனை முழுமுதற்பொருளாகக் கொண்டது சைவம்;
> திருமாலை முழுமுதற்பொருளாகக் கொண்டது வைணவம்;
> சக்தியை முழுமுதற்பொருளாகக் கொண்டது சாக்தம்;
> சூரியனை முழுமுதற்பொருளாகக் கொண்டது சௌரம்;
> கணபதியை முழுமுதற்பொருளாகக் கொண்டது காணாபத்யம்;
> முருகனை முழுமுதற்பொருளாகக் கொண்டது கௌமாரம்.

என சமயத்தை ஆறாகப் பிரித்து வழிபட ஆதிசங்கரர் வழி வகுத்தார். இவற்றில் மிகப் பழமையான வழிபாடு முருகப் பெருமான் வழிபாடாகும்.

"சேயோன் மேய மைவரை உலகமும்"

என்று தொல்காப்பியம் முருகனது வழிபாட்டினை உணர்த்தும். குறிஞ்சி நிலமாகிய மலைக்குத் தலைவனாய்த் திகழ்பவன் முருகப் பெருமான். கல் தோன்றியபோதே முருகனின் வழிபாடும் தோன்றி விட்டது. "தொல்காப்பியர் தனது இலக்கண நூலான தொல்காப்பியத்தில் பலவிடங்களில் இது என்னுடைய கருத்தன்று என் முன்னோர் சொல்லிச் சென்றது" என்று உரைப்பார். இதன் மூலம் தொல்காப்பியருக்கு முன்பிருந்தே முருகனது வழிபாடு தமிழர்களிடையே இருந்து உள்ளது என்பது எளிதில் விளங்கும். தமிழருக்குரிய தனிப்பெரும் கடவுள் முருகன். அவனுக்குத்தான் எத்தனைப் பெயர்கள்?

வேலன், சேயோன், சேவற்கொடியோன், கந்தன், செவ்வேள், குமரன், குருபரன், காங்கேயன், குருநாதன் இன்னும் எண்ணிலடங்காத பெயர்கள் அவனுக்குண்டு. பிறவா யாக்கைப் பெரியோனாகிய சிவனின் மகன் அவன்.

"ஒரு நாமம்; ஓர் உருவம், ஒன்றும் இல்லாற்கு ஆயிரம்
திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ?"

என்று முருகனின் தந்தையைக் குறித்துப் பேசுகின்றார் மாணிக்கவாசகர். தந்தையின் வழியில் தனயனுக்கும் பல்வேறு நாமங்கள் வழங்குவது என்பது இயல்புதானே!. பெயர்கள் பல வழங்கினாலும் எல்லோராலும் விரும்பப்படுகின்ற பெயர் முருகன்.

முருகன் என்றும் மாறாத அழகுடையவன்; என்றும் இளமையோடு இருப்பவன்; தெய்வநலம் பொருந்தியவன். இம்மையிலே பெற வேண்டிய செல்வங்கள் பலவற்றைப் பெறாமலேயே நம் வாழ்க்கை கழிந்து விடுகிறது. மறுமையில் பெறவேண்டிய செல்வமோ பெறதற்கு அரியதாக அமைந்து விடுகின்றது. அரிதில் முயன்று பெற்றால் மட்டுமே கிடைக்கக் கூடிய முக்திப் பெரும்பேறாகிய அர்த்தமுள்ள அப்பொருளை வழங்குகின்ற பெருமை உடையவன் பெயர் முருகன்.

"அரும்பெறல் மரபின் பெரும்பெயர் முருக!"

என்று கூறுவதாக அமைகிறது திருமுருகாற்றுப்படையில் நக்கீரரின் வாக்கு. மேலும் திருமுருகாற்றுப்படையின் பெருமையினைப் பாராட்டிப் பேசுகின்ற பாடல் ஒன்றில்,

அஞ்சுமுகம் தோன்றின் ஆறுமுகம் தோன்றும்
வெஞ்சமரில் அஞசலென வேல்தோன்றும் - நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இருகாலும் தோன்றும்
முருகா! என்று ஓதுவார் முன்.

என்று கூறியுள்ளதை உற்று நோக்கினால் முருகன் என்ற நாமத்தின் பெருமை தெளிவாக நமக்கு விளங்கும்.

கண்ணுக்கு அழகு அவனைக் காண்பது, செவிக்கு அழகு அவன் நாமத்தைக் கேட்பது, காலுக்கு அழகு அவன் திருக்கோயில் நோக்கிப் பயணப்படுவது, கைக்கு அழகு அவன்முன் கரம் குவித்து நிற்பது. சொல்லுக்கு அழகு சத்தியம். சத்தியம் வழுவாத மொழியால் வழங்கப் பெறும் பெயர் முருகன். எனவேதான் அவனுக்கு வழங்கப் பெறுகின்ற நாமங்களில் எல்லாம் தலைசிறந்த நாமம் முருகன் என்பதாகும்.

"விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மை குன்றா
மொழிக்குத் துணைமுரு காவெனு நாமங்கள்" முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலும் செங்கோடன் மயூரமுமே
கந்தர் அலங்காரத்தில்



''படிக்கின்றிலை பழநித் திருநாமம் படிப்பவர்தாள்
முடிக்கின்றிலை முருகா என்கிலை''

முருகா! என்று படிக்காது இருப்பதில் பயன் இல்லை என்கின்றார் அருணகிரிநாதர் அதுமட்டுமன்று, ஆவி பிரியும் வேளையில் என் நா உச்சரிக்க வேண்டியது உன் பெயரான முருகா! என்பதே! அதனை, எனக்கு அருள்வாய் என்று மனமுருகித் திருப்புகழில் வேண்டுகின்றார்.

ஆதி விதியோடு பிறவாத வகைதே டியென
தாவிதனையே குறுகி வருபோது
ஆதிமுரு காதிருமுரு காஎனவும்
ஆதிமுருகா நினைவு தருவாயே

இந்த உலகம் உய்ய வந்துதித்தவனே முருகன் என்று கச்சியப்பரும் தனது கந்தபுராணத்தில்

''ஒரு திருமுருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய''

என்று பாடி அருளினார்.

தொண்டு செய்து நாளாறில் கண்ணினை எடுத்து சிவன் கண் மீது அப்பிய கண்ணப்பர் முருகன் அருளால் பிறந்தவர். வேடர்களுக்குக் குலதெய்வம் முருகன். தனக்குக் குழந்தைச் செல்வம் வேண்டி பிரார்த்தனை செய்யும் நாகனின் வேண்டுகோளைப் பாடும்போது சேக்கிழார் பயன்படுத்தும் நாமம்; முருகன் என்பதே.

''முருகலர் அலங்கல் செவ்வேள் முருகவேள் முன்னில் சென்று
பரவுதல் செய்து நாளும் பராய்க்கடன் நெறியில் நிற்பார்;.

திருத்தொண்டர் புராணத்தின் பாட்டுடைத் தலைவர் சுந்தரமூர்த்தி நாயனார். சிவனின் ஆணையைத் தலைமேற்கொண்டு திருவாரூர் வருகின்றார். ஆலய வழிபாட்டிற்காகக் கோவிலை நோக்கி வரும் வழியில் பரவை நாச்சியாரைப் பார்க்கிறார். பரவையாரும் அவரைக் காண்கின்றார். இருவருமே சிவனைத் தவிர வேறெதையும் நினையாதவர்கள். ஆனால் இன்றோ சிந்தை திரிந்து இருவரும் மாறிப் புக்கு இதயம் எய்தினர். என் உள்ளத்தைத் திரித்து என்முன்னே நிற்கும் இவர் யார்? என்று செய்வதறியாது திகைத்து நிற்கிறார் பரவையார். அகத் தூய்மையும் பூசும் திருநீறால் புறத்தூய்மையும் ஒருங்கே பெற்ற அடியார்கள் இருவரது நினைப்பையும் பாடவந்த சைவம் வளர்க்கும் சிவநேயச் செல்வராகிய சேக்கிழார்,

''முன்னே வந்து எதிர்தோன்றும் முருகனோ''

என்று முருகன் என்ற நாமத்தையே பயன்படுத்துகின்றார். அப்பனாகிய சிவனின் அருட்திறத்தையும் சிவனடியாரின் பெருமையையும் பாட வந்த சேக்கிழார் அடியார்க்கு நல்ல பெருமாளாகிய முருகன் என்று கூறியது சாலப் பொருந்தும்.

கந்தனின் அருளை முழுவதுமாகப் பெற்றுக் கந்தனைத் தவிர வேறொருவரையும் பாடாத அருணகிரிநாதர் தன் நூலாகிய கந்தர் அநுபூதியில் ஒரு பாடலில் கந்தனின் மூன்று திருநாமங்களைக் குறிக்கின்றார்.

முருகன் குமரன் குகன் என்று மொழிந்து
உருகுஞ் செயல்தந் துணர்வென்ற ருள்வாய்

முருகன், குமரன், குகன் என்ற மூன்று நாமங்களும் கந்தனின் நாமங்களில் தனிச் சிறப்புப் பெற்றவை. அதிலும் **முருகன் என்ற நாமம் மகா மந்திரம்** என்று சொல்லக் கூடிய பெருமை வாய்ந்தது என்பர் பெரியோர்.

"மனிதன் பொறியின் வாயிலாகப் பெறும் இன்பத்தையே உயர்ந்தது" என்று கருதுகிறான். ஆனால் மேலான இன்பம் என்பது என்றும் இன்பத்தோடு இருக்கின்ற இறைவன் திருவருளால் வருவதே ஆகும். "இறை நினைவைச் சிந்தையில் வைத்தவர்களுக்கு இன்பமே எந்நாளும் துன்பமில்லை. இறைவன் உள்ளத்தில் வந்து அமர்ந்த பிறகு நம்மைப் பற்றிய கவலை இனி நமக்கு எதற்கு? தன்னோடு சரிநிகர் சமானமாக இருக்கிற மனிதர்களிடத்தில் போய் தன் கவலையைத் தெரிவிப்பவன் என்றைக்கும் கவலையோடு இருக்க வேண்டியதுதான். அதன்பிறகு, கவலைத் தீரும் என்று சொன்னவன் தன் கவலையை மட்டும் சுமப்பதில்லை. யாரால் தன் கவலைத் தீரும் என்று நினைத்துக் கவலையைக் கூற வந்தானோ அவனுடைய கவலையையும் சேர்த்துச் சுமக்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுவான். எனவே, கவலையற்ற முருகனின் தாளினைப் பற்ற அவன் நம் கவலையைத் தீர்த்து இன்பம் அளிப்பான். நான், எனது என்று எல்லாம் அற்ற நிலையில் முருகா! உன் அருளால் சுகமாக நின்றேன். நான் இன்பத்தோடு இருப்பதைப் பார்த்து என்னை வினவும் அனைவருக்கும் உனது அருளால் இது வாய்த்தது என்ற சொல்ல நினைக்கிறேன். ஆனால் உனது பேரருட் கருணைத் திறத்தை அநுபவித்து உணர முடியுமே அன்றி வார்த்தைகளால் வருணித்துச் சொல் என்றால் என்னால் எடுத்து இயம்ப முடியவில்லை. எனவே, நீ கருணைகூர்ந்து, என்னை அடியவனாய் ஏற்று, கவலை தீர்த்து, இன்பம் அளித்து, விளையாடிய விளையாட்டின் திறத்தை நீயே சொல். ஏனெனில் யாம் ஓதிய கல்வியும் எம் அறிவும் தாமே பெற வேலவர் தந்ததனால் நீ எனக்குச் சொன்னதை அப்படியே மற்றவர்களுக்கும் சொல்லி விடுகிறேன்"; என்று பாடிய கந்தர் அநுபூதி பாடலில் அருணகிரியார் மீண்டும் பயன்படுத்திய கந்தனின் நாமம் முருகன்.

> உல்லா சநிரா குலயோ கவிதச்
> சல்லா பவிநோ தனும்நீ யலையோ?
> எல்லா மறஎன் னை இழந் தநலம்
> சொல்லாய் முருகா சுரபூ பதியே!

கந்தனின் நாமங்களில் முருகன் என்ற நாமத்தின் சிறப்பை மேன்மேலும் எடுத்துக் காட்டிக் கொண்டே போகலாம். எனவேதான் அருணகிரிநாதர் முருகா! என்று ஒருதரம் ஓதினால் அவன் இருதாளினைத் தந்து நம் வினைககளை அறுப்பான்

> முருகா! என ஓர் தரமோ தடியார்
> முடிமேல் இணைதாள் அருள்வோனே!

என்று திருப்புகழில் பாடிப் பரவினார்.

நாமும் நாளும் முருகா! என்னும் நாமத்தைப் பாடுவதையே பணியாகக் கொள்வோம் நமனை வெல்வோம்.

"முருகு முருகு முருகு முருகு
முருகு முருகு என்று உருகு!"





ஓம் சாய்ராம்

# முருகன் கலியுக வரதன்



ஓம் சரவணபவாய நம ஓம்
அஞ்ஞான மெனும் குகையில் அல்லல்படும்
மானிடர்களை உய்வித்து
தனது இதய கோவிலில் ஞானமெனும்
அருளை வாரி வழங்கும் வள்ளல் குகன்
இக் கலியுகத்தில் - அனைவருக்கும்
ஞானத்தை தரும் ஞானப்பண்டிதனை நம்
பூர்வஜென்ம பக்தியை மெச்சி இப்பிறவியை நமக்கு
வழங்கியுள்ளார். முருகப்பெருமானின் திருநாமத்தை
ஜெபித்து பிறவா வரமும் மறவாநிலையும் - அடைவதே
பிறவியின் நோக்கமாக கொள்ள வேண்டும்.

அறிவில் - ஆறுமுகனைப் போல
மொழியில் - தமிழ்க்கடவுள் முருகனைப் போல
அழகில் - வள்ளி மணாளனைப்போல-குமர
வீரத்தில் - தேவசேனாபதியைப் போல
சாதுர்யத்தில் - சரவணனைப் போல
கருணையில் - கந்தனைப் போல
சத்தியத்தில் - சண்முகனைப்போல
வேகத்தில் - வடிவேலனைப்போல
பற்றறுப்பில் - பழனி ஆண்டியைப் போல
உபதேசத்தில் சிவகுரு நாதனைப்போல
மன்னிப்பதில் - சிவசுப்பிரமணியனைப் போல
ஒற்றுமையில் - சண்முகநாதனைப்போல
தவத்தில் பால முருகனைப் போல
நாம் நமது மனித பிறவியின் நோக்கம் உணர்ந்து
காமம், குரோதம். லோபம், மதம், மாத்சர்யம்,
மோகம் என்ற ஆறு அவகுணங்களை போக்க வல்ல
ஆறுமுகனை அனுதினம் அடிபணிந்து
ஆறு சமயங்களுக்கு தலைவனான ஆறுமுகனை-
அருணகிரிநாதரை பாம்பன் சுவாமிகளை ஏன்று
அருள்புரிந்து போல. நம்மையும் பிறவி பெறும்
கடலிருந்து மீட்டு முக்திப் பாதைக்கு வழி காட்டுவார்.

அவ்வண்ணமே முருகப் பெருமானின் மகிமைகளை
நமது எதிர்கால சந்ததியார்களுக்கு
இலகுவாகப் புரியும் வண்ணம்
நமது முதாதையர்கள் முன்னோர்கள் அடியார்கள்
காட்டிய பாதையில் அவர்களை
வழிநடத்த தினசரி, கந்தரநுபூதி, கந்தரலங்காரம்,
கந்தர் கலி வெண்பா கந்த ஷஷ்டி கவசம் இவற்றில்
தினசரி ஒரு ஸ்தோத்திரங்களை - பாடல்களை ஓதும்
பழக்கத்தை நாம் அவசியம் உணர்ந்து உணர்த்த
வேண்டும்.

ஆறுமுகங்களில்
ஆறு சமயங்கள்
ஆறு சாஸ்திரங்கள்
ஆறு ஞான சாதனைகள்
ஆறு அறவுச் சாதனைகள்
ஆறு ஆதரங்களை
அறிய உதவும் போதனை - ஆன்றோர்கள்
மூலம் கற்று கற்பிக்கவும்
இளைஞர்களை உருவாக்க வேண்டும்
எல்லையில்லா ஆனந்தத்தை வழங்கும்
குமரப் பெருமாள் தேவசேனாபதி,
சரவணன், கார்த்திகேயன், கந்தசாமி சத்திதரன்,
சண்முகன் - வடிவேலன்.
வேலவன், அழகன் என்று குழந்தைகளுக்கு பெயரிட்டு
மகிழ்வதோடு நின்று
விடாமல் அவர்களை அவனாக
பார்த்து - அவனைப் போலவே வாழ
வழிவகை செய்வது நமது கடனாக பிரணவத்தின்
பொருளை பிரம்மனுக்கு உணர்த்திய பரம் பொருள்
நமக்கு திருவடி தொழுங்கால் எல்லையில்லா
ஞான போதனைகளை நமது எதிர்கால சமுதாய
உண்மையோடு நமக்காக வேண்டி வாழ அருள்புரிவான்.

உலகமக்கள் பலரும் இன்று சந்திக்கும் மூர்க்க
அவஸ்தைகளை நீக்கும் மாறு பெரும் சக்தியாக
முருகக் கடவுள் விளங்குகின்றார். திருமணமாகி பல
ஆண்டுகள் புத்திரபாக்கியம் இல்லாதவர்கள் கந்த
சஷ்டி கவசத்தை பாராயணம் செய்து பூரண பலன்
இன்று பெற்று விடுகின்றனர். பச்சிளம் குழந்தைகளை
தீங்கேதும் வாராது. சஷ்டி தேவி, தேவசேனையின்
அம்சமாக காத்தருகின்றார். மாங்கல்யவரத்தை
நிலைப்படுத்தி

இல்லற ஒற்றுமையும் செல்வப் பேற்றையும்
முக்தி பேற்றையும் அருளுகின்றார்.

நமது பண்பாட்டையும் வம்சாவழி கலாச்சாரங்களை,
தான தர்மங்களை - தொடர்ந்து செய்து திருமுருகன்
திருப்புகழை - தினம் தோறும். செவிமடுத்து
தெய்வத்தமிழில் பாடி பரவசம் அடைவாம் - என இக்
கும்ப பிம்ப நன் நீராட்டு விழாவில் உலகம் ஒன்று
பட்டு மதம் மொழியில் இனம் நம்மை பிரிக்காமல்
இறைவனோடு இரண்டறக் கலக்க முருகனின் திருவடி
ஒன்றே வழி என வணங்கி மகிழ்கின்றேன் என்றும்
..........

- சுவாமி சாய் இரவிசந்திரன், திருவண்ணாமலை





# கோலாலம்பூர் அருள்மிகு தண்டாயுதபாணி ஆலயம்

மலேசியத் தலைநகரான கோலாலம்பூர் ஜாலான் ஈப்போ 2வது மைலில் எழுந்தருளியுள்ள மலேசியப்புகழ்பெற்ற அருள்மிகு ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயம் 111 ஆண்டுகள் பழமை வாய்ந்த ஆலயம் என நம்பப்படுகிறது.



தொன்றுதொட்டு நகரத்தார் திரை கடலோடியும் திரவியம் தேடும் பொருட்டு பாய்மரக்கப்பல்கள் மூலம் இலங்கை, பர்மா, மலாயா, வியட்னாம் (செய்கோன்) மேடான் ஆகிய இடங்களுக்கு தொலைதூரப் பயணத்தினை மேற்கொண்ட நகரத்தார் பெருமக்கள் தங்கள் குடும்பத்தாரை விடுத்து தனியார்களாகப் புறப்பட்டு வந்தவர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது "தொலைக்குப் போயிருக்கிறார்கள்" என்று குறிப்பிடுவதுண்டு.

தங்கள் குடும்பத்தினை விட்டுத் தனியாகப் பிரிந்து வந்த இத்தகையோர் தங்களைப் போல தாய் தந்தையை விட்டுப் பிரிந்து தனியனாக அமர்ந்த தண்டாயுதபாணிப் பெருமானை தங்களோடு கொண்டு வந்து தங்களுடனேயே வைத்துக் கொண்டனர்.

"கொண்டு விக்கப் போன எங்கள் கொள்கையே உனைக்கொண்டு வைக்கப் போன கொள்கையல்லவா" எனப்பாடி மகிழ்ந்தார்.

மலேசியாவில் மட்டுமல்லாமல் தமிழகம் நீங்கலான நாடுகளிலும் நகரத்தார்கள் என அழைக்கப்பெறும் செட்டியார் சமூகத்தினரால் நிர்வாகிக்கப்பெறும் அனைத்துக் கோவில்களுமே அருள்மிகு தண்டாயுதபாணி ஆலயங்களாகவே விளங்குவது இந்தக் கருத்தினை உறுதிப்படுத்துவதாகும்.

கோலாலம்பூர் ஜாலான் ஈப்போவில் 1880 - 1890 ஆம் ஆண்டுகளுக்கிடைப்பட்ட காலகட்டத்தில் இச்சிறப்புமிக்க ஆலயம் தோற்றுவிக்கப்பட்டிருக்க வேண்டும் என மதிப்பிடப்படுகிறது.

சின்னஞ்சிறிய ஆலயமாக இவ்வாலயம் எழுந்தருளிய வேளையில் "வேல்" வடிவில் வேலவன் வீற்றிருந்து அருள் பாலித்தான் என்றும் தெரியவருகின்றது.

கருவறையில் மூலவர் பிரதிஷ்டை செய்யப்பெற்ற காலம் குறித்து உறுதியான தகவல்கள் கிடைக்கவில்லை.

எனினும் 1907க்கும் 1917க்கும் இடைப்பட்ட காலத்திலும் திருக்குட நன்னீராட்டு விழா



நடைபெற்றிருக்க வேண்டும் என்று கணிக்க இடமிருக்கிறது.

இரண்டாம் உலகப் போருக்கு முன்னைய காலகட்டத்தில் ஏற்பட்டிருந்த பயங்கரமான பொருளாதார மந்தம் உலகப்போருக்குப் பின்னர் மேற்கொள்ளப்பட்ட பொருளாதாரச் சீரமைப்புப்பணி ஆகியவை காரணமாக மீண்டும் திருக்குட நன்னீராட்டு விழாவிற்கான வாய்ப்பினை 30-6-1961ல் தான் இறையருள் வழங்கியது.

இதனையடுத்து 1-11-1971ல் மீண்டும் ஆலயத் திருப்பணிக்குப் பின்னர் மகா கும்பாபிஷேகத் திருவிழா நடைபெற்றது.

தொடர்ந்து 12 ஆண்டுகளுக்குப் பின்னர் ஆலயத்தின் மறு சீரமைப்புபணி மேற்கொள்ளபட்ட மின்னர் 8-6-1984 ஆம் ஆண்டு திருக்குட நன்னீராட்டு விழா மேற்கொள்ளப்பட்டது.

ஆலயம் முழுவதும் முற்றாக சீரமைப்புச் செய்யப்பெற்று இந்தியாவிலிருந்து வரவழைக்கப்பட்ட ஸ்தபதிகள் துணையுடன் கோபுர வேலைப்பாடுகளும் அழகுற மேம்படுத்தப் பெற்றுள்ளன.

அடுத்த கட்ட நடவடிக்கையாக ஆலயத்தை அடுத்துள்ள செட்டியார்கள் மண்டபத்தினையும் அதன் உணவு பரிமாறும் பகுதியையும் செப்பனிடவும் விரிவுபடுத்த திட்டம் வெற்றிகரமாக செயலாக்கப்பட்டுள்ளது.



***ஸ்ரீ தண்டாயுதபாணி பள்ளிக்கூடம்***

ஆலயம் அமைத்துள்ள பகுதியும் அதன் சுற்றுப்புறப் பகுதியும் சேர்ந்த எட்டு ஏக்கர் நிலப்பரப்பு ஆலயத்தினைச் சார்ந்ததாகும்.

மூன்றரை ஏக்கர் நிலப்பரப்பு நகரத்தார்களின் நன்கொடை மூலம் தோற்றுவிக்கப்பெற்ற ஸ்ரீ தண்டாயுதபாணி பள்ளிக்கூடத்திற்கு ஒதுக்கப்பெற்றது.

நாடு முழுவதும் வாழ்கின்ற நகரத்தார் பெருமக்களின் கணிசமான நன்கொடை மூலம் நிறுவப்பெற்றதுதான் இந்தப் பள்ளிக்கூடம்.
ஆலயத்தின் மூலவர் கருவறையில் திருக்கோலம் காட்டி வீற்றிருக்கிறார்.

கருவறையின் முன்கட்டின் வலப்புறம் வேழமுகத்தானின் அருட்கோலம் இடப்புறம் நடராசர்,

நாயன்மார்கள், கருவறைக்கு வெளியே இடும்பன், மண்டப நுழைவில் வேலும், மயிலும் சுற்றுப்பிரகாரத்தில் இடப்புறத்தில் தும்பிக்கையான் சந்நிதி சுற்றுக்கட்டு, அதன் இடப்புறம் மடப்பள்ளி, சமயச் சொற்பொழிவுக்கான ஒரு வாரம், பின் சாமான்கள் சேகரித்து வைக்கும் பகுதி, வலப்புறம் அலுவலகம், திருமணக் காலங்களில் மணமகன் மணமகள் தங்கியிருக்க உடை மாற்ற வசதியான அறைகள், கோவிலுக்கு வெளிப்புற சுற்றுச்சுவரை அடுத்து உட்புறமாக அரசமரத்தடியில் இருந்து அரசோச்சும் விநாயகப் பெருமான், இவரது பக்தர்கள் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வருகிறது.

ஆலயமும் மண்டபமும் அமைத்திருக்கும் ஏறத்தாழ 5 ஏக்கர் நிலப்பரப்பும், தண்டபாணித் தெய்வத்தின் திருப்பெயர் தாங்கி கல்விக்கண் திறக்கும் பள்ளி அமைந்துள்ள 3 ஏக்கருக்கு மேற்பட்ட நிலப்பரப்பும் இதில் அடங்கும்.

ஸ்ரீ தண்டாயுத பாணி ஆலய செட்டியார்கள் மண்டபம் இன்று ஆளும் கட்சியின் பங்காளியாய் இன்றைய இந்திய சமுதாயத்தின் வாழ்க்கை முறையையும் எதிர்கால சந்ததிகளின் தலைவிதியையும் நிர்ணயிக்கின்ற பெரும் பொறுப்பேற்றுள்ள மலேசிய இந்தியர் காங்கிரஸ் 1946-ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பெற்ற புனித தலமாகப் பெருமை கொண்டது செட்டியார்கள் மண்டபம். வீர வரலாறு படைத்த தியாகிகளில் எஞ்சியோர் கூடி சமுதாய மானம் காக்க, மாண்பு காக்க காங்கிரசைத் தோற்றுவிக்கக் கூடிய களமாக விளங்கியது இம்மண்டபம்.

கோலாலம்பூர் ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலயத்தின் ஒரு சிறப்பு என்னவென்றால் பங்குனி உத்திர திருவிழாவின்போது லெபோ அம்பாங்கிலிருந்து வெள்ளிரதத்தில் ஸ்ரீ முருகப் பெருமான் பவனி வந்து இரவு ஜகஜோதியாய் அலங்கார புருடராய் பல்லாயிரக் கணக்கானோருக்கு அருள் புரிகிறார்.

திரு உலாக் காட்சியின் மாட்சி வருணனைக்காப்பாற்பட்டது.

ஏறத்தாழ 5000ற்கும் மேற்பட்ட பக்தப் பெருமக்களுக்கு அன்று அன்னதானம் வழங்கப்படும்.

ஆண்டாண்டுதோறும், இந்நிகழ்ச்சி தொடர்ந்து நடைபெற்றுவருவது கண்கூடு.

**ஆலயத்தின் சிறப்பம்சங்கள்**

இந்த ஆலயத்தின் முக்கியமான சிறப்பம்சம் மூலவரின் திருத்தோற்றம் கவர்ந்திழுக்கும் காந்தசக்தி, திருக்கார்த்திகை வெள்ளிக்கிழமைகளில் விசேஷ கால நேரங்களில் இவர் தரும் வெவ்வேறான கொள்ளை அழகுமிக்க தோற்றம் ஈப்போ சாலையில் இருந்தவாறே தரிசிக்க வழி செய்கின்ற அளவில் அமைந்த பீடம்.

கோலாலம்பூர் முருகன் கோலாகலமானவர் மட்டுமல்ல, எந்த மூலவருக்கும் இல்லாத ஓர் ஈர்ப்பு சக்தியைத் தன்பால் கொண்டவர் என்பதும் இங்குக் குறிப்பிட்டுக் கூறத் தக்கதாகும்.

ஆலய வரலாற்றோடு ஒன்றித்து விட்டது போன்று இங்குள்ள மகிழமரம் பக்தப் பெருமக்களை வெகுவாகக் கவர்ந்துள்ளது.

100 ஆண்டுகளுக்கு மேலாக அம்மரம் ஆலயத்தையொட்டி இருந்து வருகிறது.

வேலுண்டு வினையில்லை
மயிலுண்டு பயமில்லை
குகனுண்டு குறைவில்லை
கந்தனுண்டு கவலையில்லை



# செந்தூல் தண்டாயுதபாணி



கொண்டதொரு கோபத்தில் தண்டொன்றே ஆயுதமாய்க்
கோவணமே போதுமென்றே - அது
தண்டுன்றும் பருவமில்லை என்றாலும் தனித்திருக்கத்
தணியாத முடிவுகொண்டு - உயர்
குன்றுநின்று தனித்தவனைக் 'கொண்டுவிக்கும்' வணிகத்தில்
குறைவறியா நகரத்தார் - தம்
தொன்றுதொட்ட பண்புகளில் துவண்டுவிடாத் துணிவுதரத்
துணையாகக் கொண்டதனால் - மலர்
வண்டூதும் செந்தூலில் மயில் அகவும் சோலையிலே
வரமருளும் பாலகனை - கண்
கண்டுவக்க வேண்டுமென அழகான ஆலயத்தை
அமைத்துச்சீர் அடைவதனால் - துயர்
என்றுமில்லை என்றுதினம் துதித்தேற்றம் பெறுகின்றார்
என்றிசையில் ஆடுமயிலே!

ஞாலவடி வானதொரு ஞானவடி வேலழகை
நாமுமடி தொழ வேண்டுமே - அவன்
கோலவடி வானதொரு பாலவடி வப்பழநி
கோனடியில் விழ வேண்டுமே - நம்
தூலவடி வாலடைந்த துயரெல்லாம் போக்கச் செந்
தூலவனைப் பெறவேண்டுமே - வேல்
பாலடியைப் பண்டாரப் பழவடியைப் பாவடியால்
பாடிநிதம் வரவேண்டுமே - அவன்
காலடியில் நம்பாவக் கறைபடியா நல்லருள்செய்
காவலடி தரவேண்டுமே - பழ
மூலவடி வானசிவ முக்கண்ணன்- மைந்தனடி
முடிவுவரை பெற வேண்டுமே - கொடுங்
காலனடி வருமுன்னே கந்தனடி உய்வளிக்கும்
காப்படியைத் தரவேண்டுமே - செந்
தூலனடி துணைநாடி துதிப்போர்க்கே எந்நாளும்
துயரில்லை தேறுமனமே!

- வீரமான்





# கோலாலம்பூர் நகரில் பங்குனி உத்திர நாளில் அருள்மிகு தண்டாயுதபாணி உலா வரும்

# வெள்ளி இரதம்



1924 வருட வெள்ளோட்டம்



புதுப்பித்த இரதம்

கோலாலம்பூர் நகரத்தார் அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமிக்கு வெள்ளி இரதம் செய்வதென்று 1922இல் முடிவு செய்து காரைக்குடி ராம.ப.மெ.சொ., ஆ.வி.ப. முரு மேற்பார்வையில், காரைக்குடி ஏ. அருனுசல ஆசாரியின் தலைமையில் வேலையைத் துவக்கி, சுமார் இரண்டு ஆண்டுகளில் பூர்த்தி செய்து பாரம்பரிய முறைப்படி காரைக்குடி அருள்மிகு கொப்புடைய நாயகி அம்மன் வெளிச்சுற்று வீதியில் (தற்சமயம் கல்லுக்கட்டி என்று அழைக்கப்படும் வெளி வீதியில் முதலில் வெள்ளோட்டம் காணப்பெற்று, பின்பு எல்லா பாகங்களையும் பிரித்து வரிசைப்படுத்தி பெட்டிகளில் வைத்து மலாயா நாட்டிற்கு கப்பலில் கொண்டு வரப்பெற்றது, (1924) குரோதன ஆண்டு பங்குனித் திங்கள் ஏ. அருணாசல ஆசாரியின் சகோதரர் ஏ. காளிமுத்து ஆசாரியின் தலைமையில் மீண்டும் எல்லா பாகங்களையும் சேர்த்து கோலாலம்பூரில் வெள்ளோட்டம் செய்யப்பெற்றது.

இரதத்தில் உள்ள மொத்த அடுக்குகள் (பாகங்கள்) 21

1) தங்க மூலாம் பூசிய ஸ்தூபி நாசி தலையுடன்.
2) பண்டி, எட்டு திருவாச்சியுடன்
3) சிறிய கொடுங்கை, தங்க முலாம் பூசிய சிறிய ரசக் குண்டுகள், தங்க முலாம் பூசிய எட்டு சூரிய காந்தி பூக்கள் உள்ளன.
4) சிறிய புறாக்கூடு
5) சிறிய வியாழ வேதியியழ், இதன் மேல் எட்டு சாலைகள், பதினாறு மயில்கள், எட்டு பூத கலைகள் வர்ணம் பூசப்பட்டுள்ளது.
6) நடுக் கொங்கை. இதில் தங்க முலாம் பூசிய நடுத்தர ரசக் குண்டுகள் உள்ளன. இதில் வர்ணம் பூசிய எட்டு சிறிய காந்தர்வ பொம்மைகள் உள்ளன.
7) பெரிய புரு கூடு
8) பெரிய வியாழ வேதியியழ். இதில் வர்ணம் பூசிய எட்டு சாலகரத் தூண்கள் மற்றும் எட்டு இரதக் கூடுகள் உள்ளன.





ரிஷபாரூடர்



ஆறுமுகர்



சிவன், சண்டிகேஸ்வரர், பார்வதி



சிவன், பிள்ளையார், பார்வதி



அர்த்தநாரீஸ்வரர்



கஜசம்ஹாரமூர்த்தி



மார்கண்டேயர் காலசம்ஹாரமூர்த்தி



மன்மதன் அம்பு எய்தல்



பிச்சாடனர்

9) பெரிய கொடுங்கை. இதில் ஆகப் பெரிய ரசக் குண்டுகளுக்கு தங்க முலாம் பூசி இருக்கிறது. மற்றும் வர்ணம் பூசிய எட்டு பெரிய காந்தர்வ பொம்மைகள் உள்ளன.

10) வெள்ளி சட்டம்

11) வெள்ளித் தூண்கள் எட்டு, வெள்ளி பூண் பிடிக்கப்பட்ட நாகராஜ் இலுவைக் கம்பிகள் எட்டு, தூண்களின் மேல் வெள்ளி காமன் வளைவு பலகை எட்டு, வெள்ளி யாழி சிங்கம் எட்டு, மற்றும் வண்ண வெல்வெட்






துணிகளால் செய்யப்பட்ட தொம்கைகள் எட்டு மாட்டப்பட்டு உள்ளது.

12) முதலாவது வெள்ளி கொரட்டு வர்க்கம். இதில் பச்சை முத்து கட்டி இருக்கிறது. இதில் வெள்ளியினால் ஆன சாமிபீடம் மற்றும் எட்டு தூண்கள், வெள்ளிப் பூண் பிடிக்கப்பட்ட எட்டு நாகராஜ் இலுவைக் கம்பிகள் இதன்மேல் வைக்கப்பட்டு இருக்கிறது.

13) இரண்டாவது வெள்ளி கொரட்டு வர்கக்ம் - இதில் தங்க முலாம் பூசிய வெள்ளி நெல்லிக்காய் மணி கட்டி இருக்கிறது.

14) முதலாவது வெள்ளி அரண்மனை பத்மம்

15) இரண்டாவது வெள்ளி அரண்மனை பத்தம்

16) சிகப்பு மற்றும் பச்சை முத்து கட்டிய வெள்ளி பத்மாசன பீடம்

17) வெள்ளி உபபீடம்

18) மரத்தில் வர்ணம் பூசிய மிதிலைபார் - இதன் மேல் பித்தளை தகடு போட்டிருக்கிறது. இதில் வெள்ளி பீடத்தில் பிரம்மா சாரதியாகவும் மற்றும் வர்ணம் பூசிய நான்கு வெஞ்சாமர பொம்மைகள் உள்ளன.

19) மரத்தில் வர்ணம் பூசிய யானைகள் - இதில் யானைகள் மற்றும் புராண வரலாறுகளைச் சித்தரிக்கும் பொம்மைகள் உள்ளன. சில பொம்மைகளின் படங்கள் இத்துடன் இணைத்து உள்ளன.

20) மரத்தில் வர்ணம் பூசிய தாமரை பூக்கள் உள்ள பார் இருக்கிறது.

21) வர்ணம் பூசிய மரத்தில் பூதப் பெரிய பித்தலைத் தகடு பிடிக்கப்பட்ட பலகை மேல் வர்ணம் பூசிய இரண்டு குதிரைகள் உள்ளன. நான்கு மரபார்களும் சக்கரத்துடன் சேர்ந்து சகடை என்று அழைக்கப்படுகிறது. சகடையில் இரண்டு தண்ட வாகளங்களும் இரண்டு தெப்பக் கட்டைகளும் (அச்சு) உள்ளது. இந்த தெப்பக் கட்டைகைகளில் இரும்பிலான சக்கரங்கள் பூட்டப்பட்டு உள்ளது. முன்தெப்பக் கட்டையில் போல் மரத்துடன் டர்ன் - டேபில் (Steering) மாட்டப்பட்டு உள்ளது.

84 ஆண்டுகளுக்குப் பிறகு 2008 செப்டம்பர் மாதம் இந்த இரதத்தைச் செய்த காரைக்குடி ஏ. அருணாசல ஆசாரியின் பெயரன் ஏ.ஆர்.எஸ். நடராஜ ஆசாரி தலைமையில் புதுப்பிக்கும் வேலையை காரியக்காரர் சுப.சு. சு. இராமசாமி அவர்கள் துவக்கி சுமார் 6 மாத காலத்திற்குள் முடித்து 1.2.2009இல் இரண்டாவது வெள்ளோட்டம் சிறப்பாக நடைபெற்றது.

ஸ்தூபியில் இருந்து உபபீடம் வரை 17 பாகங்களையும் பிரித்து பழுதுகள் நீக்கி மீண்டும் கோர்த்து இருக்கிறது. சகடையும் மரத்தில் ஆன பார்களையும் பிரிக்கவில்லை.



# துள்ளி விளையாடும் சின்னப்பிள்ளை



கந்தனுக்கும் வேல் வேல் செந்தூர் வேலனுக்கும் வேல்வேல்
கந்தனுக்கும் வேல் வேல் செந்தூர் வேலனுக்கும் வேல்வேல்

துள்ளிவிளையாடும் சின்னப் பிள்ளைமுகம் மறந்து
வெள்ளி விளையாடும் மலேயா சீமை தன்னை அடைய
நாகப்பட்டினத்துக் கடலில் நங்கூரம் பாய்ச்சி நிற்கும்
செட்டிகப்பலுக்குத் துணையாம் செந்தில் ஆண்டவனே!

செந்தில் ஆண்டவனே! ஐயா செந்தில் ஆண்டவனே!
வந்தவினை தீர்க்கும் எங்கள் செந்தில்வடிவேலா

கப்பல் ஏறுகையில் முதலில் கடல் முகம் தெரியும்
கண்களில் நீரோடு நிற்கும் மனைவி முகம் தெரியும்
அன்னைமுகம் தெரியும் அன்புப் பிள்ளை முகம் தெரியும்
அந்த முகங்களிடைச் செந்தூர் கந்தன்முகம்தெரியும்.

பினாங்கு துறைமுகத்தைக்கப்பலும் பிடித்து விட்டதையா
கப்பல் அடியிலே கூட்டம் கண்டிட வந்திருக்கு
தண்ணீர்ப் பூமலையில் நிற்கும் தண்ணீ மலையானே! எங்கள்
பெண்டு பிள்ளைகளைக் காக்கும் பெரிய மலையானே

தண்ணி மலையானே! நெஞ்சின் தாகம் தீர்ப்பானே
கண்களில் நீர்வழிய நாமும் கைகள் குவிப்போமே
தைப்பூச நாளினிலே அவனும் தங்க ரதமேறி
நகரத்தைப் பார்க்கத் தேரில் நகர்ந்து வந்திடுவான்

பார்க்குமிடமெல்லாம் தமிழர் பக்திமுகம் தெரியும்
காவடி ஆடிவரும் சீனர் காலடியும் தெரியும்
கந்தனுக்கு வேல் வேல் செந்தூர் வேலனுக்கு வேல் வேல்
கடலலை தாண்டி எடுக்கும் காவடிக்கு வேல் வேல்!

கந்தனுக்கு வேல் வேல்! காவடிக்கு வேல் வேல்!
கந்தனுக்கு வேல் வேல்! காவடிக்கு வேல் வேல்!

- பேராசிரியர் மா.கண்ணப்பன்





# ஔவையும் முருகனும்

**பேராசிரியர் முனைவர் இராம கருணாநிதி PBM**
**அறங்காவலர், ஸ்ரீருத்ரகாளியம்மன் ஆலயம், சிங்கப்பூர்**



“அறம்செய விரும்பு” எனும் குழந்தைகளுக்குத் தேவையான பாடத்தை எளிமையாகச் சொல்லிக்கொடுத்த தமிழ்மூதாட்டி ஔவையார். நல்லசெயல்களைச் செய்ய ஆசைப்படு என்பது தானே குழந்தைக்கேற்ற அறிவுரை! இப்பொழுது அறம்செய விரும்பு, பிறகு அறம் செய் என்பது கருத்து. இதுபோல “அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்” என்றும் “ஆலயம் தொழுவது சாலவும் நன்று” என்றும் அன்போடு அறவுரை சொன்னவள் ஔவையார். ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி என்றுபாடிக் குழந்தைகளுக்கு நல்வழிகாட்டிய ஔவையின் தமிழ் அமுதத் தமிழ். இவற்றைப் படித்தால் குன்றாத் தமிழ்ஒலியும், குறையாத் தமிழறிவும், வளமான தமிழ் அடிப்படையும் வாய்க்கும் என்று பாராட்டுகிறார் பேராசிரியர் வ. சுப. மாணிக்கனார். மீண்டும் தொடக்கப் பள்ளிகளில் இவற்றைப் பாடமாக வைத்தால் குழந்தைகளின் வாழ்வு முழுவதும் வளமாக அமையும். ஆங்கிலத்தில் “Child is the father of the man” (மனிதனுக்குத் தந்தை குழந்தையே) என்பார்கள். குழந்தை திருத்தமாக வளர்ந்தால் மனிதன் சிறந்தவனாக வருவான்.

“இன்று குழந்தைகள் நீங்கள்
இனி இந்த நாட்டினை ஆளப்பிறந்தீர்”

என்று ஒரு கவிஞர் பாடுகிறார். எல்லாக்கவிஞர்களும் பெரியவர்களுக்காகப் பாடிய போது, குழந்தைகளுக்காகவும் பாடியவர் ஔவையார். இதற்கு என்ன பரிசு தரலாம் என்று முருகன் சிந்தித்தான். தமிழ்பாடிய ஔவைக்குத் தன்னையே தரவேண்டும் என நினைத்தான். வேலேந்தும் வேலன், கையில் கோலேந்தியபடி அவளுக்குக் காட்சி கொடுத்தான்.



தமிழ்நாட்டில் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் வாழும் ஊர்களில் குறிப்பிடத்தக்க ஊர் நாட்டரசன் கோட்டை. பழைய பூம்புகார் எனப்படும் காவிரிப்பூம்பட்டினத்தில் இறைவன் ஆலயங்கள் நடுவில் இருக்க, அவற்றைச் சுற்றிலும் உள்ள இடங்களில் மக்கள் வீடுகட்டி வசித்தனர். இது போலவே சிவன்கோயில், பெருமாள்கோயில், கண்ணாத்தாள் கோயில் ஆகியவை நடுவில் இருக்கச் சுற்றிலும் வீடுகள் விளங்கும் ஊர் நாட்டரசன் கோட்டை. கம்பன் சமாதி காட்சியளிக்கும் இவ்வூருக்கு வருகிறாள் அருந்தமிழ் மூதாட்டி ஔவைப்பாட்டி. ஊரையடுத்த காட்டுப்பகுதியில் ஔவையார் நடந்து வருகிறாள். அங்குள்ள நாவல் மரத்தில் ஒரு சிறுவன் உட்கார்ந்திருக்கிறான். அவனைப் பார்த்த ஔவையார் "அப்பா! பசியாக இருக்கிறது, கொஞ்சம் நாவல் பழங்களைப் போடுகிறாயா?" என்றாள். "பாட்டி, சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா?" என்றான் சிறுவன். பாட்டிக்கு வியப்புத் தாங்கவில்லை. பழத்தில் என்ன சுட்ட பழம் சுடாத பழம் என்று புரியவில்லை. இதை இவனிடம் கேட்கக் கூடாது. நம் கல்வியறிவுக்கு அது சரியில்லை என்று நினைத்தாள். சந்தேகத்தைக் காட்டிக்கொள்ளாது "சுட்ட பழம் போடு" என்றாள். சிறுவன் மரத்தை உலுப்ப, நிறையப் பழங்கள் விழுந்தன. எல்லாம் நன்றாகப் பழுத்த பழங்களானதால் அவற்றில் மண் ஒட்டிக் கொண்டது. ஔவை பழத்தைப் பொறுக்கி வாயால் ஊதினாள். மேலே இருந்த சிறுவன் கேட்டான் "என்ன பாட்டி? ரொம்பச் சுடுதா?" பாட்டிக்கு புரிந்துவிட்டது! பழுத்தபழம் சுட்டபழம். உலக அனுபவங்களால் சுடப்பட்டு மனிதமனம் பழுக்கிறது. பழுக்காத பழம் சுடாதபழம். "இது எனக்குத் தெரியவில்லையே! கருங்காலிக் கட்டையைப் பிளக்கும் கோடாரி வாழைத்தண்டைப் பிளக்கமாட்டாமல் மாட்டிக்கொண்டு விட்டதே! இந்த நாட்டரசன் கோட்டையில், இச்சிறுவனிடம் நான் தோற்றுப் போய்விட்டேனே!

''கருங்காலிக் கட்டைக்கு நாணாக்கோ டாரி
இருங்கதலித் தண்டுக்கு நாணும் பெருங்கானில்
காட்டெருமை மேய்க்கின்ற காளைக்கு நான் தோற்றேன்
நாட்டரசன் கோட்டை நகர்க்கு''

என்று பாடினாள். " பாட்டி, நன்றாகப் பாடுகிறாயே! உனக்குத் தமிழ்ப்புலமை அதிகமோ? " என்றான் சிறுவன். பாட்டிக்குப் புரிந்துவிட்டது. வந்தவன் வடிவேலன் என்று மனம் சொல்லிவிட்டது.

எனக்கென்ன தமிழ்ப்புலமை? என்னப்பனே! முருகா! எல்லாம் நீகொடுத்தது. என்னைச் சோதிக்கலாமா? உன் சோதனையை என்னால் தாங்க முடியுமா? உன் திருவிளையாடலுக்கு நான்தானா கிடைத்தேன்? குறிஞ்சிக்கிழவனாகிய நீ இந்தக் கூனல்கிழவியோடு விளையாட வந்தாயா?

''மயிலேறும் வடிவேலனே இந்த
வயதான கிழவிமுன் வாதாட வந்தாயோ?''

என்று பாடினாள். சிறுவன் முருகனாகக் காட்சிதந்தான். தமிழ்தந்து விளையாடியவன் இன்று







கனிதந்து விளையாடினேன் என்று காட்டினான். "பாட்டி! எனக்குத் தமிழ்பிடிக்கும். தமிழ்பாடும் உன்னைப்பிடிக்கும். தமிழ்பாடும் எல்லோரையும் பிடிக்கும். தமிழில் வைதாரைக்கூட, நான் வாழவைப்பேன். பாட்டி! எனக்கு நான்கு வினாக்களுக்கு நீ விடை தரவேண்டும். தருவாயா?" என்றான்.

"எல்லாம் நீ கொடுத்தது. வினாவும் நீயே விடையும் நீயே. என் மூலம் நீ பேசப்போகிறாய். கேள் அப்பனே." என்றாள் பாட்டி. முருகன் கேட்டான், "பாட்டி, இனியது எது?" ஔவை பாடினாள்:

இனியது கேட்கில் தனிநெடு வேலோய்  
இனிது இனிது ஏகாந்தம் இனிது.  
அதனினும் இனிது ஆதியைத் தொழுதல்.  
அதனினும் இனிது அறிவினர்ச் சேர்தல்.  
அதனினும் இனிது அறிவுள் ளோரைக்  
கனவிலும் நனவிலும் காண்பது தானே.

தடுமாறாத மனத்தோடு தனித்திருப்பது இனியது. ஆதியான கடவுளைக் கும்பிடுவது அதைவிட இனியது. அறிவாளிகளோடு சேர்வது அதைவிட இனியது. எல்லாவற்றிலும் இனியது அறிவுள்ள சான்றோர்களைக் கனவிலும் நனவிலும் காண்பதுதான் என்றாள் ஔவை.
"பாட்டி! எது கொடியது? என்றான் முருகன். ஔவை பாடினாள்:

கொடியது கேட்கின் நெடியவெவ் வேலோய்!  
கொடிது கொடிது வறுமை கொடிது.  
அதனினும் கொடிது இளமையில் வறுமை.  
அதனினும் கொடிது ஆற்றொணாக் கொடுநோய்.  
அதனினும் கொடிது அன்பிலாப் பெண்டிர்.  
அதனினும் கொடிது  
இன்புற அவர்கையில் உண்பது தானே.

கொடுமையைக் களைய நெடிய வேல் ஏந்திய முருகப்பெருமானே! வறுமை கொடியது. அனுபவிக்கவேண்டிய காலத்தில் அனுபவிக்கமுடியாமல் செய்யும் இளமைக்கால வறுமை மிகக்கொடியது. தீர்க்கமுடியாத நோய் அதைவிடக்கொடியது. அன்பிலா மனைவியைப் பெறுதல் அதைவிடக்கொடியது. அவள் கையால் இன்பமுற உண்பது எல்லாவற்றிலும் மிகமிகக் கொடியதாகும் என்றாள் ஔவை.

"பாட்டி, பெரியது எது?" எனக்கேட்டான் முருகன். ஔவை தொடர்ந்தாள்:

பெரியது கேட்கின் எரிதவழ் வேலோய்!  
பெரிது பெரிது புவனம் பெரிது.  
புவனமோ அந்த நான்முகன் படைப்பு.  
நான்முகன் கரியமால் உந்தியில் வந்தோன்.  
கரியமாலோ அலைகடல் துயின்றோன்.  
அலைகடல் குறுமுனி அங்கையில் அடக்கம்  
குறுமுனி யோகல சத்தில் பிறந்தோன்  
கலசமோ இந்தப் புவியினில் சிறுமண்  
புவியோ அரவினுக் கொருதலைப் பாரம்  
அரவோ உமையவள் சிறுவிரல் மோதிரம்  
உமையோ இறையவர் பாகத் தொடுக்கம்  
இறைவரோ தொண்டர் உள்ளத் தொடுக்கம்  
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே.



நெருப்புப் போல் ஒளிவீசும் வேலை ஏந்திய முருகப்பெருமானே! எது பெரியது என்று கேட்கிறாய்! சொல்கிறேன். இந்த உலகம் பெரியது. உலகம் நான்முகனால் படைக்கப் பெற்றது. நான்முகன் திருமாலின் உந்திக் கமலத்தில் வந்தவன். திருமால் கடலில் பள்ளி கொண்டவன். கடலோ அகத்தியன் கையில் அடங்கும். அகத்தியன் கலசத்தில் பிறந்தோன். கலசமோ சிறுமண். அது உலகில் உள்ளது. உலகம் ஆதிசேடனுக்குத் தலைமேல் பாரமாய்த் தாங்கப்படுவது. ஆதிசேடனாகிய பாம்பு உமையவள் கையில் சிறிய மோதிரம். எனவே உமையாள் பெரியவள். உமையாள் சிவபெருமான் இடப்புரத்தில் ஒடுக்கம். எனவே சிவபெருமான் பெரியவர். அந்தச் சிவபெருமான் தொண்டர் உள்ளத்தில் ஒடுங்குபவர். அந்தத் தொண்டர்களின் பெருமைதான் சொல்லமுடியாத அளவுக்குப் பெரியது என்றாள் ஔவை.

நால்வேதப் பொருளான ஞானமூர்த்தி நான்காவது கேள்வியைத் தொடுத்தான். “பாட்டி, மிகமிக அருமையானது எது?” பாட்டி பாடலைத் தொடர்ந்தாள்:

அரியது கேட்கின் வரிவடி வேலோய்!
அரிது அரிது மானிடர் ஆதல் அரிது.
மானிடர் ஆயினும் கூன்குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்தல் அரிது.
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமும் கல்வியும் நயத்தல் அரிது.
ஞானமும் கல்வியும் நயந்த காலையும்
தானமும் தவமும் தான்செய்தல் அரிது.
தானமும் தவமும் தான்செய்வ ராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே.

கூர்மையான ஞானவேல் ஏந்திய பெருமானே! மக்கள் பிறப்பு மிகவும் அரியது. அப்படிப் பிறக்கும்போது கூன், குருடு, செவிடு, அலி என்ற குறைகள் இல்லாமல் பிறப்பது அதைவிட அரியது. அப்படி பிறந்தாலும் ஆத்மஞானம் நற்கல்வி ஆகியவை பெறுவது அரிது. அப்படிப் பெற்றாலும் அவர்கள் தானத்தையும் தவத்தையும் செய்வது எல்லாவற்றிலும் அரியது. அப்படித் தானமும் தவமும் செய்தால், அந்தச் சான்றோர்களுக்கு சொர்க்கத்தின் கதவுகள் திறந்துவைக்கப் பட்டிருக்கும் என்றாள் அறிவுச்சுடர். ஔவையின் அறிவுத் திறனை மேலும் வெளிக்கொணர்ந்த முருகன் மகிழ்ந்தான். பாட்டியின் மூலம் பலருக்கும் அருள்புரியச் சுட்டபழம் போட்ட சுவாமிநாதன் திட்டமிட்டுச்செய்த திருவிளையாடல் இது.

இப்பாடல்களைப் பாடிய ஔவையார் சங்ககாலப் புலவர் அல்ல. இவர் பிற்காலத்தில் பதினேழாம் நூற்றாண்டுக்குப்பிறகு தோன்றிப் பிள்ளைகளுக்காக பாடிப் பெரும்புகழ் பெற்றவர். இந்தப் பாடல்களை உணர்ந்து பின்பற்றினால் நம்மையும் வானவர் நாடு வழிதிறந்து வரவேற்கும். ஔவையார் பாடிய பாடல்களை நம் வீட்டுக் குழந்தைகளுக்கு சொல்லிக் கொடுத்தால் அவர்கள் வாழ்வும் வளம் பெறும்.

மேற்கோள்கள்:

1. ஔவையார் தனிப்பாடல்கள்
2. சொந்தத் தொடர்பு: பேராசிரியர் பொற்கிழிக்கவிஞர் சொ. சொ. மீ. சுந்தரம், மதுரை





# கோலாலம்பூர் நாட்டுக்கோட்டை நகரத்தார் தர்ம பரிபாலன சபை

"கேடில் விழுச்செல்வம் கல்வி" என்று வள்ளுவர் புகழ்ந்து உரைத்த கல்விச் செல்வத்தை ஏழை மாணவரும் அடைந்து உயரவேண்டும் என்ற விழுமிய நோக்கத்தோடு இச்சபை கோலாலம்பூர் நகரத்தாரால் 20-02-1967ம் தேதி நிறுவப்பட்டது. இது வசதி குறைந்த மாணவர்கள் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் பயில்வதற்கு ஆண்டுதோறும் நிதி உதவி (scholarship) அளித்து வருகிறது.

இச்சபைக்கு, தமிழகம், சிவகங்கை மாவட்டம், காரைக்குடி நகரத்தில் ஓர் அலுவலகம் உள்ளது. இந்த அலுவலகத்திற்காக, நகரின் மையப் பகுதியில், சிவன் சன்னதியில் "கோலாலம்பூர் ஸ்ரீ தண்டாயுதபாணி மாளிகை" என்ற பெயரில் 2010-ம் ஆண்டு ஒரு கட்டிடம் கட்டப்பட்டது.

தோற்றப் பொலிவுடன் அமைந்துள்ள இந்தப் புதிய கட்டித்தில் 2011-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் முதல் நம் சபை இயங்கிவருகிறது. இங்கு கீழ்த் தளத்தில் 6 கடைகளும், ஒரு பல்நோக்குக் கூடமும் (Multhipurpose Hall) அலுவலக அறையும் அமைந்துள்ளன.

மேல் தளத்தில், விருந்தினர் தங்குவதற்காக 9 அறைகள் உள்ளன. நான்கு படுக்கை கொண்ட குடும்ப அறைகளும் (Family Rooms), இரண்டு படுக்கை கொண்ட அறைகளும் (Double Rooms) உள்ளன. அனைத்து அறைகளும் குளிர்பதன வசதி (Air-conditioned) கொண்டவை. ஒரு மேலாளரும், ஒரு உதவியாளரும், மற்றும் பணியாட்களும் சேவையில் உள்ளனர். அமைதியும், தூய்மையும் பேணப்படும். இவ்விடுதியில் தங்க விரும்புவோர் 00-91-4565-250470 என்ற எண்ணில் தொடர்பு கொண்டு, முன்பதிவு செய்துகொள்வது அவசியம்.










# காவடியாம் காவடி... கந்தவேலன் காவடி



உரை நடைக் கட்டுரை

கரு. கார்த்திக்

செந்தூல் தண்டாயுதபாணி கோவிலில் மாலை பூசை முடிந்து வழக்கம்போல் கோவில் பிரகாரம் வந்து திண்ணையில் அமர்ந்தார் கருப்பஞ்செட்டி. பள்ளிக்கூடம் முடிந்து தனது பெற்றோர்களுக்காக கோவிலில் அதே திண்ணையில் காத்திருக்க வந்தார்கள் வள்ளியம்மை, கதிரேசன். சின்னான் எனும் ஆறாம் வகுப்பு மாணவமணிகள்.

கோவிலிருந்து இவர்களுக்காகவே கையில் கொண்டு வந்த இனிப்பு மோதகங்களை பிள்ளைகள் கையில் கொடுத்தார் கருப்பன் செட்டி.

“ஐயா, எங்க அப்பா வர்றதுக்குள்ளே எங்களுக்கு ஒரு கதை சொல்லுங்க” என்று சின்னான் கேட்க

“என்ன கதை சொல்றது” என்று ஐயா கேட்பதற்குள்

“காவடியைப் பற்றி சொல்லுங்க” என்றாள் வள்ளியம்மை

“ஆமா நானும் ஒரு தடவை காவடி எடுக்கணுண்ணு இருக்கிறேன். வேண்டுதல் இருக்காம் என் அம்மா சொன்னாங்க ஐயா. காவடி பற்றி சொல்லுங்க” என்றான் கதிரேசன்.

“காவடி எப்படி யாரால் முதலில் சுமக்கப்பட்டது? என்றான் சின்னான்.

கையில் வைத்திருந்த தேங்காய் அர்ச்சனையை பக்கத்தில் வைத்து விட்டு அதில் இருந்த சிறிய பாக்குத் துண்டை வாயில் போட்டபடி

“இமயமலை அரசன் இமவான் பெற்ற பார்வதிக்கும் பரமேஸ்வரனுக்கும் திருமணம் நடந்தது. நான்முகன் பிரம்ம தேவர் நெய்விட்டு யாகம் வளர்க்க மூன்று உலக







தேவர்களும் ஒருங்கே குவிந்திருந்தார்கள். அதனால் அவுக இருந்த வட பகுதி தாழ்ந்து தென் பகுதி உயர்ந்திருச்சு. தேவர்களெல்லாம் என்னடா ஈசன் திருமணத்தில் இப்படி நடக்கலாமா? அதுக்கு ஈசனே எல்லோரையும் சமாதானப்படுத்த ஒரே ஒரு குள்ளமுனி ஒருவர் போனால் மலை சரிசமமாகி விடும் என்று அகத்தியரை அனுப்பி வைத்தார். இடைமறித்தான் சின்னான்.

"யார் ஐயா அகத்தியர்?"

'அ' னாவிலிருந்து 'ன்' வரை தமிழுக்கு இலக்கணம் வகுத்தவர் தமிழ் முனிவர் அவரு.

"சரி சொல்லுங்க" என்றாள் வள்ளி.

"அகத்தியர் ஈசன் கட்டளைப்படி தென் பகுதி நோக்கி போனார். அது சமயம் அசுரத் தலைவன் யாரும் இல்லை சிவகிரி மலையையும் சக்தி கிரி மலையையும் கொண்டு வர இடும்பன் என்பவனை அனுப்பி இரண்டு மலைகளையும் சுமந்து வரச் சொன்னான்.

இடுப்பனும் விசுவரூபம் எடுத்து "விசுவரூபம்னா?" இது கதிரேசன்.

"வானத்தை தொடுற அளவு பெரிசாகிய உருவம்"

"வள்ளியம்மை கன்னத்தில் ஆள்காட்டி விரலை வைத்தபடி "ஆத்தாடி அம்புட்டு பெரிசா?" என்றாள்.

"அவுகளால நினைச்சபடி நினைச்ச உருவத்தில் வர முடியும் ஆத்தா..."

"சரி சொல்லுங்க ஐயா"

"வலது புறமாகவும் இடது புறமாகவும் இரண்டு மலைகளையும் கட்டி தோள் புரதியிலே வைச்சு சுமந்து புறப்பட்டான் இதனை அகத்தியர் பார்த்தார். தடுத்தார். இதுக்கு சரியான ஆள் முருகக்கடவுள்தான் என்று முருகனை அழைக்க முருகனும் சக்தி கிரி மலையில் ஏறி அமர்ந்து கொண்டார். அதனாலே இடும்பனாலே மலையை தூக்க முடியாது இறக்கி வைத்தான். முருகனை மலையிலிருந்து இறங்கிவர எச்சரிக்கை செய்தான் இடும்பன்.

"ஐயா... ஐயா... ஒரு நிமிஷம் அதுதான் நாம சாமி கோயில சுத்தி வரும் போது கட்டியம் சொல்றாங்களா? சின்னான் குறிக்கிட்டு கேட்டான்.

"சரியா சொன்னேய்யா... அந்த சக்திகிரி மலைதான் பிற்பாடு பழனி மலையானது. பழம் வேண்டி கிடைக்காததாலே ஆண்டிக் கோலம் பூண்டு கொண்டு நின்றதாலே பழம் நீ "பழனி" என்றும் உருவானது.

"அப்புறம் இடும்பன் என்ன ஆனாரு ஐயா" வள்ளியம்மை உற்சாகமாகி விட்டாள்.

"முருகனும் மனமிறங்கி இடும்பனை மன்னித்து தன்வசப்படுத்தி, காவடி சுமந்து வருபவர்கள் உன்னை முதலில் வணங்கி பூசையிட்டு பிறகு என்னை வந்து வணங்கினால் சகல நலமும் பெறுவாகன்னு சொன்னாரு.

"முருகப் பெருமான் குறிஞ்சிக் கடவுள், அபிஷேகப் பிரியன், அதனாலேதான் பால், பன்னீர், புஷ்பம், இளநீர், சந்தனம் என இவைகளை காவடிகளாக்கி சுமந்து அந்த ஞான தண்டாயுதபாணி முருகனுக்கு அபிஷேகம் செய்யுறோம்.

"நம்மவுக எடுக்கிற காவடி என்னையா"



இரு சொல்றேன் இன்னும் மச்ச காவடி, சர்ப்ப காவடி அதாவது பாம்பை பானையில் அடைச்சு காவடியா கொண்டு போய் மலையிலே விடுறது.

"ஐய்யோ" என்று அதிர்ந்து போனாள் வள்ளியம்மை...

"ஆனா அந்த காவடிகள் யாரும் பெரும்பாலும் சுமப்பது இல்லை... அந்த விஷப் பரீட்சைய செய்யுறதும் இல்லை. நம்மவுக காவடின்னா சக்கரைக் காவடி, பால் காவடி அதுதான் பால்குடம் எடுத்து செலுத்துகிறோம்.

"பொம்பளை காவடி எடுக்கக்கூடாதா ஐயா.. நா சக்கரை காவடி எடுக்கலாமாய்யா" என்று சந்தேகத்தை வினாவினாள் வள்ளியம்மை.

"எடுக்கலாம் எடுக்க கூடாதுன்னு இல்லை. நம்ம வீடுகள்ல ஆச்சிமார்கள் பெரும்பாலும் பால்குடம்தான்... ஆம்பளைகளெல்லாம் சக்கரைக்காவடி எடுக்குறாங்க நாங்க பால்குடம் எடுக்கிறோம்னு போட்டி போட்டுள்ள இப்போ ஆச்சிமார்கள் எண்ணிக்கை பெருகிடுச்சு. அதத்தான் நம்ம பினாங்கு தண்ணிமலையில் பார்த்திருப்பீகளே..."

இடைமறித்து கதிரேசன் "ஆம் ஐயா எங்க ஆத்தா கூட வருஷா வருஷம் பால்குடம் எடுப்பாக... ஆமா, கரும்புலே சேலை கட்டி பிள்ளையை தூக்கி வர்றாகளே அதுவும் காவடிதானா?

"ஆமா... நீ கூட கைப்பிள்ளையா இருந்தப்போ உன்னையும் அப்படி தூக்கி வந்திருப்பாக. ஐஞ்சு கரும்பு என்று சேர்த்துக்கட்டி பொதுவா.. புள்ளையை பெத்தெடுத்த தாயும் தகப்பனும் சேர்ந்து தங்களுடைய வலது தோள்ல சுமந்து கோயில் பிரகாரம் வரணும். ஆனா நம்மல்ல தொட்டில் கட்டி பிள்ளையை அதுல போட்டு ஆத்தாளும் அப்பச்சியுமாக புடிச்சிட்டு வருவாக தூக்கி கிட்டு வர்றது மத்த ஆளுக. ஆனா பினாங்கில நம்ம காவடிப் பிள்ளைகள் தூக்கி வருவாக...

"காவடி எடுக்கிறதா வேண்டிகிட்டா எத்தனை நாள் விரதம் இருக்கிறது ஐயா" சின்னான் ஆவலாய் கேட்டான்.

"ஒரு தைப்பூசத்துக்கு காவடின்னா சிலர் கார்த்திகை முதல் தேதி விரதம் ஆரம்பிப்பாக. ஒரு மண்டலம், 48 நாள் 21 நாள் 16 நாள்... இப்படி அவுக அவுக மனம்போல, தன்னை செம்மைப்படுத்திகிட்டா சரி. மனம் அது செம்மையானால் மந்திரங்களே தேவையில்லைன்னு திருமூலர்னு ஒருத்தர் சொல்லி இருக்கிறார்...

காவடிங்கிற அந்த கட்டை ஏதுல செய்வாக, எப்படி கட்டுறாக... அதுக்கு என்னென்ன வேணும் ஐயா?" வள்ளியம்மை கேட்க சின்னான் குறுக்கிட்டு

"எனக்குத் தெரியும். சக்கரை, மயில் இறகு, கயிறு இதுதானே ஐயா..."

"இருடா ஐயா சொல்லட்டும்" இது வள்ளியம்மை.

"சின்னான் தான் பினாங்குக்கு தைப்பூசம் தோறும் போய் வற்றானே அவனுக்குத் தெரியாதா என்ன.." வள்ளியம்மை.

"காவடி தேக்கு மரத்துல செய்தாக்க நாள்பட நிலைச்சிருக்கும், ஒரு காவடி கட்டுவதற்கு சிம்பு 9 குச்சி அல்லது 11 குச்சி அதனை மேலே ஆறாறு இஞ்ச் இடம் விட்டு சிறிய கயிறு வைச்சு கட்டி வலது புறமும் இடது புறமும் இரண்டு இரண்டு மயில் தோகைகளை கட்டணும். ஒரு செங்கல், அதை வைச்சு கட்டணும்.

"செங்கலையும் சேர்த்து கட்டனுமா?" வள்ளியின் ஆச்சரியக்கேள்வி.

"ஐய்ய.. சேர்த்து கட்டுறது இல்லை செங்கல், உயரத்துக்காக வைச்சு தோகையை கட்டினாக்க கைபிடி இருக்கும். காவடியை பிடிச்சு ஆட சௌரியமா இருக்குமுல்ல. அதுக்குத்தான்...



"ஓ.. அப்படியா சரி.. சொல்லுங்க..."

"ஐயா...., நா அந்த அர்ச்சனையில் இருக்கிற வாழைப்பழத்தை எடுத்துக்கட்டா" என்று கதிரேசன் கேட்க... ஒன்றை அவனுக்கு மற்றொன்றை வள்ளியிடமும் கொடுத்து ஐயா தொடர்ந்தார்.

"இப்போ மயில் இறகை கட்டிட்டோம் அடுத்து பன்னாங்கு, அதை காவடி மேலெ விரிச்சு சிறிய நூல் கொண்டு நாலு பக்கமும் கட்டணும்... அடுத்து வினாயகருக்கு பொங்கல் வைச்சுட்டு, குருவாக இருக்கிற சாமியாடி செட்டியார் அல்லது கோவில் பண்டாரம் இவங்கக்கிடே ரெண்டு செம்புகளையும் கொடுத்து அதுல சாம்பிராணி புகையை காட்டி அந்த செம்புகளில சுத்தம் செய்யப்பட்ட சக்கரையை நிரப்பி மூடி வைச்சு சின்ன காவித் துணியாலே முடிச்சுப் போட்டு மறுபடியும் புகை பிடிச்சு கொடுத்தவருகிட்டே கொடுத்து முத்திரை வாங்கிறது.

"முத்திரையின்னா" வள்ளியின் சந்தேகக் கேள்வி.

"ரப்பர்ஸ்டாம்ப் மாதிரி சீல் வைக்கிறோம்ல அதுமாதிரி ஆள் காட்டி விரலாலும் கட்டை விரலாலும் துளி விபூதியை எடுத்து தீர்த்த கிண்ணத்துல இருக்கிற அத்த தீர்த்தத்தைக் தொட்டு செம்புல கட்டி இருக்கிற அந்த துணியில வைச்சு கொடுப்பாரு, அத வாங்கி மறுபடியும் இன்னொரு காவித் துணியிலே முடிச்சுபோட்டு நம்ம ஊர் வீடுகள்ல தொங்குமே உறி - அது பெரிது. இந்த உறி சிறியது. இந்த செம்பை அதுல வைச்சு காவடி தண்டுலே வலது பக்கமும் இடது பக்கமும் நல்லா இறுக்க கட்டணும். இப்போ இந்த முத்திரைங்கிற சக்கரையை கட்டினதும் காவடி பலமாகிறது. இதனை கொண்டு போய் பத்திரமா செலுத்தணும். காவடியை செலுத்தின பிறகு, சக்கரை இருக்கிற செம்பை அவிழ்த்து பஞ்சாமிர்தம் கலக்குகிறவங்க கிட்ட கொடுத்தா அவுக அத அவுக பஞ்சாமிர்தத்துல சேர்த்துக்குவாக.

"பஞ்சாமிர்தம் முருகனுக்கு ரொம்ப பிடிச்சதுதானே ஐயா?" கதிரேசன் வாழைப் பழத்தை தின்றபடி கேட்டான்.

"ஆமா, அதுவும் பஞ்சாமிர்தம் கலக்கும்போது பேசக்கூடாது. எச்சில் தெரிக்கும் அதனாலே துண்டாலே வாயை கட்டிக் கொள்ளலாம். கை படாம இரண்டு அடி கரும்பு துண்டுகளைக் கொண்டு பஞ்சாமிர்தம் செய்யுறது சிறந்ததா இருக்கும். கெடாமலும் இருக்கும் அப்புறம் கட்டியிருக்கும் காவடியை பிரிச்சு பக்குவமா மயில் இறகை அது அது பைகள்ல வைச்சு அடுத்த வருஷம் எடுக்கணுமுல்ல அதுக்கு பாதுகாப்பா எடுத்து வைக்கணும்..."

"ஐயா... நல்ல விளக்கம் கொடுத்தீக. நம்ம நகரத்தார் காவடி மலேசியாவில எந்தந்த ஊர்கள்ல எடுக்கப்படுது" இதுவும் வள்ளியம்மைதான்.

"பினாங்குல தைப்பூசத்துக்கு காவடி எடுக்க ஆரம்பிச்ச காலத்துல அங்கே எட்டு கிட்டங்கி இருந்தது. கிட்டங்கிக்கு ஒரு காவடின்னு எட்டு காவடிகள் எடுத்தாக... பிறகு கிட்டங்கி நான்கானது. காவடியும் நான்கானது. கிட்டங்கி காவடி தவித்து பிரார்த்தனைக் காவடி தொடக்கி வைச்சவுக





கண்டவராயன் பட்டி இன்சூரன்ஸ் (சிங்கப்பூர்) S. வெங்கிடாசலம் செட்டியார்தான் இத்த ஐஞ்சு காவடிகளும் இப்போ இருக்கிற கோயில் (138) வீட்டுலிருந்து புறப்படலே. அதுக்கு எதிர்புறம் இப்போ இருக்கே கல்லல் தே. சுப்பையா செட்டியார் லாயர் அலுவலகம் அதுதான் அப்போதைய கோயில் வீடு. யுத்தத்திலே கிட்டங்கிகள் சிதைந்து போய் புதுப்பித்து கட்டப்பட்ட பிறகுதான் இப்போ இருக்கிற கோயில் வீடு அமஞ்சது. இப்படி நான்கும் ஒன்றுமாக இருந்தது பினாங்கில காவடி. அப்போ கிட்டங்கி காவடிப் பிள்ளையாக இருந்த வாளப்பூரைச் சேர்ந்த ஆராவயல் ராம நாச்சியப்ப செட்டியார் பிரார்த்தனை காவடி எடுக்க சேர்த்துகிட்டாக. 1969 தொடங்கி தொடர்ந்து எடுத்து வறாக... வெங்கிடாசலம் செட்டியார் காலத்துக்கு பிறகு அந்த காவடிய கோயிலுக்கு கொடுத்துட்டாக. அன்றைக்கு இரு பிரார்த்தனைக்காவடியாக இருந்தது, இன்னைக்கு எண்ணிக்கை 80 தாண்டி நூற்றையும் எட்டும்னு இருக்கு. அன்றைக்கு காவடி எடுக்க ஆளுக கெஞ்சுனாக, இன்னைக்கு காவடி எடுக்ககிடைக்க கெஞ்ச வேண்டியிருக்கு... பாருங்க அந்த தண்டாயுதபாணி கிருபையை".

"பினாங்கு தவிர்த்து வேறு எந்த ஊர்ல காவடி எடுக்கிறாக..." சின்னான் உட்கார்ந்தவன் எழுந்து நின்று கேட்டான். அவனது கையைப் பிடித்து அமரச் செய்தபடி தொடர்ந்தார்.

"நம்ம ஊர்ல முந்தி 8 கிட்டங்கி அதுல 34ம் நம்பர் கிட்டங்கி M.C.T.M. கிட்டங்கியும் 79ம் நம்பர் ஆத்தங்குடியார் கிட்டங்கி இது இரண்டும் இப்போது இல்லே. எண்ணிக்கை ஆறாக குறைஞ்சி நம்ம ஊர்ல இருக்கிற பெரிய வீடுகள் மாதிரி பூட்டியே வைக்கிற நிலையாயிருச்சு.

பங்குனி உத்திரத்துக்கு மட்டுந்தான் நம்மவுக கிட்டங்கி பக்கம் வர்றாக. 30 வருஷத்துக்கு முனாலே தேவகோட்டை ஐயா நமஸ்காரம் பழனியப்ப செட்டியார் நம்ம தண்டாயுதபாணிக்கு காவடியைத் தொடங்கி வைச்சாக. அவுக தொடர்ந்து எடுத்தாக.. அவுக இடையிலே சிலகாலம் இல்லாமல் இருந்தது, பிறகு அரண்மனை சிறுவயல் சார்ட்டெட் பேங்க் இராமனாதன் செட்டியார் தொடக்கி வச்சாக. இப்போ பத்து பதினொன்று பெருகி 20வது கூட ஆகும் போலிருக்கு. அதுபோல மலாக்காவில் பொய்யாத வினாயகர் கோவில் காவடி ஒன்று மட்டும் சன்னாசிமலைக்கு எடுத்து செலுத்துவாக. கோயில் பண்டாரம் சுமந்து வருவாரு. இடையிடையே நம்ம நகரத்தாரர்கள் வாங்கி ஆடுவாக.. இப்போ அங்கேயும் ஆண்டு தோறும் காவடி எண்ணிக்கை பெருகி வருது. பினாங்கில முதல் நாள் காலையில் திருவுளச்சீட்டுப் போட்டு காவடிகட்டி, மதியம் பொங்கல் வைச்சு இரவு பூசை நடத்தி, மறுநாள் காலையில் பண்டாரம் காவடிய தூக்கி தருவாரு... அத வலது தோள்ல வாங்கி ரதத்தோட நடந்து சிவன் கோவில் வந்து, சிறு நேரம் சன்னதிலே காவடியை இறக்கி வைச்சு, ஓய்வெடுத்து பிறகு ரதத்தோட தொடர்ந்து சாயுங்காலமா தண்ணிமலைக்கோயில் அடைவாக... அங்கே கோயில் பிரகாரம் வந்து இடும்பய்யாவ வலம் வ்ந்து மயிலடிக்கிட்டே வந்துதீபம் பார்த்து காவடிக்குன்னு இருக்கிற அறையிலே இறக்கி, விளக்கு ஏற்றி வைச்சு காவடிப் பிள்ளைக ஓய்வு எடுப்பாக. மூன்றாவது நாள் பூசம் அன்னைக்கு கோயில் வேலைகல காவடி பிள்ளைகள் பார்ப்பாக. நான்காம் நாள் காலை ராகு காலம் தவிர்த்து பொங்கல் வைத்து காவடிய எடுத்துக்கிட்டு வெளியே முச்சந்தியில் உள்ள முனியய்யா கோவில் வந்து தீபம் பார்த்து, நம்ம கோயிலுக்கு வந்து பெரிய பிரகாரம் வந்து இடும்பனை வலம் வந்து மயிலடியிலே நின்று கட்டியம் சொல்லி, உட்பிரகாரம் வந்து காவடியை செலுத்துகிறது. பண்டாரம் அதனை வாங்கி வைச்சு கொடுப்பாரு. அப்புறம் பிரிச்சு சக்கரையை கொடுக்கிறது. காவடி அறையிலே கொண்டு

போய் வச்சதும் நாலு கால பூசையும் காவடிக்கும் உண்டு. ஆனா நம்ம ஊர்ல ரன்னிங் (Running) திருவிழாதான். முதல் நாள் கட்டுற காவடி மறுநாள் காலையிலே சுவாமி போய் சேர்ந்ததும் அபிஷேகத்துக்குள்ள செலுத்திடுறோம்.

மலாக்காவில் முதல் நாள், காவடிகளுக்கு பள்ளையம் போடப்பட்டு பூசை நடத்துவாக. மறுநாள் பிள்ளையார் கோயிலிருந்து புறப்பட்டு ஒரே ஓட்டமும் நடையுமாக மதியம் சன்னாசிமலையை அடைஞ்சு, இரவு வினாயகருக்கு பொங்கல் வைத்து, மறுநாள் அதாவது மூன்றாவது நாள் மகம் அன்று மறுபடியும் பள்ளையம் போடப்பட்டு பூசை முடிந்து காவடி கோயில் பிரகாரம் வந்து செலுத்துவாக. இதுபோல சில வருஷங்களுக்கு முன் ஜாவியிலகூட சித்திரா பௌர்ணமிக்கு காவடி எடுத்தாக நம்ம பிள்ளைக...

நம் நாடு தவிர்த்து ஆயிரக்கணக்கிலே காவடி பழனிக்கும் சிங்கப்பூருக்கும் எடுக்கிறாக..

"ஐயா, எனக்கும் நீங்க சொன்னதும் காவடி எடுக்கணும்னு ஆசை இருக்கு... ஆவலாய் கதிரேசன் கேட்க...

"ஆசைக்காக காவடி எடுக்கப்படாது. ஆண்டவன்கிட்டே ஒரு வேண்டுதல் வைச்சு, அது நிறைவேறியதும் நல்லபடியா காணிக்கையைச் செலுத்தணும். நல்லா படிக்கணும், பரீட்சையில பாஸ் பண்ணனும்னு வேண்டிக்க... பணம் காசு நல்லா வரணுமுன்னு வேண்டிக்க தருவான் முருகன் கொண்டாடு கொண்டாடு தண்டாயுதத்தானை, குறையாத செல்வம் மிகுமே..." என்று ஐயா சொல்லி முடிக்க மூவரின் தந்தைமார்களும் தங்களது பிள்ளைகளை அழைத்து போக வந்தவர்களாக

"என்ன ஐயாவை தொந்தரவு செய்யுறீங்களா" என்றார் கதிரேசனின் தந்தை வள்ளியப்பன்.

"நல்ல வேளையா போச்சு. இவர்களால எனக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைச்சது காவடியைப் பற்றி சொன்னேன் எல்லாம் முருகன் அருள்தான் சரி போயிட்டு வாங்க நானும் கிட்டங்கிக்கு புறப்படுறேன்" என்றபடி பக்கத்தில் இருந்த தனது கறுப்புக் கொடையை எடுத்துக் கொண்டு சுவாமிய பார்த்து ஒரு கும்பிடு போட்டபடி புறப்பட்டார் கருப்பஞ்செட்டி.



"வீடு நமக்குண்டு அறுபடை வீடு
வேதம் நமக்குண்டு முருகனின் பாதம்
விருந்து நமக்குண்டு கந்தனின் நாமம்
மருந்து நமக்குண்டு வைத்தியநாதம்
முத்துகுமரன் சக்திச் சரவணன்
வைத்தியநாதனைப் பற்றி
முடியுடை மன்னன் திருமுடியருகே
கொடியுடை சேவலைக் கண்டு
கொத்தும் நாகம் பொல்லாதாக
கட்டுத்தோகையும் கண்டு
பேரின்ப வாழ்வினை என்றும் கண்டிட
கோமன்னன் வாழ்கின்ற
கோலமயிலாடும் கோலாலம்பூர்
செந்தூல் தண்டாயுதத்தாணை
தினமும் பணி மனமே

வெற்றி வேல் முருகனுக்கு அரோகரா!



# இரதம் உணர்த்தும் தத்துவம்

**சுப. திண்ணப்பன்,**
**தேசிய கல்விக் கழகம், சிங்கப்பூர்**

திருக்கோயில்களில் பத்து அல்லது பன்னிரண்டு நாட்கள் மிகச் சிறப்பாகப் பூசைகள் நடத்தி அங்குள்ள இறைத் திருவுருவங்களைப் பலவித வாகனங்களின் மேல் எழுந்தருளச் செய்து கோயில் பிரகாரங்களிலும் வீதிகளிலும் நடத்தும் விழாவுக்குத் திருவிழா என்று பெயர். சமஸ்கிருதத்தில் இதனை உத்சவம் என்று கூறுவர். உயிர்களாகிய நமக்காக இறைவன் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களைச் செய்கிறான். இவற்றை விளக்குவது தான் திருவிழாவாகும். திருவிழாக்களில் கோயிலில் உள்ளிருக்கும் இறைவன் கோயிலுக்கு வெளியே வந்து கோயிலுக்கு வரவியலாதவர்களுக்கும் காட்சி அளித்து அருள் கொடுக்கும் பெருங்கருணைத் திறத்தையும் நாம் உணர்ந்து கொள்கிறோம். இத்தகைய திருவிழாக்களில் ஒன்று இரதத்தில் இறைத் திருவுருவம் எழுந்தருளி வருதலாகும்.

முன்பு ஒரு காலத்தில் தாரகாட்சன், வித்யுந்மாலி, கமலாட்சன் என்னும் மூன்று அசுரர்கள் சிவபூசை செய்து பொன், வெள்ளி, இரும்புக் கோட்டைகளைப் பெற்றனர். பின்பு செருக்கடைந்து அக்கோட்டைகளுடன் பறந்து சென்று தேவர்களுக்கும் மக்களுக்கும் தொல்லையும் துன்பங்களும் விளைத்தனர். தேவர்கள் தொல்லை தாங்க முடியாது இறைவன் - சிவபெருமானிடம் - சென்று முறையிட்டனர். அந்த அசுரர்களின் இறுமாப்பை அடக்குவதற்காகச் சிவபெருமான் இரதம் ஏறினான். அதாவது பூமியையே - நிலத்தையே ஆண்டவன் இரதமாகக் கொண்டான். இந்தப் பூமியாகிய தேரில் நான்கு வேதங்களும் நான்கு வெள்ளைக் குதிரைகளாகப் பூட்டப்பட்டன. இங்கு வேதம் என்பது அறிவைக் குறிக்கும். இந்த இரதத்தைச் செலுத்துகின்ற சாரதி பிரமா எனப்படும் நான்முகன். இவனின் ஒவ்வொரு முகமும் ஒவ்வொரு திசையைக் குறிக்கும். இவன் வாயிலாக நில உலகெங்கும் அறிவு பரவுதல் வேண்டும், பூமியாகிய இரதத்தை வேதமாகிய குதிரைகளைப் பூட்டி ஒழுங்காக நடத்துபவன் பிரமா. இந்த இரதத்திற்குச் சக்கரங்களாக இருப்பவர் சூரியனும் சந்திரனும் ஆவர், நிலவுலகத்திற்கு ஒளியூட்டி இயக்குபவர்கள் இவர்கள் இருவர் தாமே. உயிர்களுக்கு வெம்மை தருபவன் சூரியன், தண்மை தருபவன் சந்திரன், வெம்மையும் தண்மையும் உயிரினை இயக்கும் இயல்பின அல்லவா?

இரதத்தில் எழுந்தருளிவரும் இறைவன் கையில் ஒரு வில் உண்டு. மேரு மலையே இந்த வில்லாகும். இந்த வில்லுக்கு அம்பாக உள்ளவர் விஷ்ணு. அதன் நுனி அக்கினித்தேவன் எதிரிகளை அக்கினி எரிக்கும் அல்லவா? வில்லுக்கு நாணாக விளங்கியது வாசுகி எனும் பாம்பு. இந்த இரதத்தின் இறகுகளாக உள்ளவன் வாயு (காற்று). இறைவன் இத்தகைய போர்க் கோலத்துடன் திரிபுரங்களாகிய மூன்று அசுரர் கோட்டைகளையும் அம்பு எய்தித் தாக்கத் தொடங்கும் போது இரதத்தின் உறுப்புகளாக வந்தவர்கள் எல்லாரும் தம்மால் தான் இறைவன் திரிபுரம் அழிக்கப் போகிறான் என எண்ணத்தலைப்பட்டனர். இந்த நிலையினை உணர்ந்த இறைவன் இவர்களை எண்ணிச் சிரித்தான், இச்சிரிப்பின் ஆற்றலால் திரிபுரம் தீப்பட்டது. மேற்கூறிய மூன்று அசுரர்களும் அழிந்தனர். தேவர்கள் துன்பம் நீங்கி இன்பம் பெற்றனர். இங்கு கூறப்பட்ட மூன்று அசுரர்கள் என்பவர்கள் (கோட்டைகள் என்பன) உயிர்களாகிய நமக்கிருக்கும் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களைக் குறிப்பன. இம்மலங்களை இறைவனின் திருவருட்சக்தி நிலவுலகமாகிய தேரில் எழுந்து வந்து எரித்தொழித்துப் பேரின்பத்தைத் தருவதையே இரதத்தில் இறை எழுந்தருளும் காட்சி நமக்கு உணர்த்துகிறது. முப்புரமாவது மும்மலகாரியம் என்பது திருமந்திரம். இரதத் திருவிழா தொடர்பாக இன்னொரு கதையும் உண்டு.

பகாசூன் பொருட்டுச் சிவபெருமான் வேதங்கள் நான்கும் தேராகவும் உபநிடதங்கள் குதிரைகளாகவும், உமையவள் சாரதியாகவும், ஓம் என்னும் பிரணவம் சவுக்காகவும், காலச் சக்கரம் வில்லாகவும், மகாமாயை நாணாகவும் அமையப் பாசுபதாஸ்திரம் கொண்டு அந்த அசுரனது வலிமையை அடக்கியதாகவும் அந்தக் கதை கூறும்.

இரதத்திருவிழா யோகத்துடன் தொடர்புடைய ஒன்றாகவும் கருதப்படும். இரதத்தின் அமைப்பு அண்டத்தையும் பிண்டத்தையும் குறிக்கும். நம் உடலே இரதம். இந்த இரதத்தினை உள்ளிருந்து இயக்குபவன் இறைவன். தசவாயுக்களாகிய சக்கரங்களை நிறுத்தி அசைவற்ற மனத்தை உந்தி, குண்டலியிலிருந்து நாபிக்கும் அதிலிருந்து கழுத்திற்கும், பின் வாய்க்கும், ஏற்றலயப்படுத்தி முறையே இரதக் குதிரையாம் மூக்கிற்கும் பின்புருவமத்திக்கும் ஏற்றிலயப்பட்டுச் சும்மா இருந்தபடியே இருக்கும் பேரின்ப நிலையையே யோகநிலையில் இரதத்திருவிழா குறிப்பாகக் கொள்வர்.

ஐந்தொழில் நிலையில் இறைவனின் அழித்தல் தொழிலைக் குறிப்பது தான் இரதத் திருவிழா. அழித்தல் என்பது ஆண்டவன், இவ்வுலகில் பிறந்து பிறந்து துன்பப்படும் உயிர்களைச் சற்று இளைப்பாற்றும் பொருட்டுத் தன்னகத்தே இழுத்து ஒடுக்கி வைத்துக் கொள்ளும் அருள்நிலையைக் குறிப்பதாகும். மேலும் யான், எனது என்னும் செருக்கினையும் இருவினைகளையும், உலகப் பற்றினையும் அழித்து நமக்குப் பேரின்பத்தையும் ஞானத்தையும் வீடுபேற்றையும் அளித்தலையே இரதத்தில் இறைவன் எழுந்தருளும் நிகழ்ச்சி நமக்கு உணர்த்துகிறது.





# ஒருமையா? பன்மையா?

செந்தமிழரசு



அண்மையில் ஓர் அன்பர் திருவாசகம் பாடிக் கொண்டிருந்தார். எனக்குக் கேட்க வாய்ப்புக் கிடைத்தது. அவர் பாடியதில் இனிமை அதிகம் என்று கூற முடியா விட்டாலும் உருக்கம் அதிகமாக இருந்தது. நானும் அதை உணர்ந்து அவர் பாடியதில் கவனம் செலுத்திக் கொண்டிருந்தேன். 'பிடித்த பத்திலே' 'உம்பர்கட்கரசே' என்று துவங்கும் முதற்பாடலைத்தான் அவர் பாடிக் கொண்டிருந்தார். பாடலின் இடையில் 'செம்பொருட் துணிவே சீருடைக்கடலே செல்வமே சிவபெருமானே' என்று அவர் பாடிய போது என் உணர்வு சற்றுத் தடைப்பட்டது. எனக்கு அந்தப் பாடலை 'சீருடைக் கழலே' என்று படித்ததாக ஞாபகம். உடனே அருகே ஒருவரிடம் 'திருவாசகம்' புத்தகத்தை வாங்கிப் புரட்டிப் பார்த்தேன். அதிலும் 'சீருடைக் கழலே' என்று தான் இருந்தது.

பாடலை அவர் நிறைவு செய்ததும், வாய்ப்புக் கிடைத்ததால் அவரைப் பாராட்டினேன். அதோடு அவர் பாடிய போது செய்த பிழையையும் குறித்தேன். ஆனால் அவர் சொன்ன பதில் எனக்கு அதிர்ச்சியை அளித்தது. ஒரு தமிழ்ப் பேரறிஞர் பெயரைக் குறிப்பிட்டு அவர் தான் ஒரு மேடைப் பேச்சில் இப்படித் திருத்தம் செய்து கொள்ளக் கூறினார் என்று குறிப்பிட்டார். ' காரணம் சொன்னாரா?' என்றேன்!

'ஆம் ஐயா! சீருடைக் கழலே என ஒருமையில் வர வாய்ப்பில்லை! எனவே 'சீருடைக் கடலே' என்று தான் இருக்க வேண்டும் என்று குறிப்பிட்டார் ஐயா' என்று அவர் சொன்னபோது சற்று வருந்தினேன். தொடர்ந்து கேட்டேன்! 'அந்த ஒரு இடம் தானா? அல்லது சிவபுராணத்தில் ' கரங்குவிவார் உள் மகிழும் கோன் கழல்கள் வெல்க! சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க' என்ற இடத்திலும் 'ஓங்குவிக்கும் சீரோன் கழல்கள்' என்று மாற்றி விட்டாரா? என்றேன்.

அவரோ, என் வேகத்தைப் பார்த்து, ஏண்டா இவரிடம் இதைப்போய்ச் சொன்னோம்? என்று ண்ணினாரோ என்னவோ, 'ஐயா! அதற்குமேல் எனக்கு வேறு ஒன்றும் தெரியாது!' என்று பதிலளித்து விட்டு நழுவினார்.

பல திருவாசகப் பதிப்புகளை எடுத்துப் பார்த்தேன். எல்லாவற்றிலும் 'சீருடைக் கழலே' என்று தான் இருந்ததே தவிர அந்த அறிஞர் குறிப்பிட்ட பாடபேதம் எங்குமே இல்லை. எனவே இது அவருடைய அற்புதமான கண்டு பிடிப்பு என்று தெரிந்து கொண்டேன். அண்மைக் காலமாக முந்தைய ஞானிகளின் பாடல்களைத் திருத்துவதும் மனம் போனபடி உரைசொல்வதும் என ஒரு வியாதி சைவ உலகிலே பரவிக் கொண்டிருக்கிறது என்பது உண்மை. தமக்குத் தெரிந்த உரையை வலுவில் வரவழைத்துச் சொல்வதைக் கூடப் பொறுத்துக் கொள்ளலாம்; அந்த உரைக்காக இல்லாத பாடபேதத்தை நுழைப்பதைத் தவிர்ப்பது மிகமிக முக்கியமல்லவா?

'திருவடி' பற்றி நம் சமயத்திலே பல்வேறு குறிப்புகள் உண்டு. அவற்றையெல்லாம் ஓரளவு தெரிந்து கொள்வது நல்லது. 'திருவடிகள்' என்று பன்மையிலே குறிப்பிடுகின்ற வழக்கம் அரிது. திருமந்திரத்தில் உபதேசப் பகுதியிலே

'திருவடியே சிவமாவது தேரில்
திருவடியே சிவலோகம் சிந்திக்கில்





திருவடியே செல்கதியது செப்பில்

திருவடியே தஞ்சம் உள் தெளிவார்க்கே' என்று திருமூலர் குறிப்பிடுகின்றார். ஆறாம் தந்திரத்திலே மேலும் இரண்டு பாடல்களில் கூட திருவடி என்றே குறிப்பிடுகின்றார்.

சைவ சமயக் குரவர் நால்வர் பற்றிய பாடல் யாவருக்கும் தெரியும்.

'பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர் கோன் கழல் போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பில் அணைந்த பிரான் அடிபோற்றி
வாழி திருநாவலூர் வன்தொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாதவூரர் திருத்தாள் போற்றி'

கழல், அடி, பதம், தாள் என்று திருவடிகளுக்கு வேறு வேறு சொற்கள் குறித்ததும் அன்றி ஒருமையில் குறிப்பிட்டதும் நம் கவனத்தை ஈர்க்கிறது. பல்வேறு வினாக்கள் நம் சிந்தையில் எழுகின்றன. திருவடி என்றால் என்னதான் பொருள்? கழல், அடி, பதம், தாள் என்று வேறுவேறாகக் குறிப்பிடப் பெறுகின்ற நோக்கம் தான் என்ன? மணிவாசகரே சிவபுராணத்தில் 'தாள்' வாழ்க என்று நான்கு முறையும், 'கழல்கள்' வெல்க என நான்கு முறையும் 'கழல்' வெல்க என ஒரு முறையும், 'அடி' போற்றி என்று 7 முறையும் கூறுகின்ற போது தாள், கழல், அடி என மாற்றுவதோடு ஒருமையும் பன்மையும் கலந்தே பாடுகின்றார்.

திருமுறைகளிலே பற்பல இடங்களிலே திருவடி வருகிறது. ' பொன்னார் திருவடிக்கு ஒன்று உண்டு விண்ணப்பம்' என்றும், கோவாய் முடுகி அடுதிறற் கூற்றம் குமைப்பதன் முன் பூவார் அடிச் சுவடு' என்றும் அப்பர் குறிப்பிடுகின்றார். முன்னர்க் குறிப்பிட்டது போல அத்திருவடி வேறு வேறு பெயர்களோடும் வருகிறது.

' துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தினும்
நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தோறும்
வஞ்சகம் அற்று அடி வாழ்த்த வந்த கூற்று
அஞ்ச உதைத்தன அஞ்செழுத்துமே'

என்ற தம் பாடலில் திருஞானசம்பந்தர் 'அடி' என்று கூறிவிட்டு, உதைத்தது ' அஞ்செழுத்து' என்கின்றார்.

அடி தான் அஞ்செழுத்தோ?

திருவருட் சத்தியை ஈசனின் 'திருவடி' என்பதும் சைவ மரபு. இதனால் நமக்குத் தெளிவாகிய செய்திகள் இவை :

'திருவடி', கழல் என்றும், அடி என்றும், பதம் என்றும், தாள் என்றும் திருமுறை ஆசிரியர்களால் குறிக்கப் பெறுகின்றது.

'திருவடி' பன்மையில் வழங்கப்படுவதோடு, பெரும்பான்மை இடங்களில் ஒருமையாகவே குறிப்பிடப் பெறுகின்றது.

'திருவடி' அஞ்செழுத்து என்றும், 'திருவடி' சக்தி என்றும் திருமுறை ஆசிரியர்கள் குறித்துள்ளனர்.

**இனி நமக்குத் தெளிவாக வேண்டிய செய்திகள் எவை?**

'திருவடி' பன்மையாகவும், ஒருமையாகவும் குறிப்பிடப் பெறுகின்ற போது பொருள் வேறுபாடு உண்டா?

'திருவடி' வேறு வேறு பெயர்களில் குறிக்கப் பெறுவதற்குக் காரணங்கள் உண்டா?

மேற்குறித்த இரண்டு வினாக்களுக்குப் பொதுவான ஒரு விளக்கம் தர முடியும்!

சிவத்தின் திருவடி சிவத்தின் ஒரு கூறு என்பது நாம் தெளிந்து கொள்ள வேண்டிய ஓர் உண்மை!

சிவத்தின் பண்புகள் அந்த ஒரு கூறுக்கும் உண்டு என்பது நாம் தெரிந்து கொள்ள வேண்டிய மற்றோர் உண்மை.

ஒரே பொருள் அறிவாகவும், ஆற்றலாகவும், ஆனந்தமாகவும் விளங்குகிறது என்பது எல்லா விளக்கங்களுக்கும் அடிப்படை உண்மை!



ஒருவனை 'புலி' என்று உவமை கூறுகின்றபோது இடம் நோக்கிப் புலியின் பண்புகளை எடுத்துக் கொள்கின்றோம்!

'அவர் கணக்கில் புலி' என்றால் இரையைப் பிடிக்கத் திட்டம் தீட்டுவதில் உள்ள அதன் திறமை இங்குக் கருத்தில் கொள்ளப் படுகிறது.

'அவன் அடித்துச் சாப்பிடுவதில் புலி' என்றால் இரக்கமில்லாத புலியின் குணத்தையே இங்கே எடுத்துக் காட்டப்படுகிறது.

'புலிபோல பார்த்தான்' என்று வருகிறபோது, பார்வையின் கொடூரமே இங்கு உவமிக்கப்படுகிறது.

அதுபோல திருவடியை அதன் பயன்பாடு நோக்கித் திருமுறையிலே அச்சொல் ஆளப்படுகிறது.

ஞானத்தைக் குறிப்பிடுகின்றபோது திருவடி என்று வரும்! ஆனால் இருவித ஞானங்கள் உள்ளபடியால் திருவடிகள் என்றும் கழல்கள் என்றும் பன்மையிலே குறிக்கப்பெறும்.

> 'உவமையிலாக் கலை ஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
> தவமுதல்வர் சம்பந்தர் தாம் உணர்ந்தார் அந்நிலையில்'

என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றபோது ஞானம்., அபரஞானம் (நூல் அறிவு) என்றும் பரஞானம் (அனுபவ அறிவு) என்றும் இரண்டாக விளங்குவது; மேலும் இரண்டும் சிவம் ஊட்டுவன என்பன தெளிவாகும்.

அத்திருவடியே ஆற்றலாகவும், ஆனந்தமாகவும் குறிக்கப் பெறுகின்ற போது ஒருமையிலேயே குறிக்கப் பெறுகிறது!

'திருவடியே சிவமாவது தேரில்' என்ற திருமூலர் வரியில் அது சிவானந்தத்தையே குறிக்கிறது என்பது தெளிவாகிறது அன்றோ?

ஐந்தொழில் செய்வது சக்தி என்பதாலும் ஐந்தொழிலைச் செய்வது திருவடி என்பதாலும், சத்தியே திருவடி என்பதும் நமக்குப் புரிகிறது! ஐந்தொழிலைச் செய்கின்ற ஆற்றலைக் குறிக்கவே ஒருமையில் கையாளப்படுகிறது.

மேலும் அடிமையாக இருந்து பெறுகின்ற ஆனந்தம் என்பதால் 'அடி' என்று அது குறிக்கப் பெறும்! 'சிவானந்தம்' பன்மையில் குறிக்கப்பெறுமோ? ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் நின்ற நெறி அல்லவா அது?

எல்லாப் பற்றுகளும் கழல்வதால் பெறுகின்ற ஆனந்தம் என்பதால் ஒருமையில் கழல் என்று குறிக்கப்பெறுகின்றது!

நம்மை ஆனந்தம் அனுபவிக்கக் கொண்டு சேர்க்கின்ற ஆற்றல் உடைமையால் ஞானசம்பந்தரின் ஆற்றலைக் 'கழல்' என்றது பொருத்தம்தானே? பூழியர்கோனுக்கு அது செய்து காட்டியதும் சான்று தானே?

பதமான பக்குவமான மொழி களால் பரமனின் ஆனந்தம் பெற இயலும் என்று காட்டி, ' சொற்றமிழ் பாடுக!' எனக் கேட்கப்பட்டார் நெறியும் அதுவே எனக் குறிக்க பதமும் திருவடியையே குறித்தது!

சீடனையும், சீலத்தையும் இணைப்பது குருதானே? பயிரின் வேரையும், மணியையும் இணைக்கும் பகுதி 'தாள்' எனப்படுவது நாம் அறிந்தது தானே!

**இனி நமக்கு மிகத் தெளிவாகத் தெரிவன இவை:**

மணிவாசகர் 'சீருடைக்கழலே' என்று கூறுவது திருவடியால் பெறுகின்ற ஆனந்தத்தைக் குறிக்கவே ஒருமையில் குறித்தார் என்பதும்,

சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல்' என்ற கூறுவது சிந்தை ஒரு முகமாகும் யோகத்தில் சதாசிவரின் வருகை நாதத்தால் குறிக்கப்பெறும் என்பதால் கழல் ஒலியைக் குறிக்க ஒருமையில் கூறினார் என்பதுமே!





# "உண்மை விளக்கம்" உணர்த்தும் நடராஜர் நடன தத்துவம்

முனைவர் ந. விஜயசுந்தரி,
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, உருமு தனலட்சுமி கல்லூரி,
திருச்சிராப்பள்ளி-620 019.



'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்பது பேச்சுவழக்கு, 'அரவா நீ ஆடும்போது உன் அடியின் கீழ் இருக்க' என்று காரைக்காலம்மையார் விண்ணப்பம் செய்தார்.

'குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியில் பால்வெண்ணீறும்
இனித்தமுடன் எடுத்த பொற்பாதமும் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்தமாநிலத்தே'

என்று அப்பர் அடிகளும், இன்னும் பலரும் நடராசப் பெருமானின் நடனக் கோலத்தை விதந்தோதியுள்ளனர்.

உருவம், அருவம், அருஉருவம் என்ற மூவகையுள் உருவ வடிவாய் நிற்கும் ஈசனின் நடனக் கோலத்தை மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கினுள் முதலாவதான உண்மை விளக்கம் விரிவாக எடுத்துரைக்கிறது. இதன் ஆசிரியரான திருவதிகை மனவாசங்கடந்தார் அருளியது போன்று வேறு எந்நூலிலும் ஈசனின் திருநடன தத்துவம் எடுத்துரைக்கப் பெறவில்லை என்று கூறலாம்.

ஆசிரியர் மாணவருக்கு பாடம் எடுத்துரைக்கும் உரையாடல் நெறியில் மனவாசங்கடந்தார் 'நாதன் நடம்' என்னும் தலைப்பில் நடராசப் பெருமானின் நடனக் கோலத்தை விளக்குகிறார்.

**ஆடலின் இயல்பு**

திருவைந்தெழுத்தினைத் தன் திருமேனியாகக் கொண்டு, உயிர்களின் பிறவித் துன்பத்தைப் போக்க இறைவன் திருநடனம் புரிகின்றான்.

**நடனம் புரியும் இடம்**

'எட்டும் இரண்டும் உருவான லிங்கத்து
நட்டம் புதல்வா நவிலக்கேள் - சிட்டன்
சிவாயநம என்னும் திருவெழுத்து அஞ்சாலே
அவாயம் அற நின்று ஆடுவான்'

என்கிறார் மனவாசங்கடந்தார்.

இப்பாடலில் எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தில் ஈசன் நடனம் புரிவதாகக் கூறப்பட்டுள்ளது. எட்டும் இரண்டும் என்பதற்கு சித்தாந்த சரபம் ஆனந்தராசன் ஒரு விளக்கத்தை அளிக்கிறார். எட்டும் இரண்டும் கூட்டினால் பத்து. தமிழ் எழுத்துக்களுள் 'ய' என்பது பத்தைக் குறிக்கும். 'நமசிவாய' என்னும் திருவைந்தெழுத்தில் 'ய' என்பது உயிரைக் குறிக்கும். எனவே, ஈசன் உயிர்களிடத்தில் நடனமாடுகிறான் என்கிறார்.



அளிக்கிறார். எட்டும் இரண்டும் கூட்டினால் பத்து. தமிழ் எழுத்துக்களுள் 'ய' என்பது பத்தைக் குறிக்கும். 'நமசிவாய' என்னும் திருவைந்தெழுத்தில் 'ய' என்பது உயிரைக் குறிக்கும். எனவே, ஈசன் உயிர்களிடத்தில் நடனமாடுகிறான் என்கிறார்.

**நடனமாடக் கொண்ட உருவம்**

சிவபஞ்சாட்சரம் என்று போற்றப்பெறும் திருவைந்தெழுத்தின் வடிவமாக நடராசப் பெருமான் கோலம் கொண்டுள்ளான். இவ்வுலக உயிர்களை பாசத்தில் உள்ளவை என்றும், பாசத்தினின்று நீங்கியவை என்றும் இரண்டாகப் பிரிப்பது சைவ மரபு. நடராசப் பெருமான் இவ்விரு வகையினர்க்கும் ஏற்ப இருவகை வடிவங்களைக் கொண்டுள்ளான்.

முதல் வகையினர்க்கு தன் தூக்கிய திருவடி 'ந'கரம் என்றும், திருவயிறு 'ம'கரம் என்றும், திருத்தோள் 'சி'கரம் என்றும், திருமுகம் 'வ'காரம் என்றும், திருமுடி 'ய'கரம் என்றும் பஞ்சாக்கரமே திருமேனியாய் கொண்டு திகழ்கின்றான்.

இரண்டாம் வகையினர்க்கு, உடுக்கையை உடைய திருக்கரம் 'சி'கரமாகவும், வீசிய திருக்கரம் ஞான வடிவமான 'வா'காரமாகவும், அஞ்சாதே என்று அபயம் காட்டும் திருக்கரம் 'ய'கரமாகவும், நெருப்பினை ஏந்திய திருக்கை 'ந'கரமாகவும், முயலகனை கீழே அமுத்தும் திருவடி 'ம'கரமாகவும் கொண்டு திகழ்கிறான்.

'ஓம்' என்னும் பிரணவத்தின் வடிவில் எம்பெருமானின் திருவாசி அமைந்துள்ளது. அப்பிரணவத்தில் உருவான 51 அக்கரங்களும் திருவாசியில் ஒளிர்விடும் சுடர்களாகும். ஓங்காரத் திருவாசியுள் உள்ளொளியாய் கூத்த பெருமான் விளங்குகிறான்.

**நடனம் உணர்த்தும் இறைத்தொழில்கள்**

ஈசன் ஐந்தொழில் புரிபவன். அவனது உருவமும், ஏந்தியுள்ள பொருள்களும் அவன் ஆற்றும் தொழில்களை வெளிப்படுத்துகின்றன.

'தோற்றம் துடி அதனில் தோயும் திதி அமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோதம் முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு'

என்கிறது உண்மை விளக்கம்.

உடுக்கையை இயங்கச் செய்து அதில் ஓசையை உருவாக்குகிறது ஈசனின் ஒரு கை. இது படைத்தல் தொழிலைக் குறிக்கும். உயிர்களைப் படைத்த இறைவன் அவற்றைக் காக்கிறான். இதனை அவனது அபயம் அளிக்கும் கை, குறிக்கும். உயிர் உடலைச் சேர்ந்து இம்மண்ணுலகில் வாழ்ந்து அளவில்லாத துன்பங்களை அனுபவித்து இளைத்துப் போகும். அவ்வேளையில் அவற்றின் இளைப்பினைப் போக்க ஈசன் அழித்தல் தொழிலை மேற்கொள்கிறான். இதனைக் குறிப்பது அவனது தீ ஏந்திய கை. உயிர்களுக்கு இறைவன் தன்னைக் காட்டிக் கொள்ளாமல் மறைத்துக் கொள்கிறான். உலக இன்பத்தை நுகரும் இயல்பைக் கொடுத்து அவற்றிலிருந்து விடுபடும் பக்குவத்தையும் அளிக்கிறான். முயலகனை மிதித்துக் கொண்டுள்ள அவனது திருவடி மறைத்தல் தொழிலைக் குறிக்கும். உயிர்களின் பற்றுக்களையும், வினைகளையும் நீக்கி அவற்றுக்குப் பேரருளை இறைவன் வழங்குகிறான். இதனை அவனது தூக்கிய திருவடி குறிக்கும்.

**திருநடனத்தைத் தரிசிக்கும் முறை**

நடராசப் பெருமானின் திருநடனத்தைக் காணும்போது முதலில் உதறிய திருக்கையை

நோக்கல் வேண்டும். இது நம் மாயைகளை உதறிவிடச் செய்யும். அடுத்து வீசி அணைத்து 'வருக' என அழைக்கும் திருக்கையை நோக்கல் வேண்டும். இது நமக்கு அருள் வழங்கும். அடுத்து அபயம் அளிக்கும் கரம் 'இனிது இருக்க' என்று நம்மை தேற்றும் கையாகும். தொடர்ந்து 'தீ' ஏந்திய கையை நோக்குதல் வேண்டும். இது நம் தீவினைகளைக் கெடுத்து அழிக்கும். அடுத்து ஊன்றிய திருவடியைக் காண வேண்டும். இத்திருவடியின்கீழ் இருக்கும் முயலகன், நம்முடைய மும்மலத்தைக் குறிக்கும் குறியீடாகும். இம்மும்மலத்தை மிதித்து அழிப்பதாக அத்திருவடியைக் கொள்ள வேண்டும்.

**திருநடனத்தைக் காணும் பேறுபெற்றோர்**

மோனம் ஆகிய முடிநிலையில் நிற்கும் மாமுனிவர்கள் மும்மலத்தைப் போக்கி, செருக்கற்ற நிலையில் இறைவனின் திருநடனத்தைக் காண்பர். சிவானந்த அமுதத்தை கண்களால் மொண்டு அருந்தி அம்முனிவர்கள் உய்யும் பொருட்டு திருச்சிற்றம்பலத்துள் ஈசன் திருநடனம் புரிகின்றான்.

**நடராசப் பெருமானையும் உமையையும் சேர்த்துக் காணல்**

சைவ மரபுப்படி ஈசனையும் உமையையும் இணைத்துக் காண்பதே சிறப்பு. காதல் மடப்பிடியோடு களிறு வருவதாகக் காண்பதை அப்பரும் விதந்தோதியுள்ளார். ஈசனின் ஆடலைக் கண்டு, உணரும் பக்குவம் உயிர்களுக்கு நேரிடையாக வாய்ப்பதில்லை. எனவே, நடராசப் பெருமானின் திருநடனம் என்னும் ஞானத்தை உயிர்களின் பக்குவ நிலைகளுக்கு ஏற்ப எடுத்து ஊட்டி, உணர்வை வளர்க்கும் தாயாக உமையம்மை விளங்குகிறாள். எனவே, ஈசனையும் உமையையும் இரண்டறக் காண்பதுவே சிறப்பு.

**திருநடனத்தைக் காண்பார் பெறும் பயன்**

தில்லையம்பலவனின் திருநடனத்தைக் காண்போர் அவனது ஐந்தொழில் திறத்தையும் அறிகின்றார். இதனால் அவர் ஞானம் பெறுவர். பிறவிகள் தோன்றா. ஆனந்தம் பெறுவர். ஈசன் உமையம்மை காணுமாறு திருக்கூத்து நிகழ்த்துகின்றான். எனவே தில்லையம்பலவனின் திருக்கூத்தை உமையம்மையுடன் இணைத்தே உயிர்கள் கண்டு களிக்கின்றன.

ஆனந்தத் திருநடனத்தைக் காண்போம்;
அருள் மழையில் நனைந்து உய்வோம்.

கட்டுரை எழுத உதவிய நூல்:
'உண்மை விளக்கம்' (உ.ஆ. ஆ.ஆனந்தராசன்)





# பாவைப் பாடல்களில் அறிவியல் கருத்துக்கள்

**முனைவர் திருமதி சாரதா நம்பி ஆரூரன்,** எம்.ஏ., எம்.ஃபில்.,பி.எச்.டி,
மாநில தகவல் ஆணையர் (ஓய்வு) தமிழக அரசு.

**அறிவியல்: விளக்கம்**

அறிவு + இயல் = அறிவியல். அதாவது அறிவின் இயல்பைக் கூறுவது அறிவியல் ஆகும். 'Scientia' என்ற இலத்தீன் சொல்லில் இருந்து 'Science' என்ற ஆங்கிலச் சொல் உருவாயிற்று. இதன் பொருள் 'கற்றல்' அல்லது 'அறிவு' என்பதாகும். இயற்கை பற்றிய உண்மைகளையும், முறைகளையும் ஒழுங்குபடுத்தி ஆய்வது அறிவியல் என்பர் அறிஞர்.

இயற்கையின் விந்தைகளையும், அற்புதப் படைப்புகளையும் கண்ட மனிதன் அவை, ஏன்? எதற்காக? எப்படி ஏற்படுகின்றன என சிந்திக்கத் தலைப்பட்டான். சிந்தித்த உள்ளங்கள் செயலாற்றும் திறனைப் பெற்று, அயராத ஆராய்ச்சிலும் ஈடுபட்டன. இவற்றின் விளைவாகப் பிறந்ததே அறிவியலாகும் என்பர் ஆய்வாளர்.

**அறிவியலும் தமிழும்:**

இருபதாம் நூற்றாண்டை "அறிவியல் யுகம்" எனலாம். இவ்வறிவியலின் தாக்கம் தமிழிலும், தமிழரிடையேயும் காணப்படுவது இயல்பே. பழங்காலம் முதலே தமிழ் மரபில் அறிவியல் சிந்தனைக்கு இடமிருந்தது என்பதைத் தமிழ் இலக்கியங்கள் உணர்த்துகின்றன. சங்ககாலம் முதல் இக்காலம் வரை தோன்றியுள்ள இலக்கியங்களை ஆராய்ந்தால் தமிழரின் அறிவியல் சிந்தனை வியப்பைத் தருகின்றது.

இன்றைய மேனாட்டு அறிவியல் சிந்தனையின் சுவடு கூடப் படாத சங்ககாலத்தமிழரிடையே இருந்த அறிவியல் அறிவும், உணர்வும், அதிலும், குறிப்பாக வானவியல் பற்றிக் கொண்டிருந்த கருத்தும், சிந்தனையும் சில சமயம் நம்மை வியக்க வைக்கின்றன.

சங்க இலக்கியங்களின் மட்டுமன்றி, இறைவனைப் பாடிப் பரவும் பக்தி இலக்கியங்களிலும் அறிவியல் கருத்துக்கள் செறிந்துள்ளன.

**இயற்கையும் இறைவனும்:**

நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம் என்பன ஐம்பூதங்களாகும். உலகம் இவற்றுள் அடங்கும் என்பர் புவிஇயல் அறிஞர். நமது உடலும் ஐந்து பூதங்களால் ஆனதே, ஆதலால் அண்டத்தில் உள்ளது பிண்டத்தில் உண்டு என்பர். இயற்கையையும், இறைவனையும் இணைத்துக் கொண்ட தமிழர் ஐம்பூதங்களின் செயல் நுட்பத்தைத் தோற்றுவித்தவன் இறைவனே என்று நம்பினர். நில உருவில் காஞ்சிபுரத்திலும், நீராகத் திருவானைக்காவிலும் நெருப்பாகத் திருவண்ணாமலையிலும், காற்றாகத் திருக்காளத்தியிலும், ஆகாய வடிவில் சிதம்பரத்திலும் பரம் பொருளைக் கண்டு போற்றினர்.





"ஆதியும் அந்தமும் இல்லா
அரும் பெரும் சோதி" (திருவெம்பாவை.பா.1)

என்று அருணாசலமாக நெருப்பு வடிவில் நின்ற அண்ணாமலையானைப் போற்றித் திருவெம்பாவையைத் தொடங்குகின்றார் மாணிக்கவாசகர்.

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி நிற்கும் இறைவனை,
"விண்ணாகி மண்ணாகி இத்தனையும் வேறாகி" (திரு.மா.18) என விளம்பினார். ஐம்பூதங்களின் முதலாக உள்ள விண்ணையும் இறுதியாக உள்ள மண்ணையும் குறிப்பிட்ட வகையினால் இடைப்பட்ட நீர், நெருப்பு, காற்று ஆகிய மூன்றனையும் உடன் குறிப்பிட்டமை புலனாம். ஆகாயம், கதிரவன், மதி, எண்ணற்ற விண்மீன்கள் உடைமை காரணம் பற்றிப் 'பிறங்கொளிசேர் விண்' என்ற அற்புதமான அறிவியல் சொல்லாக்கத்திற்கே வித்திடுகிறார் மாணிக்கவாசகர்!

**மதிநிறைந்த நன்னாள்:**

ஒவ்வொரு மாதத்திலும் நிறைமதியுடன் கூடிய விண்மீனுக்குரிய நாளை விழாக்கொண்டாடுவதற்குரிய சிறப்பு நாட்களாக் கொள்ளல் தமிழர் மரபு.

சித்திரை விண்மீன் நிறைமதியோடு கூடும் நாள் சிததிரைத் திங்களின் பௌர்ணமி சித்திரா பௌர்ணமியாகவும், வைகாசியில் விசாகமும், கார்த்திகை மாதம் கார்த்திகை விழாவும், மார்கழியில் திருவாதிரையும், தையில் பூசமும், மாசியில் மகமும், பங்குனியில் உத்திரமும் தமிழகக் கோயில்களில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன. மார்கழி நோன்பும் நிறைமதி நாளில் துவங்கியதை "மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்" என்று முதற்பாடலிலேயே சுட்டுகின்றார் ஆண்டாள். தை மாதம் முதல் ஆனி மாதம் வரையில் ஆறு மாதகாலம் சூரியனுடைய உத்தராயணம். அது தேவர்களுக்குப் பகல். ஆடி முதல் மார்கழி வரையில் சூரியனுடைய தட்சிணாயணம். அது தேவர்களுக்கு இரவு. நமக்கு அதிகாலை நான்கு மணியிலிருந்து ஆறு மணி வரையில் பிரம்ம முகூர்த்தம். கடவுள் வழிபாட்டுக்கு அது மிகச் சிறந்த நேரம். அதே போன்று தேவர்களுடைய நாளில் மார்கழி முழுதும் பிரம்ம முகூர்த்தம். ஆதலால் மாதங்களுள் மார்கழி மிகச் சிறந்தது.

"மார்கழி மாதம் திருவாதிரை நாள் வரப்போகுது ஐயே" என்று நந்தனார் பாடி, தில்லவையில் காண விழைந்த ஆதிரைத் திருவிழா தமிழர் வாழ்வோடு தொடர்புடைய ஒன்று.

திருவாதிரைத் திருநாள் மீன், காணப்பெறும் இல் யாழில்" ஆகும். இதனை மிதுன வீடென்பர். இவ்வீட்டில் ஆண், பெண்ணாகிய இரட்டைத் திருவுரு யாழோடும் பொறிக்கப்பட்டிருக்கும். இக்குறிப்புத் தமிழ்ப் பொருள் நூலின்படி அகப்பொருளாகும். எனவே, தமக்கு நற்கணவரை வேண்டி மகளிர் இந்நாளில் நோன்பு துவங்குவதன் காரணம் புலனாகும். இதனால் அக்கால மக்கள் பெற்றிருந்த வானநூற்புலமையும் அறிய முடிகிறது. (திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி - ஓர் ஆய்வு - டாக்டர் ஆ.கந்தசாமி, ப.146)

***சீதப்புனலாடல்:***

"புறம் தூய்மை நீரால் அமையும்" என்பது வள்ளுவம். சித்திரையின் விடியலில் மக்களுக்கு நித்திரை கலைவதில் வியப்பில்லை, புதுமையில்லை! மார்கழியோ பனித்திங்கள்! விடியற்காலையில் உறக்கம் கண்களை மயக்கும்! குளிரோ நடுக்கும்! இவற்றை மீறி, துயிலெழுந்து நீராடினர் கன்னிப் பெண்கள். எப்படிப்பட்ட நீரில்? சீதப்புனலில் காதார் குழையாடப் பைப்பூண் கலனாடக் கன்னியர் நீராடுகின்றனர். செயற்கரியவற்றைச் செய்வதுதானே சாதனை! அதனால் தான் பனித் திங்களில் இந்தப் பாவை நோன்பு நோற்கப்படுகின்றது.

விடியற்காலையில் எழுதல், இல்லந்தோறும் சென்று ஒருவரை ஒருவர் எழுப்பல், நகையாடி மகிழல், நீராடச் செல்லல் இவற்றால் காலைப் பொழுதில் ஓசோ மண்டலத்தில் உள்ள தூய்மையான காற்றை உட்கொள்ளவும் இந்நோன்பு வழி வகுத்தது. சமயமும், அறிவியலும் இணைந்த பாங்கு



இன்புறுதற்குரியது!

பரிபாடலில் காணப்படும் காம உணர்வுடன் கூடிய நீராட்டினை உருத்திரக் கணிகையர்களைக் கொண்டே பக்தி நெறியில் திருப்பி ஒரு புரட்சியைச் செய்தவர் மாணிக்கவாசகர்!
இருவேறு போக்குகள் நீராட்டில் நாம் கண்டாலும் கடவுள் நோன்பின் தூய்மைக் கோலமே தமிழ்நாட்டில் நிலைத்து நின்று விட்டது எனலாம். இந்தப் பெரும் புரட்சியைச் செய்தவர்கள் ஆண்டாளும், மாணிக்கவாசகருமே என்கிறார் அறிஞர் தெ. பொ. மீ. (திருவெம்பாவையில் வரும் நீராட்டு , ப.43)

பொங்கும் மடுவில் புகப் பாய்ந்து, "கொங்கைகள் பொங்க, குடையும் புனல் பொங்கப் பங்கயப் பூம்புனல் பாய்ந்து" ஆடுகின்றனர் கன்னிப் பெண்கள் (பாடல் 18) மகிழ்ச்சி ஆரவாரத்துடன் தாமரை நிறைந்த பொய்கையில் நீராடும்போது உள்ளப் பூரிப்பால் உடலும் பூரிக்கிறது! கொங்கைகள் பொங்குகின்றன. அதனால் புனலும் (நீரும்) பொங்குகிறது.

ஒரு பொருள் நீரில் மூழ்கும் போது, அது இழந்ததாகக் கருதப்படும் எடை, அப்பொருளால் வெளியேற்றப்பட்ட நீரின் அளவினதாகும். இது ஆர்க்கிமிடிஸ் தத்துவம். இதனை மணிவாசகர் "கொங்கைகள் பொங்க, குடையும் புனல் பொங்க" என்று குறிப்பிட்டுள்ளார்.

நீராடி, புறந்தூய்மையுடன், அகத்தூய்மையும் பேணும் பெண்டிர், 'எம் கொங்கை நின் அன்பர் அல்லார் தோள் சேரற்க' என்று இறைவனிடம் வரம் வேண்டுகின்றனர். எங்கே தனிமனித ஒழுக்கம் பேணப்படுகிறதோ அந்நாடு பிணியின்றி பீடு நடை போடும். உயிர்க்கொல்லி (Aids) நோய் ஊரை விட்டே ஓடும்!

**நோன்பு நோற்றல்:**

> மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
> அற்றது போற்றி உணின்

என்பார் வள்ளுவர். நாட்காலை நீராடிய பெண்கள் 'நெய்யுண்ணோம், பாலுண்ணோம்' என்று உறுதி கொள்கின்றனர். (திருப்பாவை பா.2) நெய்யும் பாலும் கொழுப்பு மிகுந்த உணவுகள். சோம்பலையும், தூக்கத்தையும் உண்டாக்குவன. இறை உணர்விற்குத் தடையாயிருப்பன. நோயற்ற வாழ்வாகிய குறைவற்ற செல்வத்தைப் பெற வேண்டுமெனில் அவ்வப்போது உண்ணா நோன்பு நோற்றல் சாலச் சிறந்தது. 'லங்கணம் பரம ஔஷதம்' என்பது முன்னோர் மொழி. முருகனை வணங்கும் அடியார்கள் மெலிந்த உடலுடன் காணப்பட்டனர் என்கிறார் நக்கீரர். எடை கூடுதல் நலமற்ற வாழ்வே நல்கும் என்பதை நன்கறிந்த தமிழர் இறை வழிபாட்டில் உணவைத் தவிர்ப்பதை நோன்பின் தலையாய குறிக்கோளாகவே கொண்டிருந்தனர்.
"நண்பகல் பல உடன் கழிந்த உண்டியர்" என்று நக்கீரர் இவர்களைத் திருமுருகாற்றுப் படையில் பாராட்டுகின்றார்.

**இறையருளும் மழையும்:**
நீரின்றி அமையாது உலகு. மழையின்றி மாநிலத்தார்க்கில்லை. இறையருளுக்கு அடுத்த நிலையில் போற்றப்பட்டது மழை! தண்ணீரை அமுதமாகப் போற்ற வேண்டுமென்கிறார் வள்ளுவர்.

> வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
> தான் அமிழ்தம் என்றுணரற் பாற்று (குறள்.11)

என்கிறார் பொய்யில் புலவர்.

கடல், ஆறுகள், குளங்கள் போன்ற நீர் நிலைகளில் நிறைந்துள்ள நீர், சூரிய வெப்பத்தினால் நீராவியாகி மேலே செல்கிறது. கருத்த மேகங்கள் உருவாகின்றன. காற்று, மேகத்தைக் குளிரச் செய்து மழையாகப் பொழியச் செய்கிறது. வானத்தில் மேகங்கள் ஒன்றோடொன்று மோதிக்

கொள்வதால் மின்னலும் இடியும் தோன்றுகின்றன. கடல் நீர் ஆவியாகி, மேகமாய்த் திரண்டு, மழையாய்ப் பொழியும் அறிவியல் உண்மையை ஆன்மீகத்தோடு இணைக்கின்றனர் ஆண்டாளும், மாணிக்கவாசகரும்!

மழையே! முன்னிக் கடலைச் சுருக்கி நீராவியாகி மேலே எழுக! பின்னர் கரிய மேகமாகத் திரண்டு உடையாளைப் போல் திருமேனி கருத்துத் திகழ்வாயாக! எம்மை யாளும் உமையின், துடியிடையைப் போன்று மின்னிப் பொழிக! மின்னலைத் தொடர்ந்து இடி வர வேண்டாமா? "பொன்னம் சிலம்பில் சிலம்பி" - அம்மையின் சிலம்போசை போல இடி முழங்க வேண்டுமாம். மழைக்கு முன்னால் வானவில் தோன்றுவது போல அம்மையின் திருப்புருவம் வளைவுடன் விளங்குகிறதாம்! முன்னி அவள் நமக்கு முன் சுரக்கும் இன்னருளே என்னப் பொழியாய் மழை என்கிறார் மாணிக்கவாசகர்.

"ஆழியுட் புக்கு முகந்து கொடு ஆர்த்தேறி
ஊழி முதல்வன் உருவம்போல் மெய் கருத்துப்
பாழியந் தோளுடைப் பத்மநாபன் கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழை போல்
வாழ உலகினில் பெய்திடாய்" (பா.16)

என்று ஆண்டாளும் வேண்டுகிறார். திருமாலைப் போல் மெய் கருத்து, ஆழி போல் மின்னி, சார்ங்கம் என்ற வில்லைப் போல் முழங்கி மழை பெய்ய வேண்டுமென்கிறது திருப்பாவை.
பாவை நோன்பின் பொதுப்பயன் நாடுவளம் பெற மழை வேண்டல். இறையருளை மழையாகக் கூறல் பக்தி இலக்கியங்களில் காணும் புதிய கற்பனை! அறிவியலாரும் கண்டு வியக்கும் புதிய சிந்தனை! 'முன்னிக் கடலைச் சுருக்கி' என்பது நுட்பமானது! சுருக்குதல், முகத்தல் என்னும் பொருட்டு, கடல் குறைபடுத்த நீர் கல் குறைபட வெறிந்து' என்றார் பிறரும் வானிடையெழுந்த வெண்மேகம் கடலினிடத்தே உள்ள நீரை முகந்து சென்றதால், "கடலைச் சுருக்கி" என்று மாணிக்கவாசகர் கூறுவது, சமயச் சான்றோர்களுக்கிருந்த அறிவியலறிவை உணர்த்தும்! (திருவெம்பாவை-ரெ. சண்முகசுந்தரம் செட்டியார் உரை-ப 91)

**கதிரவன் தோற்றம்:**

கதிரவன் கிழக்கே தோன்றி, மேற்கே மறையும் தன்மையை,
"கிழக்கெழுந்தோடிய ஞாயிறு மேற்கே"

என்று சுட்டுகிறார் திருமூலர்.

காலையில் கதிரவன் தோன்றியவுடன் விண்மீன்களின் குளிர்ந்த ஒளி மங்கி அவை மறையும் அறிவியல் உண்மையை அழகு உவமையாக்குகிறார் வாதவூரர். அண்ணாமலையான் திருவடிகளைத் தேவர்கள் வணங்குகின்றனர். திருவடிகளின் ஒளியின் முன்னே, தேவர்கள் அணிந்திருந்த இரத்தின கிரீடங்கள் ஒளி மங்கிப் போய் விட்டன! கதிரவன் தோன்ற விண்மீன்கள் ஒளியிழந்ததைப் போல!

"அண்ணாமலையான் அடிக்கமலம் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகை வீறற்றாற் போல்
கண்ணார் இரவி கதிர் வந்து கார் கரப்பத்
தண்ணார் ஒளி மழுங்கித் தாரகைகள் தாம் அகல"

என்று சொல்லோவியம் படைக்கிறார். (பா.18)

"அருணன் இந்திரன் திசை அணுகினன்
இருள் போய் அகன்றது"

என்று திருப்பள்ளியெழுச்சியிலும் நுட்பமான கருத்தைக் கூறுகிறார் மணிவாசகர்.



கிழக்கே கதிரவன் உதித்தான். இருள் நீங்கின்று. இச்செய்தியை இலக்கிய நயத்துடனும், அறிவியல் நுட்பத்துடனும் பாடுகிறார்.

சூரியன் ஏழு குதிரைகள் பூட்டிய தேரில் ஏறிப் பயணிப்பதாகக் கூறுவதுண்டு. ஏழு குதிரைகள் என்பது சூரிய ஒளியின் ஏழு வண்ணங்களே ஆகும். நியூட்டன் வட்டத் தகட்டின் வழியே நிறப்பிரிகைக் கொள்கையை விளக்கினார். வட்டத் தகட்டை ஏழு வண்ணங்களால் நிரப்பி, அதனை வேகமாகச் சுழற்றினால் அத்தகடு வெண்மையாகவே தெரியும்.

இந்த அறிவியல் உண்மையை நம் முன்னோர் சூரியனுக்கு ஏழு குதிரைகள் என்று உருவகப்படுத்தினர்.

அருணன், சூரியனின் தேரோட்டி. சிவந்த நிறமுடையவன். சூரியன் தோன்று முன் கீழ்வானம் சிவந்து தோன்றும். அருணோதயம் என்றழைக்கப்படும். பின்னரே கதிரவனின் வெண்மை ஒளி எங்கும் பரவும். கதிரவனுக்கு முன்னால். அவனுடைய தேரோட்டி தோன்றுகிறார். அதாவது அருணன், இந்திரனுடைய திசையாகிய கிழக்கே வந்து விட்டான் என்று மிக நுட்பமாக மாணிக்கவாசகர் உணர்த்தியுள்ளார்!

**சுற்றுப் புறத்தூய்மை**

'சுத்தம் சோறு போடும்' என்பது பழமொழி. இறை வழிபாட்டில் சுற்றுப்புறம் தூய்மை செய்தல் இன்றியமையா இடம் பெறுகிறது.

**“தன் கடன் அடியேனையும் தாங்குதல்**
**என் கடன் பணி செய்து கிடப்பதே”**

என்று உழவாரப் படை கொண்டு பணி செய்த நாவரசர் நமக்கெல்லாம் முன்னோடியாவார்.

பணி என்பது மிக உயர்ந்த சொல். பணி, தன் முனைப்பின்றிச் செயல்படுவது. யாரிடமும் பணிந்து செய்வது பணி. செய்கின்றோம் என்ற செருக்கு உணர்வின்றிச் செய்வது பணி. திருக்கோயிலைத் தூய்மை செய்தல், மலர் தொடுத்தல், உழவாரப் பணி செய்தல், குளங்களை, ஆறுகளை தூர்வாரி ஆழப்படுத்துதல், போன்றவைகளை அடியவர்கள் செய்தனர்.

“தொழுப்படியோங்கள்” என்று அடியவர்கள் தம்மை அழைத்துக்கொண்டனர் (பாடல் 9).

ஆடவருடன், இது போன்ற பணிகளில் பெண்களும் தம்மை இணைத்துக் கொண்டனர். “கோயிற்பிணாப் பிள்ளைகள்” (திருவெம்பாவை பா.10) என்று அவர்கள் அழைக்கப்பட்டனர்.

**முடிவுரை:**

இந்து சமயம் அன்பு வழிப்பட்டது. அறிவு நெறிப்பட்டது. வையத்துள் வாழ்வாங்கு வாழ வழிகாட்டுவது. தல விருட்சங்கள் என்ற பெயரில் மரங்களையும் போற்றுவது. வாகனங்களாகச் சிங்கம், புலி, பாம்பு, எருது போன்ற விலங்குகளிடமும் அன்பு பாராட்டுவது.

இச்சமயத்தின் கோட்பாடுகள்அனைத்தும் அறிவியல் அடிப்படையில் அமைந்தது.

“உயிர்கள் உய்திப் பெறப் பயிலும் சாலையே வாழ்க்கை. உயிர்கள் உய்யும் நெறியே சமய நெறி. உயிர்கள் உய்யும் நெறியில் தலைப்படின் சிந்தையில் தெளிவு, அறிவில் ஆக்கம், ஆற்றலின் கொள்கலம், அயரா அன்பு, எங்கும் இன்பம் என்ற சூழல் உருவாகும். இதுவே சமய வழிப்பட்ட சமுதாயம்” என்று தவத்திரு குன்றக்குடி அடிகளார் (நமது நிலையில் சமயம், சமுதாயம் ப.50) எனறு கூறுவது எக்காலத்திற்கும் பொருந்தும்!

# சிவஞான போதமும் சைவத்திருமுறைகளும்

திருமுறைச் செம்மல், சைவ சித்தாந்த இரத்தினம், திருமுறைத் தொண்டர்
தலைவர், மலேசிய சைவ நற்பணிக் கழகம் ந. தர்மலிங்கம் M.A.

சீர்மிகு செந்தமிழரின் வாழ்வியல் நெறியாக விளங்குவது சித்தாந்த சைவம். அருநெறி, திருநெறி, ஒருநெறி, பெருநெறி, தமிழ்நெறி என்று தமிழ்ஞான சம்பந்தரால் போற்றப் பெற்ற இச்சித்தாந்த சைவமும், தோத்திரங்களையும் சாத்திரங்களையும் அடிப்படையாகக் கொண்டு விளங்குகின்றது. வடமொழி மந்திரங்களாக விளங்கும் வேதங்களும், தமிழ்மொழி மந்திரங்களாக விளங்கும் பன்னிரெண்டு திருமுறைகளும் இறைவனை வழுத்திப்பாடும் தோத்திர வடிவில் இருக்கின்றன. எனினும் பத்தாம் திருமுறையான திருமந்திரம் சாத்திர வடிவிலும் பன்னிரண்டாம் திருமுறையான பெரியபுராணம் சரித்திர வடிவிலும் உள்ளன என்பது கண்கூடு.

இருபத்தெட்டு சிவாகமங்களும் பதினான்கு மெய்கண்ட நூல்களும் சாத்திரங்களாக உள்ளன. காலத்தால் பின்தோன்றிய திருமுறைகளும் மெய்கண்ட நூல்களும் சிவாகமங்களின் பிழிவாக உள்ளன. சிவாகமங்கள் இலக்கியம் என்றால் திருமுறைகளும் மெய்கண்ட நூல்களும் அவற்றின் இலக்கணம் என்று கூறலாம்.

சித்தாந்த சைவ உண்மைகளை நூலிடையாகவும் பெருமானைப் புகழ்ந்து போற்றிப் பாடும் பாடல்களாகவும் விளங்குகின்ற சைவத் திருமுறைகள் பன்னிரண்டு உள்ளன என்பதும் அவற்றை இருபத்தேழு அருளாளர்கள் அருளியுள்ளனர் என்பதும் நாம் அறிந்ததே! பெருமானால் அருளப்பெற்ற அருளாளர்களோடு பெருமானும் இவ்விருபத்தேழு ஆசிரியர்களுள் ஒருவராய் இருந்து திருமுறையை அருளியுள்ளமை வேறெங்கும் காண இயலாத தனிச்சிறப்பாகும்.

மெய்கண்ட நூல்கள் பதினான்கு. இவை காலத்தால் பின் தோன்றியவை. எனினும் மெய்கண்ட நூல்கள் கூறும் சித்தாந்த கருத்துக்கள் சங்க இல்கிகியங்களிலும் தொல்காப்பியத்திலும் விரவியே வந்துள்ளன. ''ஞானமிர்தம்'' என்ற மெய்கண்ட நூலே காலத்தால் முந்தையதாகவுள்ளது. பின் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் போன்ற மெய்கண்ட நூல்கள் எழுந்தன. எனினும் காலத்தால் பின்னால் வந்த சிவஞானபோதமே மெய்கண்ட நூல்களில் தலைமணி நூலாகக் குறிக்கப்படுகின்றது.

மெய்கண்ட நூல்களின் உண்மைகளைப் பெருமானே தென்முகக் கடவுளாக ஆசான் வடிவில் இருந்து சனகாதி முனிவர்களுக்குப் போதித்தார் என்று திருமூலர் குறிப்பிடுகின்றார். ஆசான் வழி வகையில் வந்தவர்களை அகச் சந்தானாச்சாரியர்கள் எனவும் புறச் சந்தானச்சாரியார்கள் எனவும் குறிப்பிடுகின்றோம். நந்தியெம்பெருமாள், சனற்குமாரர், சத்தியஞாணி தரிசிகள், பரஞ்சோதி முனிவர் என்பாரை அகச்சந்தானம் எனவும் மெய்கண்டார், அருணந்திசிவம், மறைஞான சம்பந்தர், உமாபதிசிவம் என்பாரைப் புறச்சந்தானம் என்றும் போற்றுகின்றோம். இவர்களில் பரஞ்சோதி முனிவரால் அருள்நோக்கம் கிடைக்கப்பெற்ற, புறச்சந்தானாக் காரியங்களில் ஒருவரான மெய்கண்டாரே சிவஞானபோதம் எனும் மெய்கண்ட நூலை அருளினார். பன்னிரண்டு திருமுறைகள் இருப்பதுபோன்று சிவஞான போதத்தில் பன்னிரண்டு சூத்திரங்கள் உள்ளமை சிறப்பு. திருமுறைகள் பெருமானின் பொருள் உண்மையைக் கூட மெய்கண்ட நூல்கள் அப்பெருமானின் பொருள் இலக்கணத்தைக் குறிப்பிடுகின்றன.

<u>பதி உண்மை</u>

சிவஞானபோதத்தின் முதல் சூத்திரம் இறை உண்மையை உணர்த்துகிறது. அதனை,



"அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம்,
அந்தம் ஆதி, என்மனார் புலவர்"

என்று மெய்கண்டார் கூறுவார்.

உலகத்துப் பொருள்களும் உயிர்களும் செயல்படுதலை வைத்து கருதல் அளவையினால் பதி உண்மை நிலைநிறுத்தப்படுகின்றது. இவ்வுலகம் அறிவுப் பொருள்களாலும் அறிவற்றப் பொருள்களாலும் ஆகியுள்ளது. இப்பொருள்கள் ஒரு முறையில் தோன்றி, நின்று அழிவதால் அதைச் செய்வதற்குத் தலைவன் ஒருவன் வேண்டும் எனக் குறிப்பிடுகிறது. இவ்வுலகம் எக்காலத்தும் உள்ள பொருள் எனவும் குறிப்பிடுகிறது. உலகு அழிவதற்குக் காரணமாய் உள்ள சங்காரனனே உலகை மீளவும் தோற்றுவிப்பதால், அவனே உலகிற்குத் தலைவன் என்கிறது. மாயை என்ற பொருளினால் உலகம் ஆக்கப்பட்டுள்ளது எனவும் இவ்வுலகத்தின் முதற் கடவுள் சிவனே எனவும் ஆணவ மல நீக்கத்தின் பொருட்டு இவ்வுலகம் தோன்றி, நின்று, அழிகின்றது எனவும் சிவஞானபோதம் குறிப்பிடுகின்றது.

இக்கருத்துத் தமிழ் விரகர் திருஞானசம்பந்தரின் திருப்பிரமபுரத் திருமுறையில் வெளிப்படுகிறது. "தோடுடைய செவியன்" எனும் திருப்பதிகத்தில் இறைவன் இயற்றுகின்ற ஐந்தொழில்களைச் சம்பந்தப் பெருமான் குறிப்பிடுகின்றார். "தோடு" என்று குறித்ததினால் இறைவனின் அம்மைப் பகுதியைக் குறித்து அருளலைச் சொன்னார். "கவர் கள்வன்" என்றதனால், இறைவனின் மறைத்தல் தொழிலைக் குறித்தார். "சுடலைப் பொடிப்பூசி" என்பதனால் பெருமானின் அழித்தல் தொழிலைக் குறித்தார். "தூவெண் மதிசூடி" என்பதனால் இறைவனின் காத்தல் தொழிலைக் குறிப்பிட்டார். "விடையேறி" என்பதனால் இறைவன் அறத்தை அடிப்படையாகக் கொண்டு படைத்தலைக் குறிப்பிட்டார்.

தவிர, "பூவார் மலர் கொண்டு" எனும் திருவண்ணாமலைப் பதிகத்தில் சம்பந்தர் பெருமான், "ஞானத்திரளாய் நின்ற பெருமான் நல்ல அடியார் மேல் ஊனத்திரளை நீக்கும் அதுவும் உண்மைப் பொருள் போலும்" என்று கூறி பதி உண்மையைச் சுட்டுகின்றார்.

**சிவஞானபோதத்தின் இரண்டாம் சூத்திரம்**

"சுவையே தானேயாய், இருவினையிற்
போக்கு வரவு புரிய, ஆணையின்
நீக்கமின்றி நிற்கும் அன்றே"

என வருகின்றது. இதில் உலகில் உயிர்களைத் தத்தம் நல்வினைத் தீவினைகளுக்கு ஏற்ப நியதி செய்து பிறத்தல் இறத்தல்களை இறைவன் செய்விக்கின்றான் என்கிறது. மேலும் இறைவன் உயிர்களோடு கலப்பினால் ஒன்றாயும், பொருளால் வேறாயும், உணர்த்தும் வகையால் உடனாயும் நிற்கின்றான் என்று குறிப்பிடுகின்றது. இந்நிலையினை உடலில் உயிர்போல ஒன்றாயும், கண்ணொளியும் ஞாயிற்றின் ஒளியும் போல வேறாயும், உயிருக்கு உயிராய்க் கண்ணொளியிற் கலந்து உடனாய் நின்று உணர்த்தும் ஆன்ம போதமுமாய் இறைவன் விளங்குகின்றான் என்று விளக்குகின்றது. சிற்சத்தித் துணையாக உயிர்களைப் போகங்களில் செலுத்தி நிற்கும் இறைவன், அவ்வுயிரை நீங்காது எப்போதும் உடன் உறைகின்றான் என்றும் குறிப்பிடுகின்றது.

இவ்வுண்மையைப் புகலி வேந்தர் திருஞானசம்பந்தர் தமது திருவீழிமிழலைப் பதிகத்தில், "ஈறாய் முதன் ஒன்றாய்" என இறைவன் ஒன்றாய் இருத்தலையும், "வேறாய்", "உடன் ஆனான் இடம் வீழிம்மிழலையே" என்று இறைவன் வேறாயும் உடனாயும் இருத்தலையும் குறிப்பிடுகின்றார். பசு பாசத்தினைப் பற்றிய குறிப்பினை, "விளையாததொர் பரிசில் வரு பசுபாச வேதனை ஒண் தளையாயின" என திருமுறை ஒன்றில் திருமுதுகுன்றப் பதிகத்தில் குறிப்பிட்டுள்ளார் திருஞானசம்பந்தர். நல்வினைத் தீவினைகளுக்கேற்ப இறைவன் பிறத்தல் இறத்தல்களைச் செய்விக்கின்றான் என்பதனை, "என்ன புண்ணியம் செய்தனை நெ ஞ்சமே இருங்கடல் வையத்து, முன்னம் நீபுரி நல்வினைப் பயனிடை" என இரண்டாம் திருமுறையில் வலஞ்சுழிப் பதிகத்தில் காழி வேந்தர் திருஞானசம்பந்தர் குறிப்பிடுகின்றார்.

சிவஞானபோதத்தில் மூன்றாம் சூத்திரம் உயிர் உண்மையினைப் பற்றி விவரிக்கின்றது. உயிர் உண்டு; அது எண்ணிலியாக உள்ளது. உயிர் உடலினுள் தங்குகின்றது. உயிர் வேறு உடல்வேறு. உயிர் நுண் உடம்பினும் வேறு. உயிர் ஐம்பொறிகளினும் வேறு. உயிர் பிராண வாயுவினும் வேறு. இறைவனும் உயிரும் வேறு என்பனவே அவை. இவற்றை

"உளது இலது என்றலின், எனது உடல் என்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின், கண்படில்
உண்டி வினை இன்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா இயந்திர தனுவின் உள் ஆன்மா"

என்கிறார் மெய்கண்டார்.

உயிர் உண்மையைத் திருஞானசம்பந்தர் மூன்றாம் திருமுறையில் திருவானைக்கா பதிகத்தில், "ஊழி ஊழி வையகத்து உயிர்கள் தோற்றும்" என்று குறிப்பிடுகின்றார். உயிர்கள் எண்ணிலி என்ற உண்மையினை, "வாழ்க அந்தணர், வானவர், ஆனினம்" என்று மூன்றாம் திருமுறையில் திருப்பாசுரத்தில் அவரே குறிப்பிட்டுள்ளார். இறைவனும் உயிரும் வேறு; உயிரும் உடலும் வேறு என்ற கருத்துக்கள் தம்பிராமன் தோழரான சுந்தரரின் திருநொடித்தான் மலை பதிகத்தில், "தான் எனை முன் படைத்தான்... ஊன் உயிர் வேறு செய்தான்" என்று பாடியுள்ளமை வழி தெளிவாகிறது. தவிர மாணிக்கத் தமிழ் அருளிய மாணிக்கவாசக சுவாமிகள், "அன்றே எந்தன் ஆவியும், உடலும், உடைமையெல்லாமும், குன்றே அணையாய் என்னை ஆட்கொண்ட போதே கொண்டிலையோ" என்று பாடியுள்ளமை வழியும் அறியலாம்.

உயிர் உடலில் உறைகிறது என்ற உண்மையை, "ஊனில் ஆவி உயிர்க்கும் பொழுதெல்லாம் நானிலாவி இருப்பன் என் நாதனை" என்று ஆளுடைய அரசான திருநாவுக்கரசு சுவாமிகள் திருக்குறுந்தொகைக் கோயில் பதிகத்தில் அருளியுள்ளமை வழி அறியலாம். ஐம்புலன்கள் உயிரல்ல என்பதுவும் இறைவன் உயிரல்ல என்பதுவும், "மாறிநின்று என்ன மயக்கிடும் வஞ்ச புலன் ஐந்தின் வழியடைத்து அமுதே, ஊறி நின்று என்னுள் எழுபரம் சோதி" என மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய கோயில் திருப்பதிகத்தின் வழி அறியலாம்.

சிவஞானபோதத்தின் நான்காம் சூத்திரம் உயிரின் பொது நிலையினைப் பற்றிக் குறிப்பிடுகின்றது.

"அந்தக் கரணம் அவற்றின் ஒன்று அன்று, அவை
சந்தித்த தான்மா, சகச மலத்துணராது
அமைச்சர சேய்ப்பநின்று, அஞ்சவத் தைத்தே" என்பது பாடல்.

இச்சூத்திரம் உயிரானது, மனம், சித்தம், புத்தி, அகங்காரம் எனப்படும் அந்தக் காரணங்களினும் வேறு. அறிவிக்க அறியும் இயல்பினை உடைய உயிரின் அறிவை மறைப்பது ஆணவமலம். உயிர் அந்தக் கரணங்களோடு கூடியே அறியும். உயிருக்கு அடுத்து நின்று உதவுவன அந்தக் கரணங்களே. மல மறைப்பு நீங்கும் வரை உயிர், கேவலம், சகலம், சுத்தம் எனும் மூன்று நிலையிலும் நின்று விழிப்பு நிலை, கனவு நிலை, உறக்க நிலை, பேருறக்க நிலை, கருவிகள் நீங்கிய நிலை என்று ஐந்து நிலைகளில் நெற்றி, கழுத்து, இருதயம், நாடி, மூலாதாரம் என்ற ஐந்து இடங்களிலும் சென்று இயங்கி மீளுதலுமாகிய செயல்களை மேற்கொள்ளும் என்று குறிப்பிடுகிறது. திரோதான சத்தி என்ற சிற்சத்தி ஆணவமலத்தைத் தூண்டித் தொழிற்படுத்தி உயிர்கட்குக் கன்மத்தையூட்டிக் கழிக்கும் வரை உயிர் மெய்யுணர்வு எய்தும் நிலை இல்லை என்பதனையும் குறிக்கின்றது.

உயிர், மனம், சித்தம், புத்தி, அகங்காரம் என்பதனைப் பற்றிப் போதலையும், ஆணவத் தாக்குதலுக்கு ஆட்படும் என்பதனையும், இறைவன் அறிவிக்க அறிவது என்பதனைப் பற்றியும், "மனம் எனும் தோனி பற்றி மதியெனும் கோலை ஊன்றி, சினம் எனும் சரக்கை ஏற்றி.... மதன் எனும் பாறை தாக்கி மறியும்போது அறிய வொண்ணா, உனை உனும் உணர்வை நல்காய் ஒற்றியூர் உடைய கோவே" என்று நான்காம் திருமுறை திருநேரிசையில் திருநாவுக்கரசு சுவாமிகள் குறிப்பிடுகின்றார். உயிர் சார்ந்ததின் வண்ணமாக இருத்தலை, "உறுகயிர் ஊசல்போல ஒன்று விட்டு ஒன்று பற்றி, மறுகயிர் ஊசல்போல வந்து - வந்து உலவு நெஞ்சம்" என திருவதிகை வீரட்டானத் திருத்தாண்டகத்தில் அப்பர் பெருமான் குறிப்பிடுகின்றார். உயிர் புலன்களைச் சாருதலை, "வென்றிலேன் புலன்கள் ஐந்தும் வென்றவர் வளாகம் தன்னுள், சென்றிலேன் ஆதலாலே செந்நெறி அதற்குச் சேயேன்"



என்று நான்காம் திருமுறையில் குறைந்த திருநேரிசையில் அப்பர் பெருமான் குறிப்பிட்டுள்ளார்.

சிவஞானபோதத்தின் ஐந்தாம் சூத்திரம் பாச இலக்கணத்தைப் பற்றி,

''விளம்பிய உள்ளத்து மெய் வாய் கண்மூக்கு
அளந்து அறிந்து அறியா ஆங்கு அவைபோல
தாம்தம் உணர்வின் (று) தமி அருள்
காந்தம் கண்ட பசாசத் தவையே''

என்று குறிப்பிடுகின்றது. உயிரால் இயக்கப்பட்ட ஞானேந்திரியம், கன்மேந்திரியம் அந்தக் கரணங்கள் போன்ற கருவிகள் பொருள்களை அளந்து அறிகின்றன. இக்கருவிகள் பாசத்தால், தத்துவத்தால் ஆனவை. உயிரால் இயக்கப்படுகின்ற இக்கருவிகளும் அவ்வுயிரினை அறியாது. இறைவன் உயிரை இயக்கினால் மட்டுமே உயிர் பிறவற்றை அறியும். உயிர், காந்தத்தின் முன் இரும்பு எப்படித் தொழிற்படுகின்றதோ அப்படி முதல்வன் நினைத்த அளவிலேயே தொழிற்படும் என்று குறிப்பிடுகின்றது.

இறைவன் உயிரைச் செலுத்த, உயிர் கருவிகளைச் செலுத்த கருவிகள் அறிகின்றன என்ற கருத்தையும் உயிர்கள் பாசத் தொடர்பு உடையன என்ற கருத்தையும், ''மூக்கு, வாய், செவி, கண், உடலாகிவந்து, ஆக்கும் ஐவர்தம் ஆப்பை அவிழ்த்தருள், நோக்குவான் நமை நோய்வினை வாராமே, காக்கும் நாயகன் கச்சியேகம்பனே'' எனும் ஐந்தாம் திருமுறையான திருநாவுக்கரசு சுவாமிகளின் பதிகம் குறிப்பிடுகின்றது. இறைவன் உயிரை இயக்கினாலேயே உயிர் அறியும் எனும் கருத்தினை, ''நமசிவாயவே ஞானமும் கல்வியும், நமசிவாயவே நானறிவிச்சையும், நமசிவாயவே நாநவின்று ஏத்துமே, நமசிவாயவே நன்னெறி காட்டுமே'' என்ற திருநாவுக்கரசு சுவாமிகளின் பதிகம் வழி அறியலாம். நிலை இல்லாதவற்றை நிலைபோல் காட்டும் பாச இலக்கணத்தை, ''பொத்தர் மண்சுவர்ப் பொல்லாக் குரம்பையை, மெய்த்தன் என்று இயந்திடல் ஏழைகாள்'' என்று திருக்கானூர் பதிகத்தில் அப்பர் பெருமான் குறிப்பிடுகின்றார்.

சிவஞானபோதத்தின் ஆறாம்சூத்திரம் பதியின் சிறப்பு இலக்கத்தைப் பற்றி,

''உணர்வுரு அசத்து எனின், உணராது இன்மையின்
இருதிறன் அல்லது சிவசத்தாம் என
இரண்டு வகையின் இசைக்கும் மன்னுலகே''

என்று குறிப்பிடுகின்றது.

இச்சூத்திரம், இறைவன் சுட்டறிவால் அறியப்படும் அசத்துப் பொருள் அல்ல. அதனால் அவன் அறியப்பட முடியாத பொருளும் அல்ல. அறிய முடியும் என்பதால் சிவசத்துப் பொருளான இறைவன் எளிதில் அறிவதற்கு உரியவனும் அல்ல. சிவசத்தான இறைவனை அவன் அருளாலேயே அறிய முடியும் என்பதனை உணர்த்துகின்றது.

இறைவன் எல்லாவுமாய் அல்லவையுமாய் சுட்டி அறியப்படாதவனுமாய் உள்ள நிலையினை, ''மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான், வாயாரத் தன்னடியே பாடும் தொண்டர் இனத்தகத்தான், இமையவர்தம் சிரத்தின் மேலான், ஏழண்டத்து அப்பாலான், இப்பாற் செம்பொன் புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதினுள்ளான், பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றினுள்ளான், கனத்தகத்தான் கயிலாயத்து உச்சியுள்ளான், காளத்தியான் அவன் என் கண்ணுளானே'' என்று ஆறாம் திருமுறையில் திருநாவுக்கரசு சுவாமிகள் திருத்தாண்டகம் குறிப்பிடுகின்றது. அவனருளாலேயே அவனைக் காண இயலும் என்பதனை, ''ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே... காண்பார் யார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே'' என்று தனித்திருத்தாண்டகத்தில் திருநாவுக்கரசு சுவாமிகள் குறிப்பிடுகின்றார்.

சிவஞானபோதத்தின் ஏழாம் சூத்திரம் சாதனை இயல் என்ற உயிர்கள் செய்ய வேண்டிய சாதனையை,





''யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்
சத்தே அறியாது அசத்து இலது அறியாது
இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா''

என்று குறிப்பிடுகின்றது.

இச்சூத்திரம், அசத்துப் பொருளான சடப்பொருள்கள் ஒன்றினையும் அறியமாட்டா என்கிறது. உயிர், சத்து அசத்துக்களாகிய இருவகைப் பொருள்களையும் அறியும் என்கிறது. உயிர் சத்தும் அல்லாது அசத்தும் அல்லாது சத்தா அசத்தாக இருக்கின்றது. உயிர் சத்துப் பொருளையும் அசத்துப் பொருளையும் இறைவன் அருளைக் கொண்டு பிரித்து அறிய சாதனை செய்ய வேண்டும் என்று குறிப்பிடுகின்றது. உயிர் அசத்துப் பொருளை இறைவன் திருவருளால் அறிந்த நிலையை, ''பத்திமையும் அடிமையையும் கைவிடுவான் பாவியேன், பொத்தின நோய் அது இதனைப் பொருளறிந்தே போய்த்தொருவேன்'' என்று சுந்தரரின் திருவாரூர்ப்பதிகம் குறிக்கின்றது.

உயிர் அசத்துப் பொருளை இறைவன் திருவருளால் உணர்த்த நிலையினையும் உயிர் சாதனை செய்ய வேண்டும் என்ற குறிப்பையும், ''வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம், பாழ்போவது பிறவிகடல் பசிநோய் செய்த பறிதான், தாழாது அறம் செய்மின் – எனும்'' சுந்தரரின் திருக்கேதாரத் திருமுறை விளக்குகின்றது.

சத்தான இறைவனையும் அசத்தான பாசத்தையும் சத்து அசத்தான உயிரையும் இறைவன் அருளால் அறிந்து சாதனை புரிதல் வேண்டும் என்பதனை, ''தானெனை முன்படைத்தான், அதறிந்து தன் பொன்னடிக்கே, நான் என பாடல் அந்தோ, நாயினேனைப் பொருள்படுத்து, வானெனை வந்தெதிர் கொள்ள மத்தயானை அருள்புரிந்து. ஊன் உயிர் வேறு செய்தான் நொடித்தான் மலை உத்தமனே'' எனும் சுந்தரரின் திருவஞ்சைக்காப்பதிகம் உணர்த்துகின்றது.

சிவஞான போதத்தின் எட்டாம் சூத்திரம் இறைவன் குருவாய் வந்து உணர்த்தும் முறையினைக் குறிப்பிடுகின்றது. இது,

''ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல், குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னியம் இன்மையின் அரன் கழல் செலுமே''

என வருகிறது.

உயிர்கள் ஞானத்தினை உணரும் முறைமையினை இப்பாடல் கூறுகின்றது. உயிர் தன் உண்மையான இயல்பினை அறியாது கருவிகளால் மயங்கி நிற்கும். சிவம் உயிர்க்கு அதன் இயல்பினை உணர்த்தும். சிவம் உயிர்க்கு அதன் இயல்பைக் குருவாய் வந்து உணர்த்தும். தன் சிறப்பியல்பான வியாபகத்தை உணர்ந்த உயிர் கருவிகளை நீங்கிச் சிவத்தை நாடிச் செல்லும் என்று இச்சூத்திரம் உணர்த்துகின்றது.

இறைவன் குருவாக வருதலைச் சிவபுராணத்தில் மாணிக்கவாசக சுவாமிகள், ''கோகழி ஆண்ட குருமணி தன் தாள்வாழ்க'', ''கண்ணுதலான் தன் கருணை கண்காட்ட வந்தெய்தி'', ''நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி'', ''நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி'' என்று குறிப்பிடுகின்றார்.

புலன்கள் அல்லது கருவிகள் உயிரை மயங்கி இருக்கச் செய்தலை, ''மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய'', ''கள்ளப் புலக்கும்பை கட்டு அழிக்க வல்லானே'' என சிவபுராணத்திலும் ''மாறிநின்று என்னை மயக்கிடும் வஞ்சுப் புலனைந்தின் வழியடைத்து அமுதே, ஊறிநின்று என்னுள் எழுபரம்சோதி'' என கோயில் திருப்பதிகத்திலும் மாணிக்கவாசக சுவாமிகள் குறிப்பிடுவதனைக் காணலாம்.

இறைவன் உணர்த்த உயிர் கருவிகளை நீங்கி இறைவனை நாடும் என்பதனை,



"நானேயோ தவம் செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்
தேனாய் இன் அமுதமுமாய் தித்திக்கும் சிவபெருமான்
தானே வந்து எனது உள்ளம் புகுந்து அடியேற்குஅருள்செய்தான்
ஊனாலும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே"

என திருவேசறவில் மாணிக்கவாசகர் சுட்டுவதைக் காணலாம்.

சிவஞான போதத்தின் ஒன்பதாம் சூத்திரம் ஆன்மசுத்தி அல்லது சாதனை உணர்த்துதலாய் உள்ளது.

"ஊனக் கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணில் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்து எனப் பாசம் ஒருவத்
தண்ணிழலாம் பதி விதி எண்ணும் அஞ்செழுத்தே" என்பது சூத்திரம்.

இச்சூத்திரம், தன்னியல்பு உணர்த்தப் பெற்ற உயிர், சிவத்தைத் தன்னுள்ளே, சிவமாகத் தன்னைப் பாவனை செய்து சிவத்தை நாடும் என்கிறது. சிவயோகம்பாவனை செய்யும் உயிருக்குப் பாசப் பொருள்கள் விரைந்து மறையும். சிவோகம் பாவனையில் முற்றிய உயிர் சிவத்தின் ஞான உண்மை வடிவைக் காணும். சிவத்தின் ஞான உண்மை வடிவினைக் கண்ட உயிர், அக்காட்சியில் உறைந்து நிற்றலுக்கு முத்தித் திருவைந்து எழுத்தினைச் சொல்ல வேண்டும். உயிர் அறிவினால் உணர முடியாத சிவத்தை இறை அறிவினால் உணர திருவைந்தெழுத்தை ஓதுதல் வேண்டும் என்கிறது.

எல்லாம் இறைவனின் செயல்தான் என்று உணர்தலே ஞானம் பெறுதல். இவ்வுணர்வினைப் பதி ஞானத்தாலேயே உணர இயலும். இதனைத் திருமாளிகைத் தேவர் திருவிசைப்பாவில், "ஒளிவளர் விளக்கே... விளம்புமா விளம்பே, பணியுமா பணியே, கருதுமா கருதுதே, உரைக்குமா உரையே, தொடருமா தொடரே, நினையுமா நினையே" என்று குறிப்பிடுவதைக் காணலாம். பதிஞானம் உணரப்பெற்ற உயிருக்குப் பாசப் பொருள் மறைதலையும் அதனைத் திருவைந்து எழுத்தினை ஓதியும் திருநீற்றினை அணிந்தும் உறைந்து நிற்றலையும்,

"உற்றாய் என்னும்; உன் னை அன்றி மற்று ஒன்று
உணரேன் என்னும்; உணர்வுகள் கலக்கப்
பெற்றாய ஐந்தெழுத்தும் பிதற்றி,
பிணிதீர வெண்ணீறிடப் பெற்றேன் என்னும்..."

என திருவிசைப்பாவில் கோயில் திருப்பதிகம் சுட்டுகின்றது. பதிஞானத்தால் உணர்வு பெறுதலையும், பாசம் மறைதலையும், சிவத்தின் உண்மை ஞான வடிவினைக் காண்டலையும்,

"நெற்றியில் கண், என் கண்ணின் நின்றகலா;
நெஞ்சினில் அஞ்சிலம்பு அலைக்கும்;
பொற்றிருவடி என்குடி முழுதாளப் புகுந்தன;
போந்தன இல்லை; மற்றெனக்கு உறவு ஏன்"

என்று கருவூர்த்தேவர் தஞ்சை இராசராசேச்சரத்துப் பதிகத்தில் குறிப்பிடுகின்றார்.

சிவஞானபோதத்தின் பத்தாம் சூத்திரம் பாச நீக்கம் அல்லது தற்போதம் நீங்கலைக் குறிப்பிடுகின்றது. இச்சூத்திரம்

"அவனே தானே ஆகிய அந்நெறி
ஏகன் ஆகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை இன்றே" என வருகின்றது.





சிவஞான உண்மை வடிவம் விளங்கப்பெற்ற உயிர், அச்சிவத்தோடு ஒன்றித்து நிற்றலோடு சிவப்பணியிலும் வழுவாது நிற்றல் வேண்டும். சிவத்தோடு ஒன்றாய் நிற்கும் உயிரை ஆணவமலம் தாக்காது. சிவத்தோடு ஒன்றாய் நின்று சிவப்பணி இயற்றும் உயிர்க்கு மாயா கன்மங்கள் இல்லை. இந்நிலையில் இறைவன் உலகை மறைத்துத் தன்னைக் காட்டி, ஒன்றாய், உடனாய், வேறாய் நின்று உயிரைச் செயல்படுத்துவான்.

சிவனோடு ஒன்றித்து மலம் நீங்கப் பெறுதலைத் தமிழ் ஆகமமான திருமந்திரத்தில்,

> "தயம் அவனாகி தான் ஐந்தாம் மலம் செற்று
> மோனம் அதாம் ஒழிப்பான், முத்தர் ஆவதும்
> ஈனம் இல் ஞான அநுபூதியில் இன்பமும்
> தான் அவனாகி அற்றலான சன்மார்க்கமே"

என்று திருமூலர் குறிப்பிடுகின்றார். தான் எனும் தற்போதம் அறுதலை,

> "சைவம் சிவனுடன் சம்பந்தமாகுதல்
> சைவம் தனை அறிந்து சிவம் சாருதல்
> சைவம் சிவம் தன்னைச் சாராமல் நீங்குதல்
> சைவம் சிவானந்தம் சாயுச்சியமே"

என்று ஐந்தாம் தந்திரத்தில் சத்திநிபாதம் எனும் பகுதியில் திருமூலர் குறிப்பிடுகின்றார். தன்நாமம் என்னும் தற்போதம் கெட்டால் உயிர் தலைவன் தாளினுக்குத் தலைப்படும் என்பதனை

> "உன் முதலாகிய ஊன் உயிர் உண்டு எனுங்கண்,
> முதல் ஈசன் கருத்து அறிவாரில்லை.
> நன் முதல் ஏறிய நாமம் அற நின்றால்
> தன் முதல் ஆகிய தத்துவமாமே"

என்று திருமந்திரத்தின் ஏழாம் தந்திரத்தில் கேடுகண்டிரங்கல் எனும் பகுதியில் திருமூலர் குறிப்பிடுகின்றார். உயிர் மலம் நீங்கப் பெற்று சிவத்தில் ஒடுங்கி நிற்றலை,

> "தானே சிவம் ஆன தன்மை தலைப்பட
> ஆன மலமும் அப்பாச பேதமும் ஆன குணமும்
> பரான்மா உபாதியும் பானுவின்முன் மதிபோல் படராவே"

என்று எட்டாம் தந்திரத்தில் நின்மலாவத்தை எனும் பகுதியில் திருமூலர் சுட்டுகின்றார்.

சிவஞானபோதத்தின் பதினொன்றாம் சூத்திரம் சிவப்பேறு அல்லது முடிந்த நிலையை உணர்த்துதல் பற்றி குறிப்பிடுகின்றது.

> "காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
> காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
> அயரா அன்பின் அரன்கழல் செலுமே"

என்பது சூத்திரம். சிவம் இந்நிலையில் உயிர்க்கு அறிந்தும் அறிவித்தும் காணும் உதவியையும் காட்டும் உதவியையும் செய்யும். பாசம் நீங்கிய உயிர் சிவத்தின் இருவித உதவியையும் அறிந்து மறவாது அன்பினை மேலும் உணர்தல் செய்தல் வேண்டும். இத்தகைய சிவ நிட்டையில் நிலைத்து நிற்பவரே சிவத்தின் திருவடியினை அடைவர் என்கிறது இச்சூத்திரம்.

சிவம் உயிருக்கு அறிந்தும் அறிவித்தும் செய்யும் உதவியை.



"அறிவானும் தானே அறிவிப்பானும் தானே
அறிவாய் அறிகின்றான் தானே – அறிகின்ற
மெய்ப்பொருளும் தானே விளிசுடர் பார் ஆகாசம்
அப்பொருளும் தானே அவன்"

என காரைக்கால் அம்மையார் தம் அற்புதத் திருவந்தாதியில் குறிப்பிட்டுள்ளார். அவன் அருளினால் அன்றி அவனைக் காணுதல் நிகழாது என்பதனை, "காண்பார் ஆர் கண்ணுதலாய்க் காட்டாக்காலே" என்று தனித்திருத்தாண்டகத்தில் அப்பர் பெருமானும் சுட்டுவார்.

சித்தாந்த சைவ மெய்கண்ட நூல்களில் தலைமணிநூலாக விளங்கும் சிவஞான போதத்தின் இறுதி சூத்திரமான **பன்னிரண்டாம் சூத்திரம் சிவம்** முத்தர்களைப் பற்றியும் அவர்கள் உடல் இருக்கும் வரை பின்பற்ற வேண்டியன பற்றியும் குறிப்பிடுகின்றது.

இச்சூத்திரம்,

"செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீ, அன்பரொடு மரீ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே"

என்று வருகிறது. இச்சூத்திரம் சிவப்பேற்றினை அடைந்த சீவன் முத்தர்கள் மும்மலங்களையும் விட்டு நிற்பார்கள் என்கிறது. அவர்களையும் மீண்டும் வாசனா மலம் தாக்க வாய்ப்பு உண்டு என்கிறது. அதற்கு மாற்று வழி உண்டு என்கிறது. சீவன் முத்தர்கள் சிவனடியார்களோடு இணங்கி நிற்பதனால் கன்ம மலம் ஒட்டப்பெறாது இருப்பார்கள் எனவும், அவர்கள் சிவனடியார்களைச் சிவனாகவே போற்றிச் சங்கம வழிபாட்டில் இருப்பார்கள் எனவும் கூறுகின்றது.

சிவன் முத்தர்கள் அடியார்களது வேடத்தைச் சிவமாகவே கண்டு, குருவைச் சிவமாகவே கண்டு குரு வழிபாடு இயற்றுவதனால் இவர்களை மாயா மலம் பற்றாது என்கிறது.

சீவன் முத்தர்கள் சிவாலயங்களையும் சிவலிங்கங்களையும் சிவனெனவே எண்ணி இலிங்க வழிபாடு செய்வதானல் ஆணவமலப் பிணிப்பிலிருந்தும் விடுபடுவார்கள் என்கிறது.

இச்சூத்திரம் உணர்த்தும் குரு, இலிங்க, சங்க வழிபாட்டின் அடிப்படையிலேயே பன்னிரெண்டாம் திருமுறையான பெரியபுராணம் அமைந்துள்ளது. அறுபத்து மூன்று அடியார்க்கும் இவ்வடிப்படையிலே சேக்கிழாரால் காட்டப்பெறுகின்றனர். உமாபதி சிவாச்சாரியார் தமது திருமுறை கண்ட புராணத்தில் இவ்வகையினைக் குறிப்பிட்டுள்ளார்.

நெடுமாறர், மங்கையர்கரசியார், குலச்சிறையார், பெருமிழலைக் குறும்பர் போன்ற பதினொருவர் குரு வழிபாட்டு நெறியிலும், கண்ணப்பர், நீலநக்கர், சண்டேசர், சேரமான் போன்ற முப்பதின்மர் இலிங்க வழிபாட்டு நெறியிலும், திருநீலகண்டர், இயற்பகை, சிறுதொண்டர் போன்ற பத்தொன்பதின்மர் சங்கம வழிபாட்டு நெறியிலும் நின்றனர் என்று குறிப்பிடுகின்றார்.

திருமுறைகளின் பிழிவாகவே சித்தாந்த சைவத்தின் மெய்கண்ட நூல்கள் இருக்கின்றன. சிவஞானபோதம் சித்தாந்த சைவத்தின் கோட்பாடாகவும் திருமுறைகள் அதன் செயற்பாடாகவும் உள்ளன. இறைவனால் அருளப்பெற்ற இரண்டும் ஒன்றையே வலியுறுத்துகின்றன. சித்தாந்த சைவர்கள் இவ்வுண்மையினை உணர்ந்து இரண்டினையும் நம் இரு கண்களைப் போன்று போற்றி பேணிக்காப்பது தலையாய கடமையாகும்.





உ

ஓம் கம் கணபதியே நமஹ

# "வசிஷ்டர் வாயால்...."

சந்திர வமிசத்தில் புருரவஸின் (Pururavas) வழியில் வந்த காதி (Gadhi) என்பவரின் மகனாகப் பிறந்து, கௌசிகன் (Kaushika) என்னும் பெயரில், நீதி தவறாத - நெறி பிறழாத அரசராகத் திகழ்ந்தவர், பின்னாளில் ராஜரிஷி என்றும், கடைசியாகப் பிரம்மரிஷி (Brahma Rishi) என்றும் அழைக்கப்பெற்ற விசுவாமித்திரர்.

இராமாயணத்தில் விசுவாமித்திரருக்குத் தலையாயதோர் இடமுண்டு. இராமனின் திறமையையும் ஆற்றலையும் உலகுக்கு உணர்த்தி, ஜனககுமாரியான ஜானகியை இராமனின் சகதர்மிணியாக்கியவர் விசுவாமித்திரரே.

வசிஷ்ட (Vasishtha)ரைப் போன்று தாமும் பிரம்மரிஷியாக வேண்டும் என்பதற்காகப் பல வகைகளில் முயன்று, பலமுறை கடுமையாகத் தவம் செய்து, இறுதியில் வசிஷ்டரே தம் வாயால், "உம்முடைய தீவிரமான முயற்சிக்குப் பலன் கிட்டிவிட்டது; உண்மையில் நீர் ஒரு பிரம்மரிஷியே" என்று கூறும் நிலையை உருவாக்கியவர் விசுவாமித்திரர்.

✡ ✡ ✡ ✡ ✡

க்ஷத்திரியராக - அரச மரபில் பிறந்த கௌசிகர் எப்படிப் பிரம்மரிஷியானார்?

வசிஷ்டரின் ஆசிரமத்துக்குச் செல்வோம் வருகிறீர்களா?

இதோ, இதுதான் சபலா (Sabala) என்னும் பெயரில் இந்த ஆசிரமத்தில் வளர்ந்துவரும் பசு. அமுதம் பெறவேண்டி அசுரரும் தேவரும் பாற்கடலைக் கடைந்தபோது அதிலிருந்து கிடைத்த பல பொருட்களில் காமதேனுவாகிய இந்தப் பசுவும் ஒன்று; வசிஷ்டருக்கு அன்பளிப்பாக வழங்கப் பெற்று, அவர் ஆசிரமத்தில், அவர் மகளைப் போன்று வளர்ந்து வருகிறது. வேண்டியதை வேண்டியவாறு வழங்கும் அதிசய ஆற்றல் வாய்ந்தது இந்த காமதேனு. இதன் அதிசய ஆற்றலை அறிந்து கௌசிகர், இதைத் தம்முடையதாக்கிக் கொள்ளப் பலவாறாக முயன்றார்; பரிசாகக் கிடைத்தது தோல்வியே தவிரப் பசு கிடைக்கவில்லை. அதனால் மனமுடைந்துபோன கௌசிகர், தம் மகனிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு இமயத்துக்குச் சென்று சிவனை நோக்கிக் கடுமையாகத் தவம் செய்தார்.

அவர் தவத்துக்கு இரங்கிய சிவபெருமான், தேவர் - கந்தருவர் - யக்ஷர் போன்றோர் பயன்படுத்தும் அனைத்து அஸ்திரங்களையும் அவருக்கு வழங்கி அருள் புரிந்தார்.

"அழிந்தான் வசிஷ்டன்" என்னும் இறுமாப்புடன் அவருடைய ஆசிரமத்துக்குச் சென்று அஸ்திரங்கள் அனைத்தையும் அவர்மீது பிரயோகித்தார்; வசிஷ்டரோ தம்முடைய பிரம்மதண்டத்தால் (Brahma Danda) அவை தம்மைத் தாக்காமல் தற்காத்துக் கொண்டார். கடைசி ஆயுதமாகப் பிரம்மாஸ்த்திரத்தைப் (Brahmaastra) பயன்படுத்தி அதிலும் தோல்வியே கண்டார் கௌசிகர்.

மீண்டும் மனம் நொந்துபோய்த் தென்திசை நோக்கிச் சென்று பல்லாண்டுகள் கடுமையாகத் தவம் செய்து, பிரமனின் அருளால் ராஜரிஷி ஆனார். அதிலும் மனநிறைவடையாத கௌசிகர், மீண்டும் கடுமையான தவத்தில் இறங்கினார்.



அந்த நேரத்தில், மானிட உடலுடன் மோட்சத்தை அடைய விரும்பிய திரிசங்கு (Thirsanku) என்னும் அரசன், தன்னுடைய குருவான வசிஷ்டரின் குமாரர்களால், சண்டாளன் (Sandalan) ஆக்கப்பெற்று, அதன் காரணமாக நாட்டைவிட்டுத் துரத்தப்பெற்ற நிலையில், அவரை அண்டினான். தம் தவ வலிமையால் அவனை அதே சண்டாள உடலுடன் சுவர்க்கத்துக்கு அனுப்பினார் கௌசிகர்.

சுவர்க்கத்தை அடைந்த திரிசங்குவை இந்திரன், "சண்டாள உடலுடன் இங்கு வர இயலாது" என்று கூறிக் கீழே தள்ளப், பூமியை நோக்கித் தலைகீழாக வந்து கொண்டிருந்த அவனைக் கௌசிகர் "அப்படியே நில்" என்று உரத்துக் குரல் எழுப்ப, அவன் சுவர்க்கமும் இல்லாமல் பூமியும் இல்லாமல் அந்தரத்தில் நின்றான். அதுவே திரிசங்கு சுவர்க்கம் என வழங்குகிறது.

தொடர்ந்து புஷ்கரா (Pushkara)வுக்குச் சென்று, மீண்டும் கடுமையான தவத்தைத் தொடங்கினார் ராஜரிஷி.

அவருடைய முயற்சியைக் குலைக்கவிரும்பிய தேவர்கள், தேவகன்னியான மேனகை (Menaka)யை அவர் தவம் செய்யும் இடத்துக்கு அனுப்ப, அவளுடைய அழகில் மயங்கிய கௌசிகர், தம் நோக்கத்தை மறந்து அவளுடன் பத்தாண்டுகளை இன்பப் பொழுதாகக் கழித்தார். பின்னர் தம் தவற்றை உணர்ந்த நிலையில், அவளை மன்னித்து அனுப்பிவிட்டு இமயத்துக்குச் சென்று மீண்டும் பல்லாண்டுகள் தவத்தில் ஈடுபட்டார்.

தேவர்கள் அடுத்து ரம்பை (Raambha)யை அனுப்ப, அவளைப் பத்தாயிரம் ஆண்டுகள் கல்லாகச் சமைந்து போகுமாறு சபித்துவிட்டுத் தம் தவத்தை தொடர்ந்தார்.

இறுதியாக மூச்சை அடக்கி வேறு எந்தச் சிந்தையும் இல்லாமல் கடுமையாகத் தவம் செய்த கௌசிகர் முன் பிரமன் தோன்றி அவரைப் பிரம்மரிஷி (Brahma Rishi) என்று அறிவித்தான். அவனை விழுந்து வணங்கிய பிரம்மரிஷி கௌசிகர், "வசிஷ்டர் அன்றோ என்னைப் பிரம்மரிஷி என்று அழைக்க வேண்டும்" என்று கூற, வசிஷ்டர் வந்தார்: "நீர் பிரம்மரிஷியேதான் ஐயமில்லை என்று உறுதிப்படுத்தினார். தொடர்ந்து பிரபஞ்சத் தோழன் என்று பொருள்படும் விஸ்வாமித்திரன் (Vishvamitra, the friend of the universe) என்னும் திருநாமத்தைத் தேவர்கள் கௌசிகருக்கு வழங்கினர்.

✵ ✵ ✵ ✵ ✵

அயோத்தியில், இராமனுக்குப் பதினாறு ஆண்டுகளானபோது, அவனுக்குத் திருமணம் செய்வது பற்றிக் கோசல மன்னனான தசரதன் தன் அமைச்சர்களுடன் ஆலோசித்துக் கொண்டிருந்த நேரத்தில் விசுவாமித்திரர் அங்குச் சென்றார். தம்முடைய பத்து நாள் வேள்வியை அரக்கர்களிடமிருந்து பாதுகாக்க இராமனைத் தம்முடன் அனுப்புமாறு அவர் தசரதனைக் கோரினார். பதறிப் போனான் மன்னன். "இராமன் விவரம் அறியாதவன்; அவனுக்குப் பதிலாக நூற்றுக் கணக்கான வீரர்களை அனுப்புகிறேன்; நான் வேண்டுமானாலும் வருகிறேன்" என்று அவன் கூற, அதனை ஏற்க மறுத்து விசுவாமித்திரர் கோபத்துடன் வெளியேறிய நேரத்தில், வசிஷ்டரின் பரிந்துரையால், இராமனை அவருடன் அனுப்ப இசைந்தான் தசரதன்.

இராம-இலக்குவருடன் புறப்பட்டுச் சென்ற விசுவாமித்திரர், சரயு (Sarayu) ஆற்றை அடைந்த நேரத்தில், சகோதரர் இருவருக்கும் பல-அதிபல (Bala, Atibala) மந்திரங்களை உபதேசித்தார். அந்த மந்திரோபதேசம் உள்ளவர்கள், தேவையான நேரத்தில் பசி-தாகம்-உறக்கம் எதுவும் இல்லாமல் இருக்க முடியும்.

இராம சகோதரர்களின் உதவியுடன், வேள்வியைத் தடுக்க வேகமாக வந்த தாடகை (Taataka)யை அழித்து, மாரீசன் (Maareecha) போன்ற அரக்கர்களை அங்கிருந்து விரட்டிவிட்டுத் தம் பத்து நாள் வேள்வியைச் சிறப்பாகப் பூர்த்தி செய்தார் விசுவாமித்திரர்.

மன்னன் மக்களின் உதவிக்கு மகிழ்ந்த விசுவாமித்திரர், தமக்கு மகாதேவனால் அருளப்பெற்ற அஸ்திரங்களை அவர்களுக்கு உபதேசித்தார். பின்னர், விதேக மாமன்னரான ஜனகர் நடத்தும் யாகத்தைக் காண, அவர்களை மிதிலைக்கு அழைத்துச் சென்றார்.

யாகம் நடந்த அதே நேரத்தில், மன்னன் மகளான மைதிலிக்கு சுயம்வரமும் நடந்து கொண்டிருந்தது. மிதிலையில் பிறந்ததால், சீதா தேவிக்கு மைதிலி என்றொரு பெயரும் உண்டு. பல்லாண்டுகளுக்கு முன்னர் விதேக மன்னர் (ஜனகரின் முன்னோர்) ஒருவருக்கு வழங்கப்பெற்ற சிவதனுசை (Bow of Rudra) யார் வளைத்து நாண் பூட்டுகிறாரோ அவருக்கு மங்கை மாலையிடுவாள் என்று ஜனகர் அறிவித்திருந்தார்.

நூற்றுக்கணக்கான வீரர்களால் வண்டியில் வைத்து இழுத்துவரப்பெற்ற அந்த வில்லைக் காண தாசரதீயும் (தசரத குமாரன் - இராமன்) அழைக்கப்பெற்றான். விசுவாமித்திரரின் அனுமதியுடன், மாபெரும் அந்த வில்லை, மலர்மாலை ஒன்றை எடுப்பது போன்று எந்தச் சிரமமும் இல்லாமல் பெட்டியிலிருந்து எடுத்து இடக்கரத்தில் ஏந்தினான் இராமன். அடுத்த கணம் அவையில் இருந்தோர், வில் இரண்டாக முறிந்த ஓசையைத்தான் கேட்டனர்.

மகளுக்கு நல்ல வரன் கிடைத்திருப்பதைக் கண்டு மன்னன் மகிழ்ந்தான்; அயோத்தியிலிருந்து தசரதன் அழைத்துவரப் பெற்றான்.

ஜனகரின் வேள்வி நிறைவு பெற்றதும், நல்லதொரு நாளில், இராமன் சீதையையும், இளையவன் இலக்குமணன் இளையவள் ஊர்மிளை (Urmila)யையும், விசுவாமித்திரரின் ஆலோசனைக்கு இணங்கப் பரத-சத்ருக்கனர் (Bharata & Shatruhna), ஜனகரின் சகோதரர் குசத்வஜனின் (Kushadhvaja) குமாரிகளான மந்தவி சுருதகீர்த்தி (Mandavai & Srutakirti)யையும் மணந்தனர்.

இளந்தம்பதியருக்கு இரவுப்பொழுது இனிதே கழிந்து, பொழுது புலர்ந்தது. தம்பதியர் இருந்த அரண்மனைக்குச் சென்ற விசுவாமித்திரர், அரசர்களிடமும், அரசகுமாரர்களிடமும் பிரியாவிடை பெற்றார்.

பிரிமரிஷியாகி, திரிசங்கு சுவர்க்கத்தை உருவாக்கி, இராமன்-சீதை திருமணத்துக்குத் காரணகர்த்தாவாக இருந்த மனநிறைவோடு, பிரபஞ்சத் தோழரான பிரிம்மரிஷி கௌசிகர், இமயத்தை நோக்கிச் சென்றார், தம் இறுதி நாட்களை இறைநினைவுடன் கழிக்க.

"சோக (Soka)த்திலிருந்துதான் சுலோகம்(Sloka) பிறக்கிறது" என்று வால்மீகியிடம் பிரமதேவன் வாய்மொழிந்தருளியதே, இராமாயணம் எழுவதற்குக் காரணமாக அமைந்தது. அதனை நினைவுகூர்ந்து, இதனை நிறைவு செய்வோம்.

தழைநல்ல இன்பம் தலைப்பெய்து எங்கும் தழைக்கவே

(உலகம் முழுவதும் தழைத்த சிறந்த இன்பத்தைப் பெற்று இனிது வாழ்க - திருவாய்மொழி 9:5:10)

தொகுப்பிற்குத் துணைநின்ற நூல்கள்:

RAMAYANA - SHRI C. RAJAGOPALACHARI (50th Edition, 2011)
RAMAYANA - SMT. KAMALA SUBRAMANIAN (9th Edition, 2007)
Both published by Bharatiya Vidya Bhavan, Mumbai.

- தொகுப்பு: எல்லோரும் இனிது வாழப் பிரார்த்திக்கும் திருவி(ன்/ல்லாத) நாயகன்



உ
சிவ சிவ

# துவாதசாந்தம்

பேராசிரியர் டாக்டர் வை. இரத்தினசபாபதி

## முன்னுரை:

'துவாதசாந்தம்' என்ற தொடர் தத்துவ இயலிலும் இறையுணர்வியலிலும் மிகப்பெரிதும் பயின்றுவரும் ஒரு கலைச் சொல் தொடர், 'பன்னிரண்டு' என்பதே விளக்கம்.

பொதுவாக, இறைவனை ஒரு மனிதன் வணங்கும்போது, அவன் தன் இருகைகளையும் தலைமேல் கூப்பிக் கும்பிடும் முறையில் அமைத்துக்கொண்டு வழிபடுதல்.

மனிதனின் தலைக்குமேல் பன்னிரண்டு விரற் கிடைக்கு அப்பால் உள்ள வெளியில் இறைவன் திருவடி இருப்பதாகவும் அதனைத் தொட்டுக் கும்பிட்டு வணங்குவதாகவும் ஆன்றோரும் சான்றோரும் அருளாளர்களும் மரபு வழியாகக் கூறிவரும் வணக்க முறை.

மனிதன் தலைக்கும் இறைவன் திருவடிக்கும் இடையில் பன்னிரண்டு விரற்கிடை இடைவெளி இருப்பதாக விளக்கம் கூறுவது மரபு.

எல்லா உயிர்களும் தாம் தாம் எடுத்த உடம்பின்மேலே பன்னிரண்டு விரற்கிடை வரையில் இறைவன் திருவடி இருக்கும் எனவும் உயிர்கள் தம் இரண்டு கைகளையும் தூக்கி இணைத்து அத்திருவடிகளைப் பற்றும் முறையில் அமைத்துக் கும்பிட வேண்டும் என்றும் கூறுவது மரபாகக் கொள்ளப் பெறுகிறது.

இறைவன் திருவடிக்கும் நம் தலைக்கும் இடையில் பன்னிரண்டு விரற்கடை அளவில் ஒரு பெருவெளி இருப்பதாகவும் அதனைத் **துவாத சாந்தப் பெருவெளி** எனவும் கொள்ளுவது மரபு. இது மனிதனுக்கு மட்டுமன்று; உடம்பெடுத்த எல்லா உயிர்களுக்கும் பொது வரையறை என்று கொள்ளுதல் வேண்டும்.

எவ்வளவோ தூரத்திலிருந்து இறங்கிவந்த இறைவனின் திருவடிகள் பன்னிரண்டு விரற்கடை இடைவெளி விட்டு நின்று விடுவானேன்? என்பது ஒரு முக்கியமான வினா. இதற்குறிய விடையையும் விளக்கத்தையும் திருஞானசம்பந்தப் பெருமான் தம்முடைய திருப்பதிகங்களில் விளக்கிக் கூறுவதை எடுத்துக் காட்டுவதே இக்கட்டுரையின் பொருள்.

## தொடர்ப்பொருள்

துவா+தச+அந்தம் என்ற மூன்று சொற்களின் இணைப்பே துவாதசாந்தம். துவா-இரண்டு; தசம் பத்து; துவாதசாந்தம் பன்னிரண்டு என்பதை முடிவாகக் கொண்ட ஒன்று என்பது இத்தொடரின் பொருள்.

நம் தலைக்கும் இறைவன் திருவடிக்கும் கீழே பன்னிரண்டு விரற்கிடை இடைவெளி உள்ளது என்பதே இத்தொடரின் திரண்ட பொருள்.





## துவாதசாந்தப் பெருவெளித்தலம்

மரபு வழி நின்று மாண்புடைப் பெருமக்களாகிய சைவநன்மக்கள் தம் இருகைகளையும் தூக்கி நிறுத்தி கும்பிடுவது துவாதசாந்தைப் பெருவளியைக் கடந்து நின்ற இறைவன் திருவடிகளைப் பற்றிக் கும்பிடுவதே பொருள் என்று கூறுவர். இம்மரபு அனைத்துயிர்களுக்கும் பொது என்பதை உணர்ந்து தெளிதல் வேண்டும்.

நிலவுலகில் தென் தமிழகத்தில் உள்ள மதுரை யம்பதி மட்டுமே துவாதசாந்தப் பெருவெளித்தலம் என்று கொள்வது சைவமரபு. திருஞானசம்பந்தப் பெருமாள் தாம் அவதாரம் செய்தருளிய **சீகாழிப் பதியையே** துவாதசாந்தப் பெருவெளித்தலம் என்று வரையறைப் படுத்தி உரைத்தருளுகின்றார்.

பிரமபுரம் வேணுபுரம் புகலி
பெரு வெங்குரு நீர்ப்
பொருவில் திருத்தோணிபுரம் பூந்தராய்
சிரபுரம் முன்
வரு புறவம் சண்பை நகர்
வளர் காழி கொச்சை வயம்
பரவு திருக் கழுமலமாம் பன்னிரண்டு
திருப்பெயர்த்தால்"

என்பது சேக்கிழாரடிகள் அமைத்த திருத்தொண்டர் புராணத்தில், திருஞானசம்பந்தரின் புராணத்துப் பதினான்காம் பாடல் (1917)

சீர்காழிக்குப் பன்னிரண்டு பெயர் ஏன் வந்தது? என்ற கருத்தைச் சேக்கிழார் எடுத்துக்கூறி விளக்கவில்லை. பதினொன்றாந் திருமுறையில் நம்பியாண்டார் நம்பிகளால் இது ஓரளவு விளக்கப்பெறுகிறது.

சீர்காழிப் பதியானது பன்னிரண்டுமுறை கடல்கோளால் ஆழ்த்தப் பெற்றது. இறைவன் திருக்கயிலையிலிருந்து 'ஓம்' என்ற தோணியில் இறைவியுடன் அமர்ந்து வந்து காழித்தலத்தில் தங்கியிருந்தான். இதனால் தோணிபுரம் என்ற பெயர் வந்தது என்பது நம்பியாண்டார் நம்பிகள் திருவாக்கு.

## திருஎழுகூற்று இருக்கை

திருஞானசம்பந்தப்பெருமான் 'திருஎழுகூற்று இருக்கை' என்ற தலைப்பில் ஒரு பதிகம் அருளிச்செய்துள்ளார். 47 வரிகளைக் கொண்டுள்ள ஒரே நெடும் பாட்டானது பதிகம் என்ற பெயரைப் பெறுகிறது அதனைத் திருஞானசம்பந்தர்

"கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை"

என்று குறிப்பிட்டு, அதனுள் ஒரு மகா வாக்கியத்தையும் இணைத்துக் காட்டி அறிமுகப்படுத்துகின்றார்.

"இருமையின் ஒருமையும்
ஒருமையின் பெருமையும்"

என்பதே உலகம் ஒப்பும் "மறு இலா மறை" ஈன்று எடுத்துக்காட்டுகின்றார். உலகில் தோற்றம் கொண்டுள்ள அனைத்துப் பொருள்களும் "இருமையின் ஒருமை" என்ற மகா வாக்கியத்தால் உணர்த்தப்பெறும். எந்த ஒரு பொருளும் இருமையைத் தன்னகத்தே கொண்டு ஒருமை என்று நின்றுள்ள இலக்கை வரையறையால் உணரவும் உணர்த்தவும் ஆக நிற்பனவே என்பது திருஞானசம்பந்தரின் உள்ளுறைப் பொருள்.



நேர்நிலையும் எதிர்நிலையும் ஆகிய இருமையின் ஒட்டு என நின்று, ஒருமையால் உலகை ஆள்வதே திருஞானசம்பந்தப் பெருமான் அருளிய மறு இலா மறையின் உட்பொருள் என விளைங்கிக் கொள்ளுதல் வேண்டும்.

மேலும், திருஎழுகூற்று இருக்கைப் பத்கத்தினுள் காழிப்பதியின் பன்னிரண்டு பெயர்களை வரிசைப்படுத்திக் கூறி, சீர்காழிப் பதியே துவாதசாந்தப் பெரு வெளித்தலம் என்பதையும் எடுத்துக் காட்டியுள்ளார்.

பார்மண்டலத்திற் பன்னிருமுறை கடலால் மிதந்த ஊர் சீர்காழி என்று திருஞானசம்பந்தரால் சுட்டிக் காட்டப் பெறுதலின் சீர்காழியும் துவாத சாந்தப் பெருவெளித் தலம் என்று கொள்ளுதல் வேண்டும்.

பிரமபுரம் முதற்படியாக, கழுமலம் பன்னிரண்டாவது படியாக - மேனிலைப் படியாக நின்று ஆன்மாக்களுக்கு முறைமுறையே துவாதசாந்தப் பெருவெளித் தலத்தை நல்கிக் கொண்டிருக்கிறது என உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

பிரமபுரம் முதற்படியாக, கழுமலம் பன்னிரண்டாவது படியாக அமைந்து நிற்க, இறைவன் திருவடியை அடையும் ஆன்மாக்கள் முறையே பன்னிரண்டு படி அநுபவங்களையும் பெற்றுத் தேர்ந்து தெளிந்து இன்புறுதல் உண்டு என்பது பன்னிரண்டு திருப்படி - துவாசாந்தப் பெருவெளி அனுபவம் என்று தெளிதல் வேண்டும்.

**காழியான்**

துவாதசாந்தப் பெருவெளியில் மொத்தம் பன்னிரண்டு படிகள் உள என்பது மறுஇலா மறை. அதாவது திருஞானசம்பந்தர் அருளிய திரு எழுகூற்று இருக்கைப் பெருமறையின் உட்பொருள். துவாதசாந்தப் பெருவெளியில் படிநிலை இறையநுபவத்தில் திருஞானசம்பந்தர் தம்மைக் காழியான் என்று கூறிக் கொள்வதால் அவர் பத்தாவது படி இறையியலனுபவப் படியில் உள்ளார் என்பது தெளிவு.

சுந்தரர் பெருமான் சீர்காழிப் பதியை மிதியாமலேயே தம்மைக் கழுமல் அனுபவம் பெற்றவராகக் குறிப்பிடுகின்றார். கழுமலம் என்பதே இறுதிப்படி.

இக்காலத்தே சுவாமி ஐயப்பனுக்குப் பதினெட்டுப் படிகள் அமைத்து வணக்கம் நடத்தப் பெறுகிறது. படி அநுபவங்கள் எல்லாவற்றுக்கும் மூலமாக நின்ற முதன்மை அனுபவத்தைத் திருஞானசம்பந்தப் பெருமான் அமைத்துக் கொடுத்தார் என்று கொள்ளலாம்.

மூலாதாரம் முதலாக அக உடம்பினுள் அமையும் ஆறு ஆதார அனுபவங்களையும் கடந்த பின்னர் நிராதாரத் தலத்தே அமையும் துவாதசாந்தப் பெருவெளி அனுபவத்தையும் முறைப்படி இணைத்துக் கொண்டால் மொத்தம் பதினெட்டுப்படி அருள் அனுபவங்கள் அமையும் என்று கருதிக் கொள்ளலாம். நிராதாரப்படி அனுபவங்களை முறைப்படுத்தி அமைத்துக் காட்டியவரும் துவாதசாந்தப் பெருவெளி இறையநுபவங்களை எழிலுற - ஏற்றம் அமையுமாறு அமைத்துக் காட்டியவரும் திருஞானசம்பந்தரே என அமைத்துக் காட்டி, இறையனுபவப்படி நிலையை ஒழுங்குற அமைத்துக் கண்டு, ஏனையோருக்கும் முறைப்படுத்திக் காட்டுதல் வேண்டும்.

**முடிவுரை**

அனைத்து ஆன்மார்க்களும் இறுதியில் இறைவன் திருவடி அடைதல் என்பது பொது. இறைவன் திருவடிப் பேற்றினை எய்தும் ஆன்மாக்கள் ஆதார அனுபவம் ஆறும் நிராதார அனுபவம் பன்னிரண்டு என இரு கூற்றுப் பதினெட்டுப் படி அனுபவகளை முறை முறையே பெற்றுத் தேர்ந்து மீதானத்து உயர் படியில் நிற்கும். அதையே துவாதசாந்தப் பெருவெளி அனுபவம் எனச் சைவமரபு கொள்ளுகிறது.

ஓம் ஸ்ரீகுருப்யோ நம:

# ஆலய வழிபாடு

சிவாகம பாஸ்கர
**சிவஸ்ரீ க. கார்த்திகேய சிவம்**
*சிவாகம அத்யாபகர், ஸ்ரீ ஸ்கந்தகுரு வித்யாலயம் திருப்பரங்குன்றம்*
*(தேனி, வேதபுரி, ஆதிகுரு ஸ்ரீப்ரஜ்ஞா தக்ஷிணாமூர்த்தி வித்யாபீடத்தில் கடந்த ஜூன் மாதம் (2011) நடைபெற்ற பெருந்திருவிழாவில் ஆற்றிய உரையின் தொகுப்பு)*

நம்முடைய ஸநாதந தர்மம் மிக உத்தமமானதாகும். நம் முன்னோர்கள் சின்ன விஷயங்களைக் கூட அலசி, ஆராய்ந்து, இதற்குமேல் ஒரு நிலையைக் கண்டுபிடிக்க இயலாத நிலையில் தர்மங்களையெல்லாம் வகுத்துக் கொடுத்திருக்கிறார்கள்.

ஒரு நல்ல கருத்து யுக்திக்குப் பொருத்தமாகக் கூறப்பட்டால், ஒரு குழந்தையின் வாயிலிருந்து வந்தாலும் சரி, கிளியினுடைய வாயிலிருந்து வந்தாலும் சரி, அதனை ஏற்றுக்கொள்ளவேண்டும்

அதே சமயத்தில், எது நமது பகுத்தறிகின்ற தன்மைக்கு முரணானவாறு சொல்லப் படுகின்றதோ, அது வாக்குக்கெல்லாம் அதிபதியாகிய தேவகுருவாகிய ப்ருஹஸ்பதியின் திருவாக்கிலிருந்து வந்தாலும் அதனை ஏற்றுக்கொள்ளக்கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

யுக்தியுக்தம் வசோக்ராஹ்யம் பாலாதபி ஶுகாதபி।
அயுக்தியுக்தம் அக்ராஹ்யம் வச: வாசஸ்பதே: அபி।।

இப்படிப்பட்ட கருத்து உள்ள ஸம்ப்ரதாயமானது = தர்மமானது பகுத்தறிவிற்கு அப்பாற்பட்டதாக இருக்குமா?

நம் முன்னோர்கள் மிக நுண்ணிய விஷயங்களிலிருந்து, மிக விரிவான விஷயங்கள் வரை, இப்படித்தான் வாழ வேண்டும் என்ற ஒரு வரைமுறையை வகுத்து, அந்த வழியில் சென்றால், நீங்கள் உங்கள் இலக்கை அடையலாம் என்பதை மிகவும் தெளிவாகக் காட்டியுள்ளார்கள்.

வாழ்வில் நம்முடைய இலக்கு என்ன என்பதைச் சிறுவயதிலேயே ஒருவர் அறிந்திருப்பதில்லை. அதற்குப் பல்வேறு காரணங்கள் இருக்கின்றன. நமக்கு இஷ்டம் இருந்தாலும்கூட, நாம் வாழ்கின்ற காலமும், நாம் இருக்கின்ற இடமும், நாம் அதனை அறிந்துகொள்வதற்கு உரிய சூழ்நிலையை அமைத்துத்தரும் விதமாக இல்லை என்பது ஒருபுறம் இருந்தாலும், ஒவ்வொரு தனி மனிதனுக்கும் தன்னுடைய வாழ்க்கையின் குறிக்கோள் என்ன என்பது, பதினைந்திலிருந்து பதினெட்டு வயதிற்குள் தெளிவாக இருக்க வேண்டும். அந்தத் தெளிவு இல்லையென்றால், எப்பேர்ப்பட்ட படிப்பை ஒருவர் படித்தாலும், அது பயனற்றதாகவே அமையும்.

அதனால்தான் எத்தனையோ பேர் கோடீச்வரர்களாக இருந்தாலும், பெயருக்குப் பின்னால் இருபது பட்டங்கள் போட்டுக் கொள்கிறவர்களாக இருந்தாலும், வாழ்வில் தெளிவில்லாமல், மனதில் திருப்தியில்லாமல் வாழ்வதைப் பார்க்கிறோம். கோலனாய்க் கழிந்தநாளும் குறிக்கோள் இல்லாது கெட்டேன் என்கிறார் நாவுக்கரச பெருமான். வாழ்வில் நம் குறிக்கோள் தெளிவாகத் தெரியாதவரையில், நாம் என்ன செய்ய வேண்டும் என்பது நமக்குத் தெரியவே தெரியாது.

வாழ்க்கையில், உடலை நலமாக வைத்துக்கொள்வதற்கு, அறிவியல் நமக்குப் பலவிதமான அறிவுரைகளைத் தருகிறது; என்றாலும், மருத்துவமனைகளின் எண்ணிக்கை நாளுக்கு நாள் கூடிக்கொண்டே போகிறது. எது நமக்கு அறிவுறுத்தி, இதைச் செய்ய வேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கின்றதோ, அதை நாம் செய்வதில்லை.



அதைச் செய்ய வேண்டும் என்று நமக்கு நன்றாகத் தெரிந்திருக்கும் சிலவற்றைக்கூட, சமயத்தில் நாம் செய்யாமல் விட்டுவிடுகிறோம். அப்படிப்பட்ட விஷயங்களில் மிகவும் முக்கியமாக இருப்பது வழிபாடு.

**போற்றி என் வாழ்முதலாகிய பொருளே** என்றார் மணிவாசகப் பெருமான். பிற எல்லாவற்றையும்விட, வாழ்க்கையின் முதல் பொருளாக, நாம் பிறந்தது முதல், உடலை விட்டு உயிர் பிரியும்வரை, நம்முடன் ஒன்றி இருக்கக்கூடியவர் இறைவன்.

இறைவனையே நம் வாழ்வின் முதல் பொருளாக வேண்டும், மற்றவை அனைத்தும் இரண்டாவதாக மாற வேண்டும். இன்றைய காலகட்டத்தில், ஒவ்வொரு நாளும், காலை எழுந்ததுமுதல், இரவு படுக்கச்செல்லும் வரை, பல்வேறு அலுவல்களை நாம் வைத்துக்கொண்டிருக்கிறோம்.

மிக அவசரமான காலம். ஏதேனும் வேலை காரணமாக வெளியில் செல்ல வேண்டியிருந்தால், நாம் தவிர்க்க நினைப்பவற்றில் முதலிடத்தைப் பிடிப்பது வழிபாடாகத்தான் இருக்கிறது.

பேருந்துநிலையம், ரயில் நிலையம், விமான நிலையம், மருத்துவமனை முதலிய எந்த இடங்களுக்குப் போவதாக இருந்தாலும் சரி, பூஜையை மட்டும் பிறகு செய்து கொள்ளலாமே என்றுதான் பலர் நினைக்கிறார்கள்.

ஸ்வாமி எப்பொழுதும் இங்குதானே இருக்கிறார், நாம்தான் அங்குமிங்கும் சென்று கொண்டிருக்கிறோம். வீட்டிலும், கோயிலிலும் அவர் அப்படியேதானே இருக்கிறார்! நாம் சென்று அடைகின்ற ஊரிலும் கோயில் இருக்கும், அங்கும் வீடு இருக்கும், அங்கு சென்று வழிபட்டுக்கொள்ளலாம் என்று ஸமரஸம் செய்துகொள்கிறோம்.

வாழ்க்கையின் முதல்பொருளாக விளங்குகின்ற இறைவனுக்கு நம் வாழ்க்கையையே அர்ப்பணிக்க வேண்டும். அதற்காக, பொருளீட்டக்கூடாது, வாழ்க்கையை வளமாக வைத்துக்கொள்ளக்கூடாது என்று பொருளல்ல.

ஒவ்வொரு தனிமனிதனுக்கும் தன் சக்திக்கு எற்றவாறு வசதிகளைப் பெருக்கிக்கொள்ளக்கூடிய ஆற்றல் இருக்கிறது. தர்மமாக இருக்கின்றபக்ஷத்தில், உலகில் மிகவும் விலை உயர்ந்த பொருளை வாங்குவதுகூட தவறே இல்லை. அதர்மமாக இருக்கக்கூடாது என்றுதான் சாஸ்த்ரம் கூறுகிறதே தவிர, தர்மமான முறையில் எப்பேர்ப்பட்ட பொருளையும் நாம் வாங்கி வைத்துக்கொள்ளலாம். அது தர்மத்திற்கு எந்தவகையிலும் முரண்படாதவகையில் இருக்க வேண்டும்.

**ஈதல் அறம், தீவியினையின்றி ஈட்டல் பொருள் என்றார் ஔவையார்.** ஒரு பொருளை ஈட்டும்பொழுதும் தர்மமான முறையில் அதனை ஸம்பாதிக்க வேண்டும், செலவழிக்கும்போதும், அறவழியில்தான் செலவழிக்க வேண்டும்.

தர்மமான முறையில் பொருளைச் செலவழிக்கிறோமா என்றுதான் பலரும் கவனிக்கிறார்கள், நம்முடைய வருவாய் வருகின்ற வழியை ஆராய்ந்து பார்ப்பதில்லை.

**சௌசாநாமபி ஸர்வேஷாம் அர்த்தசௌசம் விசிஷ்யதே** என்கிறது மநு ஸ்ம்ருதி

பிற பொருட்களைக் காட்டிலும், நாம் ஈட்டுகின்ற பொருள் மிகவும் தூய்மையானதாக இருக்க வேண்டும்.

நம் அனைத்து விதமான செயல்களும் பொருளைக் கொண்டுதான் நடை பெறுகின்றன. ஈட்டுகின்ற பொருள் தூய்மையானதாக இல்லை என்று சொன்னால், நாம் செய்கின்ற எந்தச்செயலும் தூய்மையானதாக இருக்காது.

நாம் வாழ்க்கையை நன்றாக வாழ வேண்டும் என்பதற்காக, சாஸ்த்ரங்கள் மிகச் சிறிய

விஷயங்களில் கூட சுட்டிக் காட்டுகிறது. சாஸ்த்ரத்திற்கு நம்மை பயமுறுத்த வேண்டும் என்றோ, படுகுழியில் தள்ள வேண்டும் என்றோ எண்ணம் கிடையாது. நாம் நன்றாக வாழ வேண்டும் என்பதற்காகத்தான் சாஸ்த்ரங்கள் நெறிமுறைகளை வகுத்துக் கொடுத்திருக்கின்றன.

வெளியூர்களுக்குப் பயணம் செய்யும்பொழுது, பெரும்பாலும் நாற்சந்தி அல்லது முற்சந்திகளில், பெயர் பலகை வைக்கப்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். மதுரையிலிருந்து தேனிக்கு வருவது ஒருபுறமும், மானாமதுரைக்குச் செல்வதற்கு மற்றொருபுறமும், திருச்செந்தூருக்குச் செல்வதற்கு வேறொருபுறமும் அம்புக்குறி போட்டிருக்கும். ஒரே சாலையென்றால் அங்கு அம்புக்குறியுடன் பெயர்ப்பலகை இருக்காது.

நாற்சந்திக்கு வந்தவுடன், எந்தப்புறம் திரும்ப வேண்டும் என்ற சந்தேகம் வரும்பொழுது, அம்புக்குறியிட்ட பெயர்ப்பலகை நமக்கு உதவுவதைப்போல, வாழ்க்கையில் நாம் நமது செயல்களை எவ்வாறு செய்ய வேண்டும், பிறரிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்ற சந்தேகம் எழும்போதெல்லாம், அந்த சந்தேகத்தை நீக்கி, நாம் அடைய வேண்டிய இலக்கை அடைவதற்கான குறியீட்டுச் சின்னங்களாக சாஸ்த்ரங்கள் விளங்குகின்றன.

பெரும்பாலும், நாற்சந்திகளில்தான், எங்கு திரும்புவது என்று நமக்கு சந்தேகம் வரும். ஆனால் வாழ்க்கையில், ஒரு கைத்தொலைபேசி வாங்குவதில் தொடங்கி, எல்லாப் பொருட்களிலும், தேர்ந்தெடுக்கும் வாய்ப்பு அதிகமாக இருப்பதால், எல்லாவற்றிலும் சந்தேகம் எழுந்தவண்ணம் இருக்கிறது.

சாஸ்த்ரங்கள் நாம் எல்லாவற்றையும் முறையாகப் பெற்று, முறையாக அனுபவித்து, முறையாக நம் வாழ்வை நிறைவு செய்ய உதவக்கூடிய எல்லா விஷயங்களையும் கூறுகின்றன.

ஆலயங்களை எவ்வாறு நிர்மாணம் செய்ய வேண்டும், எந்தெந்த இடங்களில் எந்தெந்த தேவதைகளை ப்ரதிஷ்டை செய்ய வேண்டும், பூமியில் எந்தவிதமான மண் இருக்கின்ற இடத்தில் ஆலயத்தை எழுப்ப வேண்டும், ஆலயத்தை எழுப்புவதற்கு முன்னால் எந்தவிதமான க்ரியைகளைச் செய்து, அந்த இடத்தை ஆலயம் கட்டுவதற்குரிய தகுதி படைத்ததாக ஆக்க வேண்டும் - என்பதுபோன்ற பல விஷயங்கள் அக்குவேறு அணிவேராக சாஸ்த்ரங்களில் பிரித்துக் கூறப்பட்டுள்ளன.

ஒரு சாஸ்த்ரத்தைப் படித்து முடிப்பதற்குக் கூட நமக்கு அயுட்காலம் போதாது. சைவ அகமங்களின் ஸாரமாக விளங்கக்கூடிய நூல்களின் தொகையை, இவற்றை இயற்றிய ஆசார்ய பெருமக்களின் பெயர்களைக்கூட நம்மால் தெரிந்துகொள்ள முடியவில்லை.

முற்காலங்களில் மின்வசதி இல்லை, இன்று இருக்கக்கூடிய நவீன ஸாதனங்கள் எதுவும் இல்லை, எழுத்துவேலையைப் பகலில் மட்டும்தான் செய்ய முடியும்.

அப்படிப்பட்ட காலங்களில், நம்மால் எண்ணிக்கூடப் பார்க்க முடியாத,
கோடிக்கணக்கான நூல்களை ஆசார்ய பெருமக்கள் செய்திருக்கிறார்கள்.

சிவாகமங்கள் ஆலயம் தொடர்பான அனைத்து விஷயங்களையும் தெளிவாக விளக்குகின்றன. அது மட்டுமல்லாமல், ஒரு தனிமனிதனுக்குத் தேவையான அனைத்து விஷயங்களையும் தெளிவாக விளக்குகின்றன.

ஆலய வழிபாட்டு முறையில், ஒவ்வொரு ஆகமங்களும் ஒவ்வொருவிதமாகச் சிறப்பித்துக் கூறுகின்றன. அவற்றிலிருந்து ஆலய வழிபாடு என்பது ஐந்து அங்கங்களுடன் கூடியது என்று தெரிகிறது.

ஆலய வழிபாட்டு நெறிகளை நாம் முறையாகப் பின்பற்றினால், நம் மனதில் சொல்லொண்ணாத ஆனந்தம் ஏற்படும். அந்த ஆனந்தம் நம் மனதில் ஏற்பட்டுவிட்டால், நமக்குத் துன்பங்கள்



ஏற்படாது என்பது பொருளல்ல. எப்பேர்ப்பட்ட துன்பங்கள் வந்தாலும், அதனைத் தாங்கிக்கொள்ளும் அளவு நம்முடைய மனம் மிக வலிமை படைத்ததாக ஆகிவிடும்.

நமக்கு ஏற்படுகின்ற துன்பங்கள் அனைத்துக்கும் காரணம், நாம் செய்த முன்வினை என்று சாஸ்த்ரங்கள் அறுதியிட்டுக் கூறுகின்றன. நான் முற்பிறவியில் செய்ததற்கு இப்பொழுது ஏன் பலன் கொடுக்கிறார்? இப்பொழுது செய்த கர்மங்களுக்கு இப்பொழுதே பலன் அளித்தால் நன்றாக இருக்குமே என்று சிலர் நினைக்கிறார்கள். ஆனால் இந்தப் பிறவியில் நாம் செய்த பாவத்திற்கே இன்னும் இருபது பிறவிகளில் பகவான் பலனளிக்க வேண்டியிருக்கிறது!

**என்னிலும் உன்னிலும் உறையும் ஈசன் ஈயெறும்பு உடலிலும் உறைகின்றான் தன்னுயிர்போலே மண்ணுயிர் காப்பது தர்மம் தர்மம் தர்மமடா** என்று ஔவையார் பாடுகிறார்.

எறும்புகள் சாப்பிட வேண்டும் என்பதற்காகக் கோலம் போட்ட காலம் ஒன்று உண்டு. எறும்புகள் வரக்கூடாது என்பதற்காக எறும்புப்பொடி போடுகின்ற காலம் இது! இது மிகத் தவறான செயல். எறும்பு போன்ற சிற்றுயிர்கள், எங்கு நம்முடைய நடமாட்டம் அதிகமாக இல்லையோ, எங்கு அவற்றுக்குரிய பொருட்களை நாம் சிதறவிடுகின்றோமோ, அங்குதான் வருகின்றன. நன்கு தூய்மை செய்த இடத்திற்கு எறும்புகள் வருவதேயில்லை.

ஒரு சிறுதுளி சர்க்கரையைக் கீழே சிந்திவிட்டால், அங்கு எறும்பு வருகிறது. அதனை வரவழைத்துவிட்டு, அதனைக் கொல்வது மஹாபாவமாகும். இப்படி நாம் செய்கின்ற பாவங்களின் கூட்டம் மிக அதிகமாக இருக்கிறது. இதுபோன்ற சின்னச் சின்ன விஷயங்களை, நாம் பெரிதாகப் பொருட்படுத்துவதில்லை.

எறும்புப்புற்று இருக்கிறது, அதில் எறும்பு இருக்கிறது என்று நமக்கு நன்றாகத் தெரியும். ஆனால் அந்த உயிரை நாம் மதிப்பதில்லை. அவசரமாக கை கழுவ வேண்டுமென்றால், அந்தப் புற்றின்மீதே கைகளைக் கழுவிவிடுகிறோம்.

(Washbasin) முதலிய கை கழுவுமிடங்களில் கரப்பான்பூச்சிகள் இருக்கின்றன. அந்த இடத்தைத் தூய்மையாக வைத்துக்கொள்ள நாம் முயற்சிப்பதில்லை. கரப்பான்பூச்சிகள் வந்த பிறகு, அவற்றை அழிப்பதற்கு ஒரு மருந்தை உபயோகிக்கிறோம். அந்த இடம் தூய்மையாக இருந்தால், அந்தப் பூச்சிகள் அங்கு வராது. அவற்றை வரவழைத்துக் கொல்வது, பாவச் செயலாகும். இப்படி நாம் செய்கின்ற பல்வேறு பாவக்குவியல்கள் மிக அதிகமாக இருக்கின்றன.

**கடவுள் இருக்கிறார் என்றால், சுனாமி ஏன் ஏற்பட்டது?** என்று ஒருவர் கேள்வி கேட்டார். கடவுள் இருப்பதால்தான் சுனாமி ஏற்பட்டது என்று பதில் கூறினேன்.
எறும்புப் புற்றின்மீது நீரை உற்றி, நாம் எறும்புகளுக்கு சுனாமியை வரவழைத்துவிடுகிறோம் அல்லவா?

இறைவன் நமக்கு இந்த உடலை அளித்திருக்கிறார். இந்த உடலின் மூலம் மேலும் மேலும் புண்யங்களைச் செய்து, பாவங்களை அழித்துப் பிறவாநிலை எய்த வேண்டுமே தவிர, மீண்டும் மீண்டும் பிறவிப்பிணிக்குள் சிக்கி, பிறந்து பிறந்து இறந்து கொண்டிருப்பது மிகவும் மடத்தனமான ஒன்று.

நாம் அனைவரும் ஆலயங்களுக்குச் செல்கிறோம். ஆலயத்திற்குச் செல்கின்றபோது, எந்த நெறிமுறைகளுடன் வழிபட்டால், அந்த வழிபாடு பயனுடையதாக ஆகுமோ, எப்படிப்பட்ட நெறிமுறைகளை நாம் அறிந்து, அதன்படி நடக்க வேண்டும். எந்த ஒரு செயலும் பயனைத் தரவல்லதாக இருந்தால்தான், அதனை நாம் விரும்புவோம்.

ஆலய வழிபாடு பயனைத் தருகின்றதா, தரவில்லையா என்பது நமக்குத் தெரியாது. ஆலயத்திற்குச் சென்று வழிபட்டபிறகு ஏற்படும் மன திருப்தியைப் பலன் என்று கருதுகிறோம். அதுவும் ஒரு

வகைப்பலன்தான்.

நாம் செய்கின்ற பாவங்களிலிருந்து நம்மை விடுவித்து, அதிகமான புண்யங்களை வழங்கக்கூடிய பல்வேறு க்ரியைகளுள் முக்கியமானது ஆலய வழிபாடு. பல்வேறுவிதமான க்ரியைகளை வேத, சாஸ்த்ரங்களில் கூறப்பட்டபடி நம்மால் செய்ய இயலாது. ஆனால் ஆலய வழிபாடு என்பது அப்படி அல்ல.

பக்தி என்ற ஒரு உணர்வு மட்டும் நம்மிடம் இருந்தால் போதும். சிறு சிறு விதிமுறைகளைக் கடைப்பிடித்தாலே போதும், அது நம் பாவக்குவியல்களைச் சுட்டுச் சாம்பலாக்கிவிடும். நமக்கு ஏற்படுகின்ற துன்பங்களுக்கெல்லாம் காரணம், நாம் செய்த பாவம்தானே! இந்த பாவத்தை எப்படி அழிப்பது?

**அக்கினிக் குஞ்சொன்று கண்டேன் - அதனை**
**அங்கோர் காட்டிடை பொந்திடை வைத்தேன்**
**வெந்து தணிந்தது காடு - தழல்**
**வீரத்திற் குஞ்சென்று மூப்பென்று முண்டோ?**
**தத்தரிகட தத்தரிகட தித்தோம்**
என்று மஹாகவி பாரதியார் பாடுகிறார்.

ஒரு பெரிய காட்டை அழிப்பதற்கு, இரண்டாயிரம் கிலோ கூடத்தை வைத்து எரிக்கவேண்டும் என்று அவசியமில்லை. ஒரு லிட்டர் மண்ணெண்ணெய் போதும், அது எரிந்து சாம்பலாகிவிடும்.

பாவக் குவியல்களாகிய காட்டிலிருந்து விடுபடுவதற்கு நமக்கு முக்கியமாகத் தேவைப்படுவது ஞானம். எல்லாவிதமான பாவங்களிலிருந்தும் விடுபடுவதற்கு ஒரே வழி ஞானத்தை அடைவதே ஆகும். **பாப ஆரண்ய தவாநலா அஜ்ஞாந த்வாந்த தீபிகா** என்றெல்லாம் ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் கூறுகிறது.

இருண்ட காட்டில் ஒரு விளக்கை ஏற்றி வைத்தால், அது எப்படி அங்கிருக்கக்கூடிய அனைத்து இருளையும் நீக்கி ஒளியைக் கொடுக்கிறதோ, அதுபோல, அறியாமையாகிய காட்டில் உழலுகின்ற நமக்கு, தீபமாக விளங்குபவள் தாய். பாவமாகிய காட்டை முழுவதும் எரித்துச் சாம்பலாக்குபவள் அம்பிகை.

அப்படிப்பட்ட ஞானத்தைப் பெறுவதற்குரிய தகுதியை நமக்கு அளிக்க வல்லது ஆலய வழிபாடு. ஞானத்தைப் பெறுவதற்குத் தகுதி வேண்டும். அந்தத் தகுதியைப் பெறுவதற்கும் ஒரு தகுதி வேண்டும். ஞானத்தைப் பெற வேண்டும் என்ற இச்சை உடலின் ஒவ்வொரு உரோமக்கால்களிலும் ததும்பிக் கொண்டிருக்க வேண்டும். அந்த ஆசை உள்ளம் முழுவதும் வேரூன்றி இருக்க வேண்டும். அந்த ஆசை நமக்கு இருக்கும்பக்ஷத்தில், ஆலய வழிபாட்டை நாம் முறையாகச் செய்கின்றபோது, எங்கும் நிறைந்திருக்கின்ற இறைவனின் பேரருளாற்றலை பெற்றுக்கொள்ள தகுதி உடையதாக நம் உடலும் உள்ளமும் மாறுகின்றன.

ஒரு மின்விளக்கு இருக்கிறது, மின்சாரமும் இருக்கிறது. இரண்டிற்கும் கம்பியின்மூலம் தொடர்பு ஏற்பட்டால்தான் விளக்கு எரியும். அதுபோல, இறைவனுக்கும் நமக்கும் ஒரு தொடர்பு ஏற்பட வேண்டும். அதற்கு முக்கியமாகத் தேவைப்படுவது ஆலய வழிபாடு.

ஆலய வழிபாட்டின் முதல் அங்கம் தர்சனம்.

ஆலயத்திற்குள் நுழைந்தவுடன், ஆலயத்தினுள் எழுந்தருளியிருக்கும் பெருமானை முழுமையாகப் பார்க்க வேண்டும். கரங்களில் என்னென்ன ஆயுதங்கள் தாங்கியிருக்கிறார், முகம் எப்படி இருக்கிறது? ஜடாமுடி எப்படி இருக்கிறது? எந்தவிதமான வஸ்த்ரம் சாற்றப்பட்டிருக்கிறது? எந்தவிதமான ஆபரணங்களை அணிந்திருக்கிறார்? என்றெல்லாம் கண்குளிர பார்க்க வேண்டும். அந்த ஆலய தரிசனம் முடிந்த பிறகு, கண்களை மூடினால், அந்த உருவம் நம் கண்களில் தெரிய



வேண்டும். எப்படி தரிசனம் செய்தால்தான், நாம் தரிசனம் செய்திருக்கிறோம் என்று பொருள்.

நம் கலாசாரத்தில், ஒவ்வொரு தேவதைக்கும் பல்வேறுவிதமான கதைகள் உண்டு. அந்தக் கதைகள் முன்னமேயே நம் மனதில் பதிந்திருந்தன என்றால், உருவத்தைப் பார்க்கும்பொழுது, அந்த அறிவோடு பார்ப்போம்.

வளர்ந்துவரும் சிறுகுழந்தைக்கு விநாயகர், முருகன், தக்ஷிணாமூர்த்தி என்றால் யார் என்று தெரியாது. பெற்றோர்கள் அந்தக் கதைகளைச் சொல்லிக் கொடுத்திருந்தால், ஆலயத்திற்குள் சென்றவுடன், அந்தக் குழந்தை தானாகவே, அம்மா, இது விநாயகர் என்று சொல்லும். நாமாக அழைத்துச் சென்று இது விநாயகர் என்று அறிமுகப்படுத்தக் கூடாது. வீட்டில் கதை சொல்லப்பட்டிருக்க வேண்டும். ஆலயத்திற்குச் சென்றவுடன் குழந்தை தானாக அது விநாயகர் என்று சொல்ல வேண்டும். அந்த அளவிற்கு மனதில் அந்த உருவம் பதிந்திருக்க வேண்டும். அது தர்சனம்.

இரண்டாவதாக, ஸ்துதி.

பெருமானுக்கென்று நம் முன்னோர்களால் இயற்றப்பட்டிருக்கும் லக்ஷக்கணக்கான ச்லோகங்கள், பாடல்கள் அனைத்து மொழிகளிலும் இருக்கின்றன. பெருமானுடைய ஆலயத்திற்கு வந்தவுடனேயே, நமக்கு ஏற்பட்டிருக்கிற இன்னல்கள் நீங்க வேண்டும் என்று வழிபட்டாலும் கூட, வழிபடும்போது, நம்மால் இயன்ற வரையிலும் ஒவ்வொரு நாளும், பலவிதமான ச்லோகங்களால் இறைவனுடைய பெருமையை போற்றிப் பாட வேண்டும். அதற்கு ஸ்துதி என்று பெயர்.

இந்த மாதிரி கோயிலில் வழிபாடு செய்யவில்லை என்றால், நம் மனம் வெகுநேரம் இறைவனிடத்தில் லயித்து இருக்காது.

**சரணகமலாலயத்தை அரைநிமிஷநேரமட்டில்**
**தவமுறையில் தியானம் வைக்க அறியாத** என்கிறார் அருணகிரிநாதர்.

அருணகிரிநாதருக்கே அரைநிமிஷம் கஷ்டமாக இருந்தது என்று கூறினால், நமக்கெல்லாம் அரைநொடி கூட கஷ்டம். எப்பொழுது எதைச் சிந்திக்கக் கூடாதோ, அப்பொழுது அதைச் சிந்திக்கக்கூடியது மனம். கோயிலுக்கு வந்து எதை நினைக்கக்கூடாதோ, அதை நினைக்கும்.

இப்படிப்பட்ட வகையில் முறையாக நாம் வழிபாட்டைச் செய்தால், நமது மனம் குறுகிய காலத்திலேயே ஒடுங்கக்கூடிய ஆற்றல் பெற்றுவிடும். கவனித்துப் பார்த்தால், ஆலயத்திற்குள் நுழைந்தவுடனேயே, ஆலயத்திற்குள் இருக்கின்ற எல்லாவிதமான பொருட்களும், ஆன்மிகம் தொடர்புடையதாகவே இருக்கும்.

ஒவ்வொரு பொருளையும் நாம் பார்க்கத் துவங்கும்போது, நமது மனம் ஆன்மிகத்திலிருந்து ஒருதுளிகூட விலகாதவரையில் அற்புதமாக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

கதவைப் பார்த்தாலும், தூணைப் பார்த்தாலும், விக்ரஹங்களைப் பார்த்தாலும், விமானத்தைப் பார்த்தாலும், கோபுரத்தைப் பார்த்தாலும், எல்லா இடங்களிலும் இறைவனுடன் தொடர்புபடுத்தப்பட்ட நிகழ்வுகள் மட்டுமே பதிந்திருக்கும். எனவே, நம்மை அறியாமலேயே நாம் இறைவனைச் சார்ந்து வாழ்வதற்கான ஒரு பக்குவத்தை நம் முன்னோர்கள் ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறார்கள்.

இறைவனுடைய பெருமையைப் போற்றிப் பாடுகின்ற பாடல்களை அனுதினமும் பாடிக் கொண்டேயிருக்க வேண்டும்.





இறைவன் உருவமற்றவர் என்பதை நம் முன்னோர்கள் நன்கு உணர்ந்திருந்தும், நம் போன்றவர்கள் பாடிப் பயனடைய வேண்டும் என்பதற்காக, தலையே நீ வணங்காய், கண்காள் காண்மின்களோ, செவிகாள் கேள்மின்களோ, மூக்கே நீ முரலாய், வாயே வாழ்த்துகண்டாய், நெஞ்சே நீ நினையாய், கால்களால் பயன் ஏன்? இப்படி எல்லாவிதமான அங்கங்களையும் இறைவழிபாட்டிற்காகவே பயன்பட வேண்டும் என்று போற்றிப் பாடியிருக்கிறார்கள்.

இறைவனுடைய அப்பேரழகை நாம் கண்டு களிக்க வேண்டும் என்பதற்காக அற்புதமான முறையில் இயற்றப்பட்ட கோடிக்கணக்கான பாடல்கள் இருக்கின்றன. நம் சக்திக்கு ஏற்றவாறு ஒரு சில பாடல்களையாவது நாம் பாடித் துதிக்க வேண்டும்.

மூன்றாவதாக ப்ரதக்ஷிணம்

இறைவனுடைய ஆலயத்தை, ஸந்நிதியை முறையாக வலம் வர வேண்டும். ஆகமங்களில் அவற்றுக்கான விதிமுறைகள் கூறப்பட்டிருக்கின்றன.

இறைவன் நமக்கு எதைக் கொடுத்தாலும், ஏற்றுக்கொள்ளக்கூடிய பக்குவம் நமக்கு இருந்தது என்றால், நாம் எப்படி வேண்டுமானாலும் வழிபாடு செய்யலாம். கண்ணப்ப நாயனார் காலால் பெருமானை மிதித்தார், அவர் பெருமானிடமிருந்து எதையும் எதிர்பார்க்கவில்லை. நாம் இறைவனிடமிருந்து பெறுவதற்கு வேண்டி ஒரு பெரிய பட்டியலே வைத்திருக்கிறோம்.

குழந்தை பிறப்பதில் தொடங்கி, பையனுக்குக் கல்லூரியில் இடம் கிடைப்பது வரை, பிறகு அவனுக்குத் திருமணமாகி குழந்தை பிறந்து, அந்தக் குழந்தைக்குத் திருமணமாகி குழந்தை பிறந்து என எதிர்பார்ப்புகள் முடிவின்றி சென்றுகொண்டிருக்கின்றன.

எதிர்பார்ப்புகளைக் கொண்டு வழிபடுகிறவர்கள், வழிபாட்டை எப்படிச் சொல்லியிருக்கிறதோ, அப்படித்தான் செய்ய வேண்டும்.

**ஆஸந்நப்ரஸவா நாரி தைலபூர்ணம் யதாகடம்।**
**பதாத் பதாந்தரம் கச்சேத் கரௌ சலந வர்ஜிதௌ।।**
**ஸ்துதி: வாசா ஹ்ருதி த்யாநம் சதுரங்கம் ப்ரதக்ஷிணம்।।**

நாளைக்கு அல்லது இன்று இரவிற்குள் ப்ரஸவம் நிகழக்கூடிய நிலையில் இருக்கக்கூடிய ஒரு பெண், எண்ணெயால் நிரப்பப்பட்ட குடத்தை எடுத்துக்கொண்டு நடந்தால், அவள் எவ்வளவு கவனமாக நடப்பாளோ அப்படி மெல்ல ப்ரதக்ஷிணம் செய்ய வேண்டும்.

எண்ணெய் குடம் கீழே விழுந்தால் கூட பரவாயில்லை, வயிற்றில் இருக்கின்ற குழந்தை நல்லபடியாக வெளியே வர வேண்டும் என்ற ஆவல் அந்தப் பெண்ணுக்கு அளவிட முடியாமல் இருக்கும். அவளைப்போல கவனமாக, அடிமேல் அடிவைத்து ப்ரதக்ஷிணம் செய்ய வேண்டும். ப்ரதக்ஷிணம் செய்யும்போது கைகள் ஆடக்கூடாது. கைகள் முன்னும் பின்னும் செல்லக்கூடாது. கைகளைக் கோர்த்துக்கொண்டிருக்க வேண்டும் அல்லது தலைமேல் இருக்க வேண்டும்.

ப்ரதக்ஷிணம் செய்யும்போதும், இறைவனுடைய திருநாமம், நம் திருவாக்கில் வந்துகொண்டேயிருக்க வேண்டும். இறைவனுடைய திருநாமங்களை ஓதுவதால், நம் வாக்கு திருவாக்காக மாறும். இறைவனுடைய திருமேனி நம் ஹ்ருதயத்தில் பதிந்திருக்க வேண்டும்.

அடிமேல் அடி வைத்து நடக்க வேண்டும், கைகளை ஆட்டக் கூடாது, வாயில் திருநாமம் ஜபித்தபடி வலம்வர வேண்டும், உள்ளத்தில் இறைவனை ஆழ்ந்து எண்ணியபடி வலம்வர வேண்டும் - இப்படி நான்குவித அங்கங்களை உடையதாக ப்ரதக்ஷிணம் அமைய வேண்டும்.

ஆலய வழிபாட்டின் நான்காவது அங்கம் ஜபம்.



இறைவனை நன்றாக வழிபாடு செய்துவிட்டு, த்விஜ ஸ்தம்பம் என்று சொல்லக்கூடிய கொடிமரத்திற்கு அருகில், அல்லது அமைதியான சூழ்நிலை நிலவுகின்ற இடத்தில் அமர்ந்து, இறைவனுடைய திருநாமத்தை, திருமந்த்ரத்தை, நம்மால் இயன்ற அளவு ஓத வேண்டும்.

இயன்ற அளவு என்றால் சொன்னால் பலர் செய்யும் ஜப எண்ணிக்கை ஒன்றுக்கு போக மாட்டேன் என்கிறது! அதிகமாகப் போனால் பத்துமுறையே கூறுகிறோம். இயன்ற அளவில் என்றால் நூற்றியெட்டுக்குக் குறையாமல் என்று பொருள்.

நமக்கு ஜபிப்பதற்கு எளிதாக இருக்க வேண்டும் என்பதற்காகவே இறைவன் சிறுசிறு பெயர்களாக வைத்துக்கொண்டிருக்கிறார். ஆயிரம் தலைவாங்கி அபூர்வ சிந்தாமணி என்பதுபோல், பெரிதாக வைத்திருந்தால், நாம் அருகில் செல்லவே மாட்டோம்!

பெருமானுடைய திருநாமங்களை ஜபம் செய்வதற்குப் பல்வேறுவிதமான விதிமுறைகள் உள்ளன. அவற்றுள் எதாவது ஒரு முறையைக் கைக்கொண்டு, குறைந்தது, நூற்றியெட்டு முறை அந்த மந்த்ரத்தை ஜபம் செய்ய வேண்டும்.

ஐந்தாவதாக நமஸ்காரம்.

ஒவ்வொரு தேவதைக்கும் இத்தனை எண்ணிக்கை நமஸ்காரம் செய்ய வேண்டும் என்று விதிமுறைகள் உள்ளன. அவற்றை அறிந்து, அவற்றின்படி நமஸ்காரம் செய்ய வேண்டும். நமஸ்காரம் செய்து எழுந்தபிறகு, நம் உடலில் ஒட்டியிருக்கும் தூசிகளைத் தட்டக்கூடாது.

யாவந்தி பரமாணவா: தாவத் யுகஸஹஸ்ரேஷு சிவலோகே மஹீயதே।

ஆலயத்திற்குள் இருக்கின்ற தூசியில், எவ்வளவு துளிகள் நம் உடலில் ஒட்டியிருக்கின்றனவோ, அத்தனை ஆயிரம் ஆண்டுகள் நாம் சிவலோகத்தில் வாழும் பாக்கியம் பெறுவோம். சிவலோகம் என்றால் எதோ ஒரு உலகம், அங்கு செல்ல வேண்டும் என்று எண்ண வேண்டாம்.

இந்த உலகில் வாழும்போதே, நம் வாழ்க்கை சிவலோகத்தில் வாழ்வதுபோல் இருக்கும். புறச்சூழ்நிலைகளால் சிறிதளவும் பாதிக்கப்படாமல், சிவலோகத்தில் பெருமான் எப்படி உறைகின்றாரோ, அதே அளவு பூர்ண ஸ்வதந்த்ரத்துடன் நம்மால் வாழ முடியும்.

அப்படிப்பட்ட வாழ்க்கை வாழ்ந்த முன்னோர்களை நாம் கண்டிருக்கிறோம். இன்றும் அப்படிப்பட்டவர்கள் வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள்.

தர்சநம், ஸ்துதி, ப்ரதக்ஷிணம், ஜபம், நமஸ்காரம் என்ற ஐந்து அங்கங்களுடன் ஆலய வழிபாட்டைச் செய்வோமாக! பெருமானுடைய பரிபூரணமான அருள் எங்கும் நிறைந்திருக்கிறது. அதனைப் பெறுவதற்கான தகுதியை வளர்த்துக்கொள்வோமாக!

ஹர நம: பார்வதீ பதயே ஹர ஹர மஹாதேவ!

# THIRUCHENDUR VENDRIMALAI KAVIRAYAR

- ALAGAPPAN MUTHU -



"Man's world is God's gift. The Vatican, Jerusalem, our very own Kasi are bustling proof of that very fact. But seldom has there been a place so blessed as Tiruchendur. Nestled at the sea, Senthil Aandavar's temple has been sanctuary for countless patrons. The troubled heart finds solace with every inhale of the mystic air. Tiruchendur's history is rich and revered and in learning it, we are instilled with the fire of steadfast and strong belief. And the story of Vendrimalai Kavirayar, author of Tiruchendur Thalapuranam, is one of singular poignancy.

Two centuries ago, born to one of the many Thirisundarars whose lives were dedicated to performing God's work, his devotion for Subramania Swami was boundless. Alas, it left him with no room to stomach the learnings a boy was expected to master. His father, like all of his kind before him, wallowed from the grief of his son being illiterate. he was eventually entrusted with preparing prasadam for Lord Muruga, a task he readily took to. He was performing God's work, just like his father and just like his heart had always yearned for.

One day, ensnared deep in meditation, the author had forgotten to make the prasadam. His punishment was swift and severe. The poor man was beaten and then stripped of his duties, despite his pleading offers to remedy the situation immediately.

Heartbroken, he cried to his beloved Muruga as his legs carried him to the coast. 'I forgot because I was thinking of you, my Lord. And now, I have been thrown out of the temple



and I do not know what to do. Please just take me with you' He threw himself into the raging sea, his fondness for life extinguished.

But a great wave caught his flung body and safely returned him to the shore. He gazed down at his still live body and renewed his sobs, 'Am I not good for anything? I cannot even die and save myself this misery'

Just then an ethereal voice informed the weeping author that his life was far to precious to be wasted so. The voice announced he had been chosen to translate the history of this fair temple in Tamil, the very place from which he had been unceremoniously dislodged from, and spread the glory of his dear Subramaniar. He was to visit the home of Sevalur Sri Krishna Shastrigal and begin work right away so it could be placed at the Lord's feet at Tiruchendur and then presented to the world.

The bewildered devotee craned his neck, spinning around to see who had spoken.

There in the sky shone Arumuga Peruman himself, bestowing his blessing upon, Vendrimalai Kavirayar, who rejoiced with joyous tears sparkling in his eyes..

Swifter than wind, he traveled to Sevalur Sri Krishna Shastrigal's place, who had been blessed in his dreams by Subramaniar and told of the author's arrival and the two of them set out to compile the Tiruchendur Thalapuranam in Tamil. As Krishna Shastrigal explained the prose, a man with no formal education whatsoever, composed an epic so breathtaking, he moved the learned Sevalur Sri Krishna Shastrigal to tears, who graced him with the name **Vendrimalai Kavirayar.**

Sadly, narrowmindedness empowered the caretakers of the temple not to let a meager cook's writings to grace the sannithi. Kavirayar took the parchments and scattered them into the ocean, summoning the aid of his Lord Muruga to return the manuscript back to Tiruchendur and descended into a deep meditative state.

The book followed the current to Panaimuri and was taken under the care another passionate Muruga bakthar. Per the Lord's wish, he spread the stories far and wide. Indeed, when the great plague attacked Panaimuri, his street was left unharmed and became a safe haven for all the people of the island. The heartfelt musings of an illiterate man had saved an entire village from extinction. Such was the grace and glory of Tiruchendur's Subramania Swami.

Eventually the Tamil translated Tiruchendur Thalapuranam found its way back where it belonged and Vendrimalai Kavirayar was taken into the arms of his beloved Murugar himself.

VETRI VEL MURUGANUKKU AROHARA.





# RETURN TO THE SOURCE

**Dr. Naganathan, Johor Baru**

Certain questions have always troubled civilised men for ages: Is there a source for this universe and what am I doing here and what is my true goal of life. A great saint, Meikanda Deva observed that the universe represented by "he, she or it" undergoes birth, temporary existence and eventual decay i.e. the universe is in a continuous state of flux or change. And to account for this change there must be a substratum that never changes, forever existent "Sat", knowledge in its fullness "Chit" and absolute unequalled bliss "Ananda". The absolute reality thus took the eternal name: Sat Chit Ananda. In Saivite terms we call it "Para Siva".

We have to know the way we came to exist in this world before we know how to go back and further questions like why we should we go back needs to be answered. I will say about how we go back instead of how we came down. These paths we call them "tatwas".

1. Pancha Mahabhutas or Five Elements: earth, water, fire, air and ether (space).

2. Pancha Tanmatras or Five subtle elements: smell, taste, form, touch, sound. Each of these subte elements is related to the gross element like touch to air or taste to water.

3. Pancha kanmendriyas or Five organs of action: creative, excretion, foot, hand and speech.

4. Pancha jnanendriyas or Five organs of cognition: nose (smell), tongue (taste, eye (sight), skin (touch) and ear (hearing).

5. Antahkaranas or the internal organs: manas (mind), buddhi (intellect), ahamkara (individuated ego), and chitta (thought)

6. Prakriti (Nature) and Purusha (individual soul, unit consciousness or jiva)

Chanting His holy Name: OM Namasivaya a magical word of no equal ad preferably the mantra is given to you by an initiation process called "Diksa" by the Guru.



Lord Siva is easily pleased by simple acts of love like putting flowers or leaves like billva leaves.

Regular prayers, chanting His holy name, and finally meditating are sure means to the source. Prayer room be kept simple, clean, and private. Deity of choice takes the entire stage and not hang hundreds of pictures.

Right living, right food, right ideals, right wisdom and regular practice will guarantee you lord Siva's grace. Returning to the source or "moksha", liberation from the cycles of births and deaths will become achievable. Stick to one path as saint Thirugnanasambandar asserts in his very first song.

## READ THE LIVES OF SAINTS

The devotion shown to Lord Siva and His devotees is called "bhakhti"
Let us see examples of how they loved Lord Siva:
"Look at
love's marvellous ways:
if you shoot an arrow
plant it till no feather shows;
if you hug a body
bones must crunch and crumble;
weld, the welding must vansih
Love is then our lord's love" a song by Mahadeviakka (Kannada Virasaiva saint)

"The sacred ash is our mantra,
The ash covers the bodies of the gods;
the sacred ash is all beautiful things,
the ash is all that is praised.

The sacred ash is the tantra,
The ash is the core of our faith,
The sacred ash belongs to Lord Siva,
spouse of Uma of the red lips" a song by Jnanasambanthar, the blessed child saint.
It is obvious now that:

**FAITH OR DEVOTION TO THE LORD** is necessary

OM NAMASIVAAYA





# ஆடாய் ஊஞ்சல்

காப்பியக் கவிஞர் - கவிஞர் கோ - கவிமாமணி
நற்றமிழ் நாவலர் - நா. மீனவன் - கண்டரமாணிக்கம்

தென்பழனி மலையாண்டி தெய்வக் கோவே
திருச்செந்தூர் சாமிமலை இருந்து வாழும்
மின்பொலிந்த வேலுடையாய் செந்தூல் தன்னில்
மேன்மைபெறக் கோயில்கொண்ட தண்ட பாணி
அன்புதவழ் முகம்ஆறு கொண்ட வேலா
ஆண்டியெனத் தண்டூன்றி வந்த செவ்வேள்
நின்பதங்கள் தலைக்கொண்டோம் ஆடாய் ஊஞ்சல்
நீயிருக்க என்னகுறை ஆடாய் ஊஞ்சல்.

நல்லதமிழ் நக்கீரன் பாடி வைத்த
நல்லாற்றுப் படைநூலை நயந்த தேவா
சொல்லுதமிழ் அருணகிரி பாடி வைத்த
சுகமான சந்தங்கள் கேட்டாய் அன்று
கொல்லவந்த அவுணர்களைக் கொன்று தேவர்
குலங்காத்தாய் தண்டோடு செந்தூல் வந்தே
எல்லாமாய் இருப்பவன்நீ ஆடாய் ஊஞ்சல்
எங்களுயிர்த் துணைவாநீ ஆடாய் ஊஞ்சல்.

காவடியின் ஆட்டங்கள் ஒருபுறத்தில்
கணக்கில்லாப் பாற்குடங்கள் மறுபு றத்தில்
பாவடிகள் பலபடியாய்ப் பாடி யாடிப்
பன்னீரும் சந்தனமும் படிந்த வாசல்
மேவுவார் முகங்கண்டு மகிழும் வேலா
மேன்மைமிகு செந்தூல்வாழ் தண்ட பாணி
ஆவலுடன் பணிகின்றோம் ஆடாய் ஊஞ்சல்
அழகுபொலி கந்தாநீ ஆடாய் ஊஞ்சல்

தேமதுரப் பாட்டோசை தினமும் கேட்கும்
திகழ்கடப்பந் தார்தோளில் திகழ்ந்து தோன்றும்
சேமமுறக் கருதிடுவோர் குடிகள் எல்லாம்
செல்வமுடன் கீர்த்திபெற வைப்பாய் என்றும்
நாமமது சொல்வார்க்கு நலமே செய்யும்
நற்செந்தூல் நகருறையும் தண்ட பாணி
வாமிதிரு மகனாகி வளரும் கந்தா
வானவர்க்குத் தளபதியே ஆடாய் ஊஞ்சல்.

பவளமணிக் கால்நாட்டி மணிகள் வைத்துப்
பதித்துள்ள விட்டமது பாங்கே பூட்டித்
தவளநிற முத்தத்தால் கயிறு கோத்துத்
தவழ்ஒளிநேர் செம்மணியால் பலகை சேர்த்துத்



துவளிடையர் வடம்தொட்டு நின்றே யாட்டத்
துய்யபுகழ் தான்பாட ஆடாய் ஊஞ்சல்
குவளைவிழிக் கோதையுமை மகனே செல்வக்
குமராசெந் தூல்அரசே ஆடாய் ஊஞ்சல்.

காவலனே காலமெலாம் உன்னைப் பாடிக்
காவடிகள் தோள்சுமந்தார் கோடி கோடி
பாவலர்க்குப் படியளக்கும் பழனிக் கந்தா
பரிமளிக்கும் சந்தனங்கள் படிந்த மேனி
சேவலெனும் கொடியோடு தோகை ஏறிச்
செந்தமிழ்க்கு முதலானாய் எங்கள் தேவே
ஆவலுடன் செந்தூல்வாழ் தண்ட பாணி
ஆண்டவனே தாள்பணிந்தோம் ஆடாய் ஊஞ்சல்.

ஆறுபடை வீடுகளை ஆளும் தேவா
அவுணர்க்குக் காலன்என அமைந்த வேலா
கூறுபடை தாங்கிவரும் குமர வேளே
கோலமயில் தாங்கிவரும் கோலம் கண்டார்
வேறுபல காண்பாரோ நினது கீர்த்தி
வியப்பதனைத் திருப்புகழாய்ப் பாடக் கேட்ட
ஆறுதலைச் சிவன்மகனே ஆடாய் ஊஞ்சல்
அம்பிகையின் திருமகனே ஆடாய் ஊஞ்சல்

சட்டியிலே கொக்கவித்த சாமி நாதா
சண்முகமாம் தெய்வமணி உனது கால்கள்
விட்டுவிட மனமின்றிப் பற்றிக் கொண்டோம்
விழாமலிந்த செந்தூல்வாழ் வெற்றிவேலா
மட்டவிழும் வெட்சியணி மார்பா எங்கள்
மனக்கோயில் தனிலுறையும் தண்ட பாணி
எட்டுகுடி எண்கண்முதல் இடமாய்க் கொண்ட
இனியவனே யாம்வாழ ஆடாய் ஊஞ்சல்

தங்கத்தேர் ஏறிவரும் பழனியாண்டி
சரவணத்துத் தாமரையில் குழந்தை யாகி
இங்குதித்த திருக்குமரா இமய வெற்பில்
இருக்கின்ற சிவன்மகனே தண்டை பூண்ட
செங்கமல பாதங்கள் சிறப்போ பாடச்
சேவலுடன் மயிலாடச் சேர்ந்து தேவ
மங்கையர்கள் உடனாட ஆடாய் ஊஞ்சல்
மங்கலப்பண் இசைகேட்டே ஆடாய் ஊஞ்சல்.

படைக்கின்ற பிரமனுடன் கரிய மாலும்
பார்க்கின்ற தேவர்களும் உனது பார்வை
கிடைக்குமெனக் காத்திருக்கும் கணங்க ளோடு
கேடின்றி உலகத்தார் கூடி யாடிப்
படைசிறந்த வேலுடையாய் பதும பாதா
பார்புகழும் செந்தூல்வாழ் பழனி யாண்டி
விடையேறும் சிவன்மகனே ஆடாய் ஊஞ்சல்
விளங்குதமிழ்த் தெய்வமே ஆடாய் ஊஞ்சல்



# சி. சுப்பிரமணிய பாரதியார் பாடிய வாழ்த்துப் பா

மண்ணுலகின் மீதினிலே யெக்காலும்
அமரரைப் போல் மடிவில்லாமல்
திண்ணமுற வாழ்ந்திடலா மதற்குரிய
உபாயமிங்கு செப்பக்கேளீர்!
நண்ணரியெலாப் பொருளினிலு முட்பொருளாய்ச்
செய்கையெலாம் நடத்தும் வீறாய்த்
திண்ணரியநல் லறிவொளியாய்த் திகழுமொரு
பரம்பொருளை யகத்திற்சேர்த்து, (1)

செய்கை யெலா மதன்செய்கை, நினைவெல்லா
மதனினைவு, தெய்வமே நாம்
உய்கை யுற நாமாகி நமக்குள்ளே
யொளிர்வதென உறுதிகொண்டு
பொய், கயமை, சினம், சோம்பர், கவலை, மயல்
வீண்விருப்பம் புழுக்கம் அச்சம்
ஐயமெனும் பேயையெலாம் ஞானமெனும்
வாளாலே யறுத்துத் தள்ளி (2)



இடமிருந்து:
அ. மு. க. மு. க. கருப்பஞ்செட்டியார், தமிழ்க்கடல் ராய. சொ. மகாகவி சுப்ரமணிய பாரதியார்,
சொ. முருகப்பா, சி. நாரயணன் செட்டியார் நிற்பவர்: மு. நடராசன்
நாள்: 9-11-1919



எப்போது மானந்தச் சுடர்நிலையில்
வாழ்ந்துயிர்கட் கினிதுசெய்வோர்
தப்பாதே யிவ்வுலகி லமரநிலை
பெற்றிடுவார் சதுர் வேதங்கள்
மெய்ப்பான சாத்திரங்க ளெனுமிவற்றா
லிவ்வுண்மை விளங்கக்கூறும்
துப்பான மதத்தினையே ஹிந்துமத
மெனப்புவியோர் சொல்லுவாரே (3)



அருமையுறு பொருளிலெலா மிகவரிதாய்த்
தனைச்சாரும் அன்பர்க்கிங்கு,
பெருமையுறு வாழ்வளிக்கும் நற்றுணையாம்
இந்துமதப் பெற்றிதன்னைக்
கருதியதன் சொற்படியிங் கொழுகாத
மக்களெலாங் கவலை யென்னும்
ஒரு நரகக் குழியதனில் வீழ்ந்து தவித்
தழிகின்றா ரோய்விலாமே. (4)

இத்தகைய துயர் நீக்கிக் கிருதயுகந்
தனையுலகி லிசைக்கவல்ல
புத்தமுதாம் ஹிந்துமதப் பெருமைதனைப்
பாரறியப் புகட்டும் வண்ணம்
தத்துபுகழ் வளப்பாண்டி நாட்டினிற்
காரைக்குடியூர் தனிலேசால
உத்தமராந் தனவணிகர் குலத்துதித்த
இளைஞர்பலர் ஊக்கம் மிக்கார் (5)

உண்மையே தாரகமென் றுணர்ந்திட்டார்,
அன்பொன்றே யுறுதியென்பார்
வண்மையே குலதர்மமெனக் கொண்டார்
தொண்டொன்றே வழியாக் கண்டார்
ஒண்மை யுயர் கடவுளிடத் தன்புடையார்
அவ்வன்பின் ஊற்றத்தாலே
தின்மையுறும் ஹிந்துமத அபிமான
சங்கமொன்று சேர்த்திட்டாரே (6)

பலநூல்கள் பதிப்பித்தும், பல பெரியோர்
பிரசங்கம் பண்ணுவித்தும்,
நலமுடைய கலா சாலை, புத்தகசா
லைபலவும் நாட்டியுந்தங்
குலமுயர நகருயர நாடுயர வுழைக்கின்றார்;
கோடி மேன்மை
நிலைவுறஇச் சங்கத்தார் பல்லூழி
வாழ்ந்தொளிர்க நிலத்தின் மீதே! (7)

